# ஜமாஅத் அல் முஸ்லிமீன்!

**ஆரம்பத்தில் ஒன்றுபட்ட சமுதாயம் !**

நம்மைப் படைத்து, உணவளித்து, நிர்வகித்து, கண்காணித்துக் கொண்டிருக்கும் நமது எஜமானன் ஏகன் அல்லாஹ் தனது இறுதி வழிகாட்டல் நூல் அல்குர்ஆனின் அல்பகரா 2:213-ல் தெள்ளத் தெளிவாக நேரடியாக இவ்வாறு கூறுகிறான்:

**(ஆரம்பத்தில்) மனிதர்கள் ஒரே சமுதாயத்தினராகவே இருந் தனர். அல்லாஹ் நன்மாராயம் கூறுவோராகவும், அச்சமூட்டி எச்ச ரிக்கை செய்வோராகவும் நபிமார்களை அனுப்பி வைத்தான். அத் துடன் மனிதர்களிடையே ஏற்படும் கருத்து வேறுபாடுகளைத் தீர்த்து வைப்பதற்காக அவர்களுடன் உண்மையே நிறைந்த(நெறி காட் டும்) நூல்களையும் இறக்கி வைத்தான். எனினும், (நெறி காட்டும்) நூல்கள் கொடுக்கப்பட்டவர்கள், தெளிவான ஆதாரங்கள் வந்த பின்னரும், தம்மிடையே எழுந்த பொறாமையின் காரணமாக மாறுபட்டார்கள்; ஆயினும் அல்லாஹ் அவர்கள் மாறுபட்டுப் புறக் கணித்துவிட்ட உண்மையின் பக்கம் செல்லுமாறு நம்பிக்கைக் கொண்டோருக்குத் தன் அருளினால் நேர்வழி காட்டினான்; இவ் வாறே அல்லாஹ் தான் நாடியோரை நேர்வழியில் செலுத்துகிறான்.**
(2:213)

**புரோகிதர்களின் வசீகர வலை வீச்சு !**

மனித சமுதாயம் ஆரம்பத்தில் ஒன்றாக இருந்து தங்களுக்குள் உருவாகும் பொறாமை, அகந்தை, பேராசை காரணமாகப் பலவாறாகப் பிரிந்து விட்டார்கள் என்ற உண்மையை இந்த இறைவாக்கு உறுதிப் படுத்துகிறது. ஒரு நபியின் மறைவுக்குப் பின் அன்னார் உருவாக்கிய சமுதாயத்திற்குள் நுழைக்கப்பட்ட போலி மார்க்கத்தை(மதம்), தங்கள் பிழைப் புக்குப் பயன்படுத்திக் கொள்ளும் புரோகிதர்கள், அந்த நபியினால் ஒன்றுபடுத்தப்பட்ட சமுதாயத்தைப் பல வகுப்பினர்களாகப் பிரித்து உலகில் ஆதாயம் தேடி வந்தார்கள். இந்த நிலை ஏற்படும்போது மீண்டும் ஒரு நபியை அனுப்பி, அல்லாஹ் தான் நாடியோரை அந்த நபியின் தலைமையில் ஒன்றுபடுத்தியதாக அல்லாஹ்வே கூறுகிறான். (2:213). இந்த நபியும் மறைந்த பின் பழைய குருடி கதவைத் திறடி என்ற

கதைதான். இப்படித்தான் ஆரம்பத்தில் ஒரே சமுதாயமாக இருந்த மக்கள் பல பிரிவினர்களாக, பல மதத்தினராக, பல கோட்பாடுகளைப் பின்பற்றுபவர்களாக மாறி, படைத்த எஜமானன் ஆகிய ஏக இறைவனுக்கு இணைவைக்கும் பாதகர்களாகி விட்டனர். இந்தப் புரோகிதர்களுக்கு ஷைத்தான் துணை புரிவதால் அவர்கள் மக்களை கவர்ந்திழுத்து பல கோணல் வழிகளில் செலுத்தும் வாய்ப்புகள் அதிகரிக்கின்றன.

## மக்களிடையே காணப்படும் மதங்கள்!

கடவுளின் பெயரால் மக்கள் கடைபிடிக்கும் வணக்க வழிபாடுகள், சடங்கு சம்பிரதாயங்களை உள்ளடக்கிய கொள்கை ''மதம்'' என்று அழைக்கப்படுகிறது. அந்த அடிப்படையில் ஹிந்து மதம், முஸ்லிம் மதம், கிறித்தவ மதம், பௌத்த மதம், யூத மதம் என எண்ணற்ற மதங்கள் காணப்படுகின்றன.

மதங்கள் அனைத்தும் நல்லவற்றையே ஏவுகின்றன என்கின்றனர் பலர். எம்மதமும் சம்மதம் என்கின்றனர் சிலர். மதம் அபின் போன்று போதை தருவது; மனித நேயத்தைக் கெடுப்பது என்கின்றனர் நாத்திகர்கள். தமிழ் அகராதியில் பார்த்தால், மதம்-கொள்கை, அறிவு, கருத்து, கொழுப்பு, மகிழ்ச்சி, சமயம், உடன்பாடு, செருக்கு, தாது, நோக்கம், பெருமை, பைத்தியம், போதனை, பதினெண் குற்றத்துள் ஒன்று, யானை மதம், வலிமை, விருப்பம், வெறி, தேன், பெற்றதைப் பெரிதாக மதிப்பது என பல பொருள்கள் தரப்பட்டுள்ளன. (கழகத் தமிழ் அகராதி, 1980)

இவை அனைத்தும் சமுதாயத்தில் புழக்கத்தில் இருப்பதை வைத்து சொல்லப்படுவதே. இப்போது நமது சிந்தனையில் கொண்டு வரவேண்டியது, ஆதி மனிதரிலிருந்து, இறுதி இறைத்தூதர் வரை மனித சமுதாயத்தின் வாழ்க்கை நெறியாக, நன்நெறியாக நம்மைப் படைத்த இறைவனால் கொடுக்கப்பட்டு அரபி மொழியில் ''தீன்'' என்று சொல்லப்படுவதற்கு ''மதம்'' என்று சொல்லலாமா? என்பதே.

இறைத் தூதர்கள் மூலம் மனித சமுதாயத்திற்குக் கொடுக்கப்பட்டது தூய வாழ்க்கை நெறி-மார்க்கம் - நேர்வழி. இதையே பிழைப்பாகக் கொண்ட புரோகிதர்கள் பல கோணல் வழிகளாக்கி அவற்றிற்கே

''மதம்'' என்ற பெயரைச் சூட்டியுள்ளனர். இறைவன் அளித்த ஒரே நேர்வழியும், புரோகிதர்கள் தங்கள் வாழ்க்கை வளத்திற்காக தேர்ந்தெடுத்த பல கோணல் வழிகளும் சமமாக முடியுமா? ஒரு போதும் முடியாது.

எனவே இறைவன் அளித்த நேர்வழி-வாழ்க்கை நெறி-தூய மார்க்கத்தை ஒருபோதும் 'மதம்'' என்று சொல்லக் கூடாது. ஆனால் இறுதித் தூதருக்குப்பிறகு, சம்பூரணப்படுத்தப்பட்ட மார்க்கத்தில் (5:3) பதிந்து பாதுகாக்கப்பட்ட அல்குர்ஆன் இருக்கும் நிலையிலேயே, முஸ்லிம் சமுதாயத்திலும் திருட்டுத்தனமாகப் புகுந்து கொண்டு பல கோணல் வழிகளை உண்டாக்கியிருக்கிறார்கள் இந்தப் புரோகிதர்கள். அவற்றிற்கு முஸ்லிம் மதம் என்றோ, முஹம்மதிய மதம் என்றோ அவர்கள் சொல்லிக் கொள்வதை நாம் மறுக்க முடியாது.

அனைத்து சமூகங்களிலும்புரோகிதர்கள் உருவாக்கிய மதங்கள் அனைத்தும், நாத்திகர்கள் சொல்வது போல் அபினி போல் போதையைத் தருபவையே! வெறித் தனத்தையும், யானைக்குப் பிடிக்கும் மதத்தையும் கொழுப்பையும், செருக்கையும் தருபவையே என்பதில் நேர்வழி நடப்பவர்களுக்கு மாற்றுக் கருத்து இருக்க முடியாது.

ஆனால் இறைவனால் ஆதி மனிதரிலிருந்து இறுதித்தூதர்வரை மனித சமுதாயத்தின் நல்வாழ்வுக்காக, மகிழ்ச்சிக்காக, அமைதிக்காக, சாந்திக்காகக் கொடுக்கப்பட்ட ஒரே தூய வாழ்க்கை நெறியை-மார்க்கத்தை ஒரு போதும் மதம் என்று சொல்லக் கூடாது. முஸ்லிம்கள் இதில் மிகவும் எச்சரிக்கையாக இருக்க வேண்டும். இறைவன் மனித சமுதாயம் முழுமைக்கும் ஆரம்பத்திலிருந்து கொடுத்து தூய வாழ்க்கை நெறி-மார்க்கம் நேர்வழி. புரோகிதர்கள் தங்கள் நலனுக்காக கற்பனை செய்து உருவாக்கிக் கொண்டவை பல மதங்கள். கோணல்வழிகள் எனவே தீனுல் இஸ்லாம் என்ற இஸ்லாமிய மார்க்கம் ஒருபோதும் இஸ்லாமிய மதம் ஆகாது.

**ஆதி நபி முதல் இறுதி நபி வரை !**

இப்படியே முதல் நபி ஆதம்(அலை) அவர்கள் முதல் இறுதி நபி முஹம்மது(ஸல்) அவர்கள் வரை பல்லாயிரக்கணக்கான நபிமார்கள்

மனித சமுதாயத்தை ஒன்று படுத்தவும், படைத்த அந்த ஒரே இறைவனுக்கு மட்டுமே வழிபடச்செய்யவும் பெரும் முயற்சிகள் மேற்கொண்டார்கள். வழிகேட்டில் சென்ற எண்ணற்ற மக்கள் தொகையில் மிகமிகச் சொற்பமானவர்களே நபிமார்களின் நற்போதனையை ஏற்று நேர்வழிக்கு வந்தனர்.

**நபி இப்றாஹீம்(அலை) அவர்களின் சந்ததிகள்!**

நபி இப்றாஹீம்(அலை) அவர்களின் மகன் நபி இஸ்மாயீல் (அலை) அவர்களின் வம்சா வழியில் வந்த அரபு நாட்டினர், குறிப்பாக குறைஷ்கள் எந்த அளவு வழிகேட்டின் உச்சத்தில் இருந்தார்கள் என்பதை தெள்ளத் தெளிவாக அல்குர்ஆனும், ஆதாரபூர்வமான ஹதீஸ்களும் வெள்ளை வெளேர் என்று நமக்கு அறிவிக்கின்றன.

குறைஷ் குடும்பத்திலேயே பிறந்த இறுதி நபி முஹம்மது(ஸல்) அவர்களின் மட்டிட முடியாத தியாகங்கள், ஊண் உறக்கமில்லாத கடின உழைப்பு, நெருங்கிய உறவினர்கள் மூலம் ஏற்பட்ட கடுந்துன்பங்கள், ஊர் விலக்கி வைத்தது, ஊரை விட்டே விரட்டியடித்தது ஆகிய இத்தனையையும் பொறுமையாகச் சகித்துக்கொண்டு கொள்கையில் மிகமிக உறுதியாக நின்று, ஒப்பற்ற உழைப்பை ஈந்து அந்த மக்களை ஒரே தலைமை யில் ஒன்றுபடுத்தினார்கள். இதை மிக அழகாக அல்குர்ஆன் ஆலஇம் ரானில் அல்லாஹ் வர்ணிக்கிறான் பாருங்கள்.

"**நம்பிக்கை கொண்டோரே! நீங்கள் அல்லாஹ்வை அவனுக்குரிய விதத்தில் அஞ்ச வேண்டிய முறைப்படி அஞ்சியும், ஆதரவு வைக்க வேண்டிய முறைப்படி ஆதரவும்(தக்வா), வையுங்கள்? முஸ்லிம் களாக அன்றி நீங்கள் மரணிக்க வேண்டாம்.**" (3:102)

**இன்னும், நீங்கள் எல்லோரும் அல்லாஹ்வின் கயிற்றை (அல்குர்ஆனை) ஒன்றிணைந்து பற்றிப் பிடித்துக் கொள்ளுங்கள். நீங்கள் பிரிந்து விடாதீர்கள்; அல்லாஹ் உங்களுக்குக் கொடுத்த அருள்கொடைகளை(நிஃமத்) நினைத்துப் பாருங்கள். நீங்கள் பகைவர்களாய் இருந்தீர்கள். உங்கள் இதயங்களை அன்பினால் பிணைத்து, அவனது அருளால் நீங்கள் சகோதரர்களாய் ஆகிவிட்டீர்கள். இன்னும் நீங்கள் (நரக) நெருப்புக்குழியின் விளிம்பின் மீதிருந்தீர்கள்; அதிலிருந்து அவன் உங்களைக் காப்பாற்றினான்.**

**நீங்கள் நேர்வழி பெறும் பொருட்டு அல்லாஹ் இவ்வாறு தன் வசனங்களை உங்களுக்குத் தெளிவாக்குகிறான்.** (3:103)

**மேலும் (மக்களை) நன்மையின் பக்கம் அழைப்பவர்களாகவும், நல்லதைக் கொண்டு (மக்களை) ஏவுபவர்களாகவும், தீயதிலிருந்து (மக்களை) விலக்குபவர்களாகவும் உங்களிலிருந்து ஒரு கூட்டத்தார் இருக்கட்டும். அவர்களே வெற்றியாளர்கள்.** (3:104)

**(இறைவனின்) தெளிவான ஆதாரங்கள் தங்களிடம் வந்த பின்னரும், யார் தங்களுக்குள் பிரிவை உண்டு பண்ணிக்கொண்டு வேறுபட்டு விட்டார்களோ, அவர்கள் போன்று நீங்களும் ஆகி விடாதீர்கள்; அத்தகையோருக்குக் கடுமையான வேதனையுண்டு.** (3:105)

**இறையச்சமுடையோருக்கு இவை போதும்!**

மறுமையில் அல்லாஹ்வை சந்திப்போம்; நமது செயல்களுக் குரிய கூலியைப் பெற்றே தீருவோம் என்ற உறுதியான நம்பிக்கையுடன், அதாவது அஹ்ஜாப் 33:21 கூறுவதுபோல் அல்லாஹ்வின்மீதும், இறுதி நாளின் மீதும் நம்பிக்கை கொண்டு அல்லாஹ்வை அதிகம் நினைவு கூறு வோருக்கு, நபி வழி காட்டியபடி மேலே கண்ட நான்கு இறைவாக்கு களும் தாராளமாகப் போதும், 21:92, 23:52 இறைக் கட்டளைப்படி ஒன்றுபட்ட ஒரே சமுதாயத்தைப் பேணிப் பாதுகாத்திட. அல்ஃபுர்கான் 25:30-ல் நபி(ஸல்) முறையிடுவது போல் அல்லாஹ்வின் தெளிவான நேரடியான கட்டளைகளைப் புறக்கணிப்பவர்களே, தங்களின் அற்ப உலக ஆதாயத்திற்காகச் சமுதாயத்தைப் பிளவு படுத்துவார்கள்.

**முஸ்லிம்களின் வீழ்ச்சி!**

பலதரப்பட்ட புரோகித மவ்லவிகள் சமுதாயத்தை பல பிரிவினர் களாகப் பிளவு படுத்தியதின் விளைவாக இன்றைய முஸ்லிம் சமுதாயத்தினர், அல்லாஹ் 3:103-ல் கூறுவதுபோல் நரக நெருப்பின் விளிம்பில் நின்று கொண்டிருக்கிறார்கள். நபி(ஸல்) அவர்களின் மறைவுக்குப் பிறகு குறுகிய காலத்திலேயே ஆட்சி அதிகாரத்தைக் கைப்பற்றும் அற்ப ஆசையால் சமுதாயம் இரு கூறாகப் பிளவு பட்டது. அது கொள்கை அளவிலும் பிளவை ஏற்படுத்தியது. அப்போது தோன்றியதுதான் அஹ்ல சுன்னத், ஷீஆ பிரிவுகள். அதன் பின்னர் இந்த இரு பிரதான பிரிவுகளிலும், அற்ப உலக ஆசை காரணமாக மக்களிடையே அதிகாரம் செலுத்தும் பேராசையோடு பல உட்பிரிவுகள் தோன்றின. இப்படியே எண்ணற்ற பிரிவுகள் தோன்றி, சமுதாயம்

ஒட்டுமொத்தமாக பலம் இழந்து, இவ்வுலகிலும் அதலபாதாளத்தில் வீழ்ந்து கிடக்கிறார்கள். (பார்க்க 8:46) மற்ற மக்களால் நாயிலும் கேடாக மதிக்கப்படுகிறார்கள். நாளை மறுமையிலும் நரகிற்கு எரிகட்டை யாகக் காத்திருக்கிறார்கள். அந்த நிலவரங்களை குர்ஆன், ஹதீஸ் வெளிச்சத்தில் பார்ப்போம்.

**ஏனிந்த இழி நிலை !**

அகில உலகங்களையும், அனைத்துப் படைப்பினங்களையும், நம்மையும் படைத்து, உணவளித்து நம்மைக் கண்காணித்துக் கொண்டிருக்கும் (அந்நிஸா 4:1) நமது எஜமானனான அல்லாஹ்வுக்கு மட்டுமே முழுக்க முழுக்க அடி பணிய வேண்டிய நாம், அவனது கட்டளைகளுக்கு அணுவளவும் மாறுபடாது (அஹ்ஸாப் 33:36) நடக்க வேண்டும் என்பதை (முகல்லிது, தவ்ஹீத், ஜாக், ததஜ, முஜாஹித், ஸலஃபி) அனைதது புரோகித மவ்லவிகளும் கூட நேரடியாக மறுக்க முடியாது. ஆனால் இறைவனது நேரடிக் கட்டளைகளான அல்குர்ஆன் வசனங்களுக்கு இந்தப் புரோகிதர்கள் சுய விளக்கங்கள் கொடுத்து அவர்களை நம்பி அவர்கள் பின்னால் செல்லும் முஸ்லிம்களை வழிகெடுத்து நரகில் விழக்கூடியவர்களாக உருவாக்கி விடுகிறார்கள்.

அதேபோல (அல்ஹஜ் 28:78ல்) அல்லாஹ் சூட்டிய 'முஸ்லிமீன்' என்ற பெயரையும், நபிமார்களின் அழைப்புப் பணியில் ஈடுபடுபவர்கள் தங்களை 'முஸ்லிம்கள்' என சொல்லிக்கொள்ள வேண்டும். என அல்லாஹ் (ஹாமின் ஸஜ்தா 41:33ல்) இடும் நேரடிக் கட்டளையையும அல்குர்ஆனுக்கு (அந்நஹ்ல் 16:44, 64ன்படி) விளக்கம் அளிக்க உரிமம் தரப்பட நபி(ஸல்) அவர்கள் சூட்டிய 'ஜமாஅத் அல் முஸ்லிமீன்' என்ற பெயரையும் புரோகித மவ்லவிகள் தங்கள் சுய விளக்கங்கள் மூலம் நிராகரித்து பரிகாசம்பண்ணி வருகிறார்கள்.

(அல்பகரா 2:39, கஹ்ஃப் 18:105,106 ஃபுர்கான் 25:30)

**குழப்பங்கள் நிறைந்த காலத்தில் நமது கடமை !**

குழப்பங்கள் நிறைந்த காலகட்டத்தில், முஸ்லிம்கள் பல பிரிவினர்களாகி வழிகேட்டில் சென்று கொண்டிருக்கும் நிலையில், தாம் குர்ஆன், ஹதீஸில் இருந்தே எடுத்து கூறுகிறோம் என்று சொல்லியே ஒரு கூட்டம் நரகின் வாயிலுக்கு மக்களை அழைத்து சென்று விடுவர். அந்த அழைப்பை ஏற்பவர்கள் நரகில் எறியப்படுவார்கள் என்று

நபி(ஸல்) அவர்கள் கூறியபோது, ஹுதைஃபத்துல் யமான்(ரழி) அவர்கள் அப்படிப்பட்டவர்களின் வசீகர வலையில் சிக்காமல் இருக்க எனக்கு என்ன கட்டளையிடுகிறீர்கள் என்று கேட்டதற்கு, நபி(ஸல்) அவர்கள் "ஜமாஅத் அல் முஸ்லிமீனை"யும் அதன் "இமாமை"யும் பற்றிப்பிடித்துக் கொள்வீராக என தெளிவாக நேரடிக்கட்டளையாக தந்த பதில் (ஆங்கிலம்) புகாரீ மனாகிப் 4/803, ஃபிதன் 9/206 முஸ்லிம் இமாரா 3/4553, 4554, திர்மிதி ஃபித்ன் 57, இப்னு மாஜ்ஜா ஃபித்ன் 2/3979, தயாலிஸி 1/443 என ஐந்து நூல்களில் ஏழு இடங்களில் பதிவு செய்யப்பட்டு நமக்கு எச்சரிக்கையாக விளங்கிக் கொண்டிருக் கிறது.

அஹ்ஜாப் 33:21 இறைவாக்கு சொல்வது போல் அல்லாஹ் வையும், மறுமை நாளையும் உறுதியாக நம்பி, அல்லாஹ்வை அதிகமாக நினைவு கூர்வோருக்கு, அல்லாஹ்வின் தூதரிடம்தான் அழகிய முன்மாதிரி இருக்கிறது, அல்லாஹ்வின் தூதரைத் தவிர வேறு எவரையும் முன்மாதிரியாகக் கொள்ளக் கூடாது, அது பகிரங்கமான வழிகேடு (அஹ்ஜாப் 33:36); அது நரகில் கொண்டு சேர்க்கும் (33:66,67,68) என்பதிலும் உறுதியான நம்பிக்கையுடையவர்கள், தங்களின் பெயர் "முஸ்லிமீன்" தங்களின் இயக்கத்தின் பெயர் "ஜமாஅத் அல் முஸ்லிமீன்" என்பதில் மாற்றுக் கருத்துக் கொள்ளவே மாட்டார்கள். காரணம் இது அல்லாஹ்வும் அவனது தூதரும் தெளிவாக நேரடியாக இட்ட கட்டளை; இதில் வேறு அபிப்பிராயம் கொள்ளக் கூடாது என்பதில் உறுதியாக இருப்பார்கள். அப்படி வேறு அபிப்பிராயம் கொள்வதே சமுதாயப் பிளவுக்கு அடிப்படைக் காரணம் என்பதை உணர்ந்து அஞ்சி நடுங்கி, வேறு பெயரில் தங்களை அறிமுகப்படுத்திக் கொள்ள மாட்டார்கள்.

**மறுமையை மறந்தவர்கள் !**

மறுமையை மறந்து இவ்வுலகின் அற்ப சுகத்தில் மயங்கும் இந்த புரோகித மவ்லவிகள் இறைவனின் (22:78) கட்டளையிலும், இறைவனின் தூதரின் கட்டளையிலும் (புகாரீ, முஸ்லிம், திர்மிதி, இப்னு மாஜ்ஜா, தயாலிஸி) எப்படி சுய விளக்கத்தைப் புகுத்தி ஷைத்தானைப் பின்பற்றி நரகை நோக்கிச் செல்கிறார்கள் என்பதை விரிவாகப் பார்ப்போம்.

"முஸ்லிமீன்" (22:78, 41:33) என்பதும், "ஜமாஅத் அல்

முஸ்லிமீன்" என்பதும் அரபி மொழியில் இருக்கின்றன என்றும், அதை தமிழில் மொழி பெயர்த்து, "முற்றிலும் கட்டுப்பட்டு நடப்பவர்கள்" என்றும், "முற்றிலும் கட்டுப்பட்டு நடப்பவர்களின் கூட்டமைப்பு" என்றும் சொல்ல வேண்டும் எனவும் கூறுகிறார்கள். இப்படி மனோ இச்சைக்கு உட்பட்டு சுய விளக்கம் கொடுத்து, தங்களின் "அஹ்ல சுன்னத் வல் ஜமாஅத்" "ஜமியத் அஹ்லுல் குர்ஆன் வல் ஹதீஸ்" (ஜாக்) "தமிழ்நாடு தவ்ஹீத் ஜமாஅத்" (ததஜ) எனச் சமுதாயத்தில் பிளவு உண்டாக்கும் பிரிவுப் பெயர்களை நியாயப்படுத்தி வருகின்றனர். அவர்களின் பின்னால் செல்பவர்களும், ஆதம்(அலை) அவர்களுக்கு அல்லாஹ் நேரடியாக இட்ட கட்டளையை விட, ஷைத்தானின் வழிகெடுக்கும் போதனையே சிறந்தது என ஆதம்(அலை) அவர்களுக்கு அவர்களின் மன இச்சை கூறியது. அதை நம்பி செயல்பட்ட ஆதம்(அலை) வழிப் பிறழ்ந்தார்கள் (பார்க்க 7:20-22) இதேபோல அல்லாஹ்வு டையவும் நபி(ஸல்) அவர்களுடையவும் நேரடிக் கட்டளைகளை விட புரோகித மவ்லவிகளுடைய ஷைத்தானிய சுய விளக்கத்தை தங்களுடைய மனோ இச்சை அங்கீகரிப்பதால், அந்த மவ்லவிகளுடைய அடி வருடிகள், கண்மூடிப் பின்பற்றுகின்றனர்.

**சுயமாக சிந்தியுங்கள் !**

அல்லாஹ் சூட்டிய "முஸ்லிமீன்" என்ற பெயரிலும் (22:78; 41:33) நபி(ஸல்) அவர்கள் கடைபிடித்த "ஜமாஅத் அல் முஸ்லிமீன்" எனும், மக்களை ஒன்றுபடுத்திய உலகளாவிய பேரியக்கப் பெயரையும், அரபியிலிருந்து தமிழில் பெயர்க்க வேண்டும் என்று கோருகிறார்கள் புரோகித மவ்லவிகள். மேற்படி குர்ஆன் வசனங்களையும், ஹதீஸை யும் தமிழில் மொழி பெயர்த்தவர்கள் "முஸ்லிமீன்" மற்றும் "ஜமாஅத் அல் முஸ்லிமீன்" எனும் அரபி சொற்களையும் தமிழில் மொழி பெயர்க்காதது ஏன் என்ற கேள்வியையும் எழுப்புகிறார்கள். இதனால் அவர்கள் தம்மைத் தாமே குழப்பத்தில் ஆக்கிக் கொள்கிறார்கள். இவ்விதம் கூறும் தவ்ஹீத் புரோகித மவ்லவியின்(?) தில்லுமுல்லையும், ஆண வத்தையும், தலைக்கணத்தையும் அல்லாஹ்வுக்கே பாடம் புகட்டத் துணியும் மமதையையும் சிந்திப்பவர்கள் அறிந்து கொள்ள முடியும். (பார்க்க 42:21, 49:16)

**பெயர்களை மொழி பெயர்க்கிறார்களா?**

நடுநிலையோடு சிறிது நிதானமாகச் சிந்தியுங்கள். நாம் அந்நஜாத் பின்பக்க அட்டையில் தொடர்ந்து வெளியிட்டு வரும்

ஹதீஸில், "ஹுதைபத்துல் யமான்(ரழி)" என்ற நபி தோழரின் பெயரை மொழி பெயர்க்காமல் அரபியில் உள்ளது உள்ளபடியே எழுதியிருக் கிறோம். காரணம் ஒருவருடைய பெயர் எந்த மொழியில் சூட்டப்பட் டிருக்கிறதோ அதே வடிவில்தான் வேறு எந்த மொழியிலும் சொல்லப்பட வேண்டும். பெயரை ஒருபோதும் மொழி பெயர்க்கக் கூடாது. இந்த உண்மை மவ்லவி புரோகிதர்கள் அறியாததல்ல. இவ்வளவு ஏன்? இவர்களுடைய பெயர்களை எடுத்துக் கொள்ளுங்கள். ஷேக் அப்துல்லாஹ், கமாலுத்தீன், ஜைனுல் ஆப்தீன் போன்ற பெயர்களை அவர்களுக்கு அவர்களின் பெற்றோர்கள் அரபியில் சூட்டியதை அப்படியே உலகின் அனைத்து மொழிகளிலும் சொல்லுகிறார்களா? அல்லது மொழி பெயர்த்து சொல்லுகிறார்களா? நபி(ஸல்) அவர்களின் மறைவுக்குப் பின் இறைவெளிப்பாடு(வஹீ) முற்றுப்பெற்றது. அதற்குப் பின் பலவற்றிற்கும் மனிதர்கள் அவர்களுக்கு தோன்றியபடி இட்ட பெயர்களை அரபியில் உள்ளபடி சொல்லுகிறார்களா? மொழி பெயர்த்துச் சொல்லுகிறார்களா?

1988-ல் புரோகித மவ்லவிகள் தங்களுக்குச் சூட்டிக்கொண்ட ஜம்யியத்து அஹ்லுல்குர் ஆன் வல் ஹதீஸ்(ஜாக்) என்ற பெயரையும் 2005-ல் மற்றொரு இயக்கத்திற்குச் சூட்டிய தமிழ்நாடு தவ்ஹீத் ஜமாஅத்(ததஜ) என்ற பெயரையும் சூட்டியபடியே சொல்கிறார்களா? அல்லது அவற்றின் தமிழ் மொழி பெயர்ப்பைச் சொல்கிறார்களா? சிறிது சிந்தித்துப் பாருங்கள். மண்டூகங்களாக ஆகிவிடாமல் சிறிது சுய சிந்தனை செய்பவர்கள் நிச்சயம் எளிதாக உண்மையை விளங்க முடியும்.

ஹிஜ்ரி 400க்குப் பிறகு மனிதர்கள் தாங்களே சுயமாக சூட்டிக் கொண்ட பெயர்களை அப்படியே உச்சரிக்க வேண்டும். மொழி பெயர்க் கக் கூடாது. 1988-ல் இவர்களாகக் கற்பனை செய்து சூட்டிய பெயரான ''ஜம்யியத்து அஹ்லுல் குர்ஆன் வல்ஹதீஸை'' அப்படியே சொல்ல வேண்டும்; மொழிபெயர்க்கக் கூடாது. 2005-ல் இவர்களாக கற்பனை செய்து சூட்டிய பெயரான ''தமிழ்நாடு தவ்ஹீத் ஜமாஅத்தை'' அப்படியே சொல்ல வேண்டும்; மொழி பெயர்க்கக் கூடாது. சுமார் 50 அல்லது 60 ஆண்டுகளுக்கு முன்னர் இவர்களது பெற்றோர்கள் இவர்களுக்குச் சூட்டிய கமாலுத்தீன், ஜைனுல் ஆபிதீன் போன்ற பெயர்களை அரபி யில் அப்படியே சொல்ல வேண்டும்; தமிழில் மொழிபெயர்த்துச் சொல் லக்கூடாது; பெருங்குற்றம்.

## பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பு சூட்டப்பட்ட பெயர்!

ஆனால் 1429 ஆண்டுகளுக்கு முன்னர் இறைவனால் நிறைவு செய்யப்பட்டு வழங்கப்பட்ட இறுதி இறைவெளிப்பாடாகிய வழிகாட்டும் நூலில் மட்டுமல்லாமல், அதற்கும் பல்லாயிரம் ஆயிரம் ஆண்டு களுக்கு முன்பே அல்லாஹ் சூட்டியதாகக் கூறும் (22:78) முஸ்லிமீன் எனும் பெயரை, "முற்றிலும் கட்டுப்பட்டு நடப்பவர்கள்" என்றும், 1429 ஆண்டுகளுக்கு முன் இறைவனின் இறுதித் தூதர்(ஸல்) அவர்கள் அறிவுறுத்திக் கூறிய "ஜமாஅத் அல் முஸ்லிமீன்" எனும் பேரியக்கத் தின் பெயரை "முற்றிலும் கட்டுப்பட்டு நடப்பவர்களின் கூட்டமைப்பு" என்றும் தமிழில் மொழி பெயர்த்துச் சொல்ல வேண்டும் என்று கூறி முஸ்லிம்களை திசை திருப்பிவிட்டு வழி கெடுக்கும் முகல்லிது, மற்றும் தவ்ஹீத் புரோகித மவ்லவிகள் உண்மையில் இறையச்சம் உடையவர்கள் தாமா? அல்லது ஷைத்தானின் ஏஜெண்டுகளாக செயல்பட்டு முஸ்லிம்களை வழி கெடுப்பவர்களா? நடுநிலையோடு சிந்தியுங்கள். ஒரே உம்மத் (21:92, 23:52) என்ற அல்லாஹ்வின் நேரடி அறிவிப்பை நிராகரித்து விட்டு, சமுதாயத்தைப் பிளவுபடுத்தி, இவர்களாக மிகச் சமீப காலத்தில், தங்கள் விருப்பப்படி வைத்திருக்கும் ஜாக், ததஜ, முஜாஹித், ஸலஃபி போன்ற இயக்கப் பெயர்களுக்கு கொடுக்கும் மதிப்பைக் கூட நபி(ஸல்) அவர்கள், அல்லாஹ்வின் கட்டளைப்படி ஒரே உம்மத்தைப் பிளவு படுத் தாமல் பாதுகாத்து, அதன் அடிப்படையில் நடைமுறைப்படுத்திக் காட்டிய "ஜமாஅத் அல் முஸ்லிமீன்" என்ற உலகளாவிய பேரியக்கப் பெயருக்கு, இந்த புரோகித மவ்லவிகள் கொடுக்கத் தயாரில்லை என்றால் அதன் பொருள் என்ன? இவர்கள் ஷைத்தானின் நேரடி ஏஜண்டுகள் என்பதுதானே நபி(ஸல்) அவர்கள் நடைமுறைப் படுத்திக் காட்டிய பெயரையே இழிவு படுத்தும் இவர்கள் வேறு யாராக இருக்க முடியும்?

சுமார் 50 அல்லது 60 வருடங்களுக்கு முன்னர் இவர்களின் பெற்றோர்கள் இவர்களுக்குச் சூட்டிய கமாலுத்தீன், ஜைனுல் ஆபிதீன் போன்ற அரபி பெயர்களை தமிழில் மொழி பெயர்க்காமல் அப்படியே அழைத்து அப்பெயர்களுக்கு மதிப்பளிக்கிறார்கள். ஆனால் அல்லாஹ் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்பே அவனது அடியார்களுக்கு "முஸ்லிமீன்" என்று பெயரிட்டு அதனை நமக்கு 1429 ஆண்டுகளுக்கு முன் குர்ஆனில் அறிவித்தான். இந்த "முஸ்லிமீன்" எனும் பெயருக்கு தங்களின் சொந்தப் பெயர்களுக்கு அளிக்கும் மதிப்பைக் கூட தர

மறுக்கிறார்கள். அல்லாஹ் சூட்டிய "முஸ்லிமீன்" என்ற பெயரைவிட தாங்களாக சுயமே சூட்டிக் கொண்ட பெயர்களை மேன்மைப்படுத்தி அல்லாஹ்வையே இழிவுபடுத்தும் இந்த (தக்லீது, தவ்ஹீது, ஜாக், ததஜ, முஜாஹித், ஸலஃபி) புரோகித மவ்லவிகள் இறையச்சம் உடையவர்களா? ஷைத்தானின் நேரடி ஏஜண்டுகளா? நடுநிலையோடு சிந்தித்து முடிவு செய்யுங்கள். ஷைத்தானுடைய அனைத்து இழி குணங்களும் இந்தப் புரோகித மவ்லவிகளிடம் காணப்படுகிறதா? இல்லையா? நீங்களே முடிவு செய்யுங்கள்.

**இறுதி முடிவு!**

கேவலம் இவ்வுலகில் கிடைக்கும் அற்ப ஆதாயங்களுக்காக அல்லாஹ்வின் கட்டளையையும், அல்லாஹ்வின் தூதரின் கட்டளை யையும் துச்சமாக மதித்து தூக்கி எறியும் இந்தப் புரோகித மவ்லவிகள் (பார்க்க 25:30) ஒதுங்கும் இடத்தை நடுநிலையோடு, சுய சிந்தனை யோடு 2:39, 7:3, 18:102, 106, 33:21, 36, 66,67,68, 42:21, 49:16 இன்னும் இவை போல் பல அல்குர்ஆன் எச்சரிக்கைகளை வாசித்தால் நிச்சயமாக அறிந்து கொள்ள முடியும்.

**1986-ல் P.J. ஒப்புக்கொண்டு அறிவித்த உண்மை!**

இத்தனைக்கும் "**முஸ்லிம்**" அல்லாத பெயர் நமக்கு உரியது இல்லை; "**இஸ்லாம்**" அல்லாத இயக்கம் நமக்கு உரியது இல்லை; சமுதாயத்தை வழிகெடுக்கும் புரோகிதர்களை நாம் சப்ளை செய்வதில்லை என P.J.ஒப்புக்கொண்டு நம்மிடம் வாக்களித்து உறுதிப்படுத்தினார் என்பதற்கு நஜாத் ஜுன் 1986 பக்கம் 2சான்றாகும். **"புரோகிதர் முறையை மாற்றியமைத்து மக்கள் தாங்களே தங்களின் தீனுடைய காரியங்களை நடைமுறைப் படுத்தும் நிலைமைக்கு உயர வேண்டும் என்பதுதான் எங்களின் இலட்சியம்; நாங்கள் புரோகிதர்களை சப்ளை செய்வதில்லை" என்று எழுதி னார் மேலும், நஜாத் ஆகஸ்ட் 1986 பக்கம் 12-ல் "எங்களுக் கென்று இஸ்லாத்தை தவிர வேறு இயக்கம் இல்லை"என்று தான் ஆசிரியராக இருக்கும் போது P.J.யே வலிய எழுதி உறுதிப்படுத்தி யிருப்பது இதற்குப் போதிய ஆதாரமாகும்.**

இப்படி நம்மோடு இணைந்து மார்க்கப் பணிபுரிய வாக்களித்து 1986 ஏப்ரலில் வந்து நம்மோடு சேர்ந்தவர்கள்தாம் 1987-ஜுனில் இயக்கம் மூலம் உலக ஆதாயம் அடையும் தவறான நோக்கத்துடன்

வெளியேறி 1987 நவம்பரில் "அஹ்லுல்குர்ஆன் வல்ஹதீஸ்" இயக்கத்தை ஆரம்பித்தார்கள். 1988-ல் அதனை "ஜம்மியத்து அஹ்லுல் குர்ஆன் வல் ஹதீஸ்" என மாற்றி பின்னர் படிப்படியாக பல அமைப்புகள் கண்டு, தற்போது தமிழ்நாடு தவ்ஹீத் ஜமாஅத்(ததஜ) என முனைப்புடன் விளம்பரப்படுத்தி வருகிறார்கள்; சுவரொட்டி விளம்பரங்களை செய்து வருகிறார்கள். இன்னும் எத்தனை இயக்கங்களை காண இருக்கிறார்களோ? விளம்பரப்படுத்தப் போகிறார்களோ? அல்லாஹ்வுக்கே வெளிச்சம்.

1986-ல் இஸ்லாம் அல்லாத இயக்கத்தில் எங்களுக்கு உடந்பாடு இல்லை என்று பகிரங்கமாக ஊர் அறிய அறிவித்தவர்கள் 1987 லேயே அந்தர் பல்ட்டி அடித்து வேறு இயக்கம் காண முற்பட்டார்கள், கண்டார்கள். தங்களின் இயக்கத்தை நியாயப்படுத்த நான்கு அமர்வுகளில் பேசி பெரும் பாடுபட்டார்கள். 22:78-ல் அல்லாஹ் இந்த சமுதாயத்திற்குப் பெயர் சூட்டியதாகச் சொல்லவில்லை. முற்றிலும் கட்டுப்பட்டவர்கள் என்று சொன்னான் என வாதிட்டார்கள். முஸ்லிம்கள் என்பதை தமிழ் படுத்த வேண்டும் என்றார்கள்.

உங்கள் பெயர் என்ன? உங்கள் அமைப்பின் பெயர் என்ன? ஏன் அவற்றைத் தமிழ் படுத்தவில்லை என்று கேட்ட பின்னரே பதில் கூற வகையறியாது "ஜம்மியத் அஹ்லுல் குர்ஆன் வல்ஹதீஸ்" என்று கூறுவது தவறுதான் என ஒப்புக்கொண்டு, "இனிமேல் எங்களின் நிகழ்ச்சிகளில் அந்தப் பெயரை பயன் படுத்தமாட்டோம் என வாக்களித்தார்கள். "எங்கள் அமீரிடமும் இது விஷயமாக பேசி ஐந்தாவது அமர்வில் முடிவு செய்வோம்" என்று கூறிச் சென்றவர்கள், பலமுறை வற்புறுத் தியும் இறுதி (ஐந்தாவது) அமர்வுக்கு வராமல் காலம் கடத்தி சாதனை புரிந்து விட்டார்கள். இதற்கு ஆடியோ டேப் பதிவும் இருக்கிறது. அப் போது சகோதரர் ஹாமித் பக்ரியும் அவருடன் இணைந்து வாதித்து, பின்னர் ஒப்புக் கொண்டதற்கு சாட்சியாக இருக்கிறார்.

இயக்கம் மூலம் கிடைக்கும் உலக ஆதாயத்தை விட அரசியல் மூலம் அதிகம் கிடைக்கும் என்ற ஆசையில்தான் அங்கிருந்து தமுமுகவை சகோதரர் குனங்குடி ஹனீபா அவர்களிடமிருந்து வாங்கி, அதன் அமைப்பாளராக செயல்பட்டு, அதிலும் திருப்தி அடையாமல் இப்போது ததஜவை அரங்கேற்றியுள்ளார். இத்தனைப் பிளவுகளை, பிரிவுகளை ஏற்படுத்தியவர். தான், 1986-ல் இஸ்லாம் அல்லாத

இயக்கத்தில் எங்களுக்கு உடன்பாடு இல்லை என்று பகிரங்கமாக அறிவித்தவரும் ஆவார், இப்போது பிரிவுகள் இல்லாமல் இஸ்லாம் சாத்தியமே இல்லை என வாதிடுகிறார்.

அல்லாஹ்வே அல்குர்ஆனில் முஸ்லிம்கள் பல பிரிவினராகப் பிரிவார்கள் என பல இடங்களில் கூறியுள்ளான். நபி(ஸல்) அவர்களும் தமது உம்மத்து 73 பிரிவினர்களாகப் பிரிவார்கள் என முன்னறிவிப்புச் செய்துள்ளார்கள். இந்த நிலையில் பிரிவுகள் இல்லாத இஸ்லாத்தை-முஸ்லிம்களை பார்க்க முடியுமா? என வினா விடுக்கிறார். “ஜமாஅத் அல் முஸ்லிமீன்” என்றாலும் அதுவும் ஒரு பிரிவுதான், அபூ அப்தில் லாஹ்வின் ஜமாஅத் எனக் கூறி தனது பிரித்தாளும் சூழ்ச்சியை நியாயப்படுத்துகிறார். முஸ்லிம் வாலிபர்களும் அதில் மயங்கி இயக்கங்களையும், கழகங்களையும் ஏற்று அவர்கள் பின்னால் கண் மூடிச் செல்கின்றனர்; ஷைத்தானின் தூண்டுதலால் மனோ இச்சைக்கு அடிமையாகி விடுகிறார்கள்.

### சுவர்க்கத்திற்கென்று ஒரு சிறு கூட்டமே!

ஆம்! உண்மைதான், மக்களில் சுவர்க்கத்திற்கு உரியவர்கள் ஒரு சிறு கூட்டமும்; நரகத்திற்கு உரியவர்கள் பல பிரிவுகளில் பெருங் கூட்டமும் இருப்பது உண்மைதான். நரகை சென்றடைபவர்கள் பல பிரிவினர்களாகப் பிரியலாம். அது சாத்தியம்தான். ஆனால் சுவர்க் கத்தை அடைய விரும்புபவர்கள் ஒருபோதும் பல பிரிவினராக ஆக முடியாது. 10+11+15+20=56 என்று ஒரு விடையைத்தான் சரியெனச் சொல்ல முடியும்; தவறாக கூட்டுபவர்கள் 56 அல்லாத பல எண்ணிக் கைகளைச் சொல்ல முடியும். இது சாத்தியம்தான். அன்ஆம் 6:153 இறைவாக்கைப் படித்து உணர்கிறவர்கள் நேர்வழி ஒரே வழிதான். கோணல் வழிகள்தான் பல உண்டு என்ற உண்மையை உணர முடியும். தக்வா-பயபக்தி உடையவர்கள் மட்டுமே அந்த ஒரே நேர்வழியில் செல்ல முடியும். இதற்கு 33:21-ன்படி நபி(ஸல்) அவர்களிடம் அழகிய முன் மாதிரி இருக்கிறது.

### நபி(ஸல்) அவர்களின் முன்மாதிரி!

நபி(ஸல்) அவர்களது வாழ்நாளிலேயே, இன்றைய கபுரு வழி பாட்டில் மூழ்கி இருக்கும் முஸ்லிம்களை விட கேடுகெட்ட வழிகெட்ட முஸ்லிம்கள் இருக்கத்தான் செய்தார்கள். இன்றைய முஸ்லிம்கள் அல்லாஹ்வையும், அவனது தூதரையும், இறுதி வழி காட்டும் நூல்

அல்குர்ஆனையும் மனப்பூர்வமாக ஏற்றவர்கள். ஆனால் நபி(ஸல்) காலத்தில் இருந்த கேடுகெட்ட நயவஞ்சக முஸ்லிம்கள் நபியையும், அல்குர்ஆனையும் உளப்பூர்வமாக ஏற்காமல், நாவினால் ஏற்றுள்ள தாக நடித்தார்கள். இன்றைய முஸ்லிம்கள் செத்தவர்களின் கபுருகளில் தான் வழிபாடு செய்கின்றனர். நபி(ஸல்) காலத்து நயவஞ்சக முஸ்லிம் கள் லாத், மனாத், உஜ்ஜா போன்ற சிலைகளை வணங்கி வழிபட்டனர். அதனை நபி(ஸல்) அவர்களும் அன்றைய உண்மை முஸ்லிம்களும் தங்கள் கண்களால் பார்த்தார்கள். இன்றைய கபுரு வழிபாட்டு முஸ்லிம் களின் இறுதி முடிவை அல்லாஹ் இதுவரை அறிவிக்கவில்லை. ஆனால் நபி(ஸல்) அவர்களது காலத்தைய நயவஞ்சக முஸ்லிம்களின் இறுதி முடிவை அல்லாஹ் அல்குர்ஆனில் மிகத் தெளிவாக அறிவித்துள்ளான்.

**சிலை வணங்கி நயவஞ்சகர்களுக்கே குஃப்ர் ஃபத்வா கொடுக்க வில்லை!**

இந்த உண்மைகளை, அல்குர்ஆன் பகரா 2:8-20 9:68, 4:88,138,140,142,145 வசனங்களிலும் இன்னும் இவைபோல் பல இடங்களிலும் ஆக சுமார் 32 இடங்களில் நயவஞ்சகர்கள் பற்றி அல்லாஹ் கூறி இருப்பதை நடுநிலையோடு, சுய சிந்தனையோடு படித்து விளங்குகிறவர்கள் உணர முடியும். இன்றைய கபுரு வணங்கி முஸ்லிம்களைவிட மிகமிக கேடுகெட்ட நயவஞ்சக முஸ்லிம்களை நபி(ஸல்) அவர்கள் முஸ்லிம்கள் இல்லை காஃபிர்கள், முஷ்ரிக்குகள் என்று ஃபத்வா- தீர்ப்பு கொடுக்கவோ, அவர்கள் பின்னால் தொழக்கூடாது என ஃபத்வா-தீர்ப்புக் கொடுக்கவோ, அவர்களிலிருந்து உண்மை முஸ்லிம்களை வேறுபடுத்திக் காட்ட அல்லாஹ் சூட்டிய முஸ்லிம் அல்லாத பிரிதொரு பெயரை சுயமாக கற்பனை செய்து சூட்டவோ இல்லை. நபி(ஸல்) அவர்களது காலத்திலேயே நாளை மறுமையில் நரகின் அடித்தட்டில் கிடந்து வெந்து கரியாகும் நயவஞ்சகர் கள் வழிகெட்ட பிரிவுகளை உண்டாக்கியும், நபி (ஸல்) அதற்குப் போட்டியாக இன்னொரு பிரிவுப் பெயரை உண்டாக்கவில்லை. அதாவது வழிகெட்டுப் பிரிந்து சென்றவர்களின் இறுதி முடிவை 6:159 அல்லாஹ்வின் கட்டளைப்படி, தீர்ப்பளிக்கும் நாளின் எஜமானனான அவனிடமே ஒப்படைத்துவிட்டு, இவ்வுலகில் அவர்களையும் முஸ்லிம் கள் என்றே ஏற்று அல்லாஹ் 21:92, 23:52 இறைக்கட்டளைகளில் கூறி இருப்பது போல் ஒரே உம்மத்தாக முஸ்லிம் சமுதாயத்தைப் பாதுகாத்தார்கள்.

நாளை மறுமையில் நரகின் அடித்தட்டில் விழக்காத்திருக்கும் நயவஞ்சகர்களை நபி (ஸல்) அவர்கள் முஸ்லிமாக ஏற்றுக் கொண்டதால் நாளை மறுமையில் அல்லாஹ் மறந்தும் அவர்களை சுவர்க்கத்திற்கு அனுப்பி விடமாட்டான். அல்லாஹ் மறதியாளனோ தவறிழைப்பவனோ அல்ல. (பார்க்க. தாஹா 20:52)

அதே சமயம், தனக்கு மட்டுமே சொந்தமான தீர்ப்பளிக்கும் அதிகாரத்தில் நபிமார்களும் தலையிட அல்லாஹ் அனுமதிக்கவில்லை (பார்க்க. ஆல இம்ரான் 3:128)

மேலும் அன்ஆம் 6:159 இறை எச்சரிக்கையைப் படித்துப் பாருங்கள், அது வருமாறு:

**நபிக்கே கொடுக்கப்படாத அல்லாஹ்வின் தனி அதிகாரம்!**

**“நிச்சயமாக, எவர்கள் தங்களுடைய மார்க்கத்தைப் பிரித்து, பல பிரிவினர்களாகப் பிரிந்து விட்டனரோ அவர்களுடன் (நபியே!) உமக்கு எவ்வித சம்பந்தமும் இல்லை; அவர்களுடைய விஷயமெல்லாம் அல்லாஹ்விடமே உள்ளது; அவர்கள் செய்து கொண்டிருந்தவற்றைப் பற்றி முடிவில் அவனே அவர்களுக்கு அறிவிப்பான்.**” (6:159) (மேலும் பார்க்க 3:128)

பிரிந்து வழிகேட்டில் செல்பவர்களின் முடிவு அல்லாஹ்விடமே இருக்கிறது; அந்த முடிவை எடுக்கும் அதிகாரம் நமக்கு இல்லை; தீர்ப்பு அளிக்கும் அதிகாரம் அல்லாஹ்வுக்கு மட்டுமே. அவனே தீர்ப்பளிப்பதை மறுமைக்கென்று ஒத்தி வைத்திருக்கிறான் (பார்க்க 42:21) . தீர்ப்பு நாளின் முழு அதிகாரம் பெற்ற எஜமானன் அல்லாஹ் மட்டுமே என்று ஒவ்வொரு தொழுகையிலும் ஒவ்வொரு ரகாஅத்திலும் உறுதி கூறுகிறோம். (பார்க்க 1:3)

மேலும் யூஸுஃப் 12:40, துகான் 44:40, முர்சலாத் 77:12-15, 38, அந்நபா 78:17 வசனங்களில் காணப்பெறும் இறை எச்சரிக்கைகளை நடுநிலையோடு படித்துப் பார்ப்பவர்கள், அல்லாஹ்வுக்கு மட்டுமே சொந்தமான தீர்ப்பளிக்கும் அதிகாரத்தை தங்கள் கையில் எடுத்துக் கொள்ளத் துணிய மாட்டார்கள். இதில் நபிமார்கள், குறிப்பாக இறுதி நபி(ஸல்) அவர்கள் மிகமிக எச்சரிக்கையாக இருந்தார்கள். நபி(ஸல்) அவர்கள் காலத்தில், கபுரை வழிபடும் இன்றைய முஸ்லிம்களை விட மிகக் கேடுகெட்டவர் இல்லாமல் இல்லை. அவர்கள் அல்லாஹ்வையும் அவனது தூதரையும் இறுதி வழிகாட்டியாம்

நன்னெறி நூல் அல்குர்ஆனையும் மனப்பூர்வமாக ஏற்றுக் கொள்ளாமல் நுனி நாவால் ஏற்றதாக மொழிந்து நடித்தார்கள். குறைஷ் முஷ்ரிக்குகள் மற்றும் காஃபிர்களோடு சேர்ந்து கொண்டு லாத், மனாத், உஜ்ஜா சிலைகளை வணங்கி வழிபட்டார்கள். தங்கள் நாவினால் தங்களை முஸ்லிம்கள் என்று அஞ்சாமல் கூறிய நயவஞ்சகர்களாகிய இத்தகையவர்களையும் முஸ்லிம்களாகவே கருதி "உம்மத்தன் வாஹிதா" எனும் அல்லாஹ்வின் கூற்றை நிலைநாட்டினார் கள். இத்தனைக்கும் அவர்களின் உண்மை நிலையையும் இறுதி முடிவையும் அல்லாஹ் நபிக்கு வஹீ மூலம் அறிவித்து அவை அல்குர்ஆனில் இடம் பெற்றுள்ளன. நபி(ஸல்) அவர்களும், நபி தோழர்களும் அந்த நயவஞ்சகர்களின் சிலை வழிபாடுகளையும் மற்றும் அனைத்து ஷிர்க்கான, பித்அத்தான செயல்களையும் தங்களின் கண்களால் பார்த்துக் கொண்டுதான் இருந்தனர். இதற்கு 2:8-20 இறைவாக்குகளே போதிய ஆதாரமாகும்.

அவர்களின் செயல்பாடுகள் அனைத்தையும் தங்கள் கண்களால் பார்த்துக் கொண்டிருந்தும், நபி(ஸல்) அவர்களுக்கு, அந்த நயவஞ்சகர் கள் ஒரே நேர்வழியை விட்டு விட்டு கோணல் வழிகளில்-வழிகேட்டில் சென்று கொண்டிருந்தார்கள் என்பது நன்கு தெரிந்திருந்தும் அவர் களுக்கு குஃப்ர், முஷ்ரிக் பத்வா-தீர்ப்புக் கொடுக்கவில்லை; அவர்கள் பின்னால் தொழக் கூடாது என்று ஃபத்வா - தீர்ப்புக் கொடுக்கவில்லை. காரணம் அந்த அதிகாரம் தமக்கு இல்லை என்பதைத் தெளிவாக விளங்கி இருந்தார்கள். அல்லாஹ்வின் அந்த தனி அதிகாரத்தில் தலையிடுவது அல்லாஹ் 42:21-ல் எச்சரித்திருப்பது போல் மிகப் பெரும் இணை வைக்கும் குற்றம் என்பதை அறிந்து அல்லாஹ்வுக்கு அஞ்சி நடந்தார்கள்.

**படிப்பினை பெற வேண்டாமா?**

இதிலிருந்து நாம் பெறும் படிப்பினை என்ன? வழிகேட்டில் சென்று நரகில் விழும் வழிகேடர்கள் எத்தனை பிரிவுகளாகவும் பிரியலாம். ஒருவருக்கொருவர் குஃப்ர், ஷிர்க், ஃபத்வா-தீர்ப்பு கொடுக்கலாம். நேர்வழி நடப்பவர்களுக்கும் குஃப்ர்-ஷிர்க் ஃபத்வா-தீர்ப்பு கொடுக் கலாம். குஃப்ர், ஷிர்க் ஃபத்வா கொடுத்தோ கொடுக்காமலோ அவர்கள் பின்னால் நின்று தொழக் கூடாது; மீறித் தொழுதால் அந்தத் தொழுகை நிறை வேறாது என ஃபத்வா-தீர்ப்பு கொடுக்கலாம். வழிகேட்டுப் பிரிவினர் களின் இத்தகைய ஃபத்வாக்களின்படி இவ்வுலகில் ஒருவர்

கூட முஸ்லிம் இல்லை என்ற முடிவுக்கும் வரலாம்.(இதைத்தான் 1947-ல் முன்னாள் இந்தியப் பிரதமர் பண்டித ஜவஹர்லால் நேரு சுட்டிக் காட்டி முஸ்லிம்களைக் கொச்சைப்படுத்தினர்)

இதற்கெல்லாம் நேர்மாறாக, நேர்வழி நடப்பவர்கள் 21:92; 23:52 வசனங்களில் தரப்படும் இறைக்கட்டளைக்கு உகந்து நடப்பார்கள். முஸ்லிம்கள் என்று தங்களை சொல்லிக் கொள்பவர்களை, அவர்கள் மனப்பூர்வமாக சொன்னாலும், நாவளவில் நயவஞ்சகமாக சொன்னாலும், தர்கா வழிபாடு மட்டுமல்லாமல் சிலைகளையே வணங்கி வழிபட்டாலும், இவற்றை எல்லாம் கண்ணால் கண்டாலும், அவர்களுக்கு குஃப்ர், ஷிர்க் ஃபத்வா-தீர்ப்பு வழங்க மாட்டார்கள். இந்த நேர்வழி நடப்பவர்கள் அவர்களுக்கு பின்னால் நின்று தொழக்கூடாது என்றும் தீர்ப்பு வழங்க மாட்டார்கள். இது அல்லாஹ்வின் அதிகாரத்தில் தலையிடுவதாகும் என்று அவர்களுக்குத் தெரியும். மாறாக அவர்கள் வழிப்பிறழ்ந்து கோணல் வழியில் சென்று கொண்டிருப்பதை சுட்டிக் காட்டி, அவ்வழி நாளை மறுமையில் அவர்களுக்கு பெற்றுத்தறும் கொடிய தண்டனைகளை எடுத்துக் கூறி, அவர்களை எச்சரிப்பார்கள். நாளை மறுமைக்குரிய தீர்ப்பை அதற்குரிய எஜமானன் அல்லாஹ் விடம் விட்டு விட்டு, இவ்வுலகில் அவர்களையும் முஸ்லிம்களாக ஏற்று உம்மத்தன் வாஹிதாவை-ஒன்றுபட்ட ஒரே சமுதாயத்தை வழியுறுத்து வார்கள். சமுதாய ஒற்றுமையைக் காப்பாற்றுவார்கள். முஸ்லிம்களுக்குரிய உலகியல் உரிமைகளையும், ஆதாயங்களையும், பலன் களையும் அடைய வழி வகுப்பார்கள்.

**பள்ளியில் காஃபிர்கள், அரசியலில் முஸ்லிம்கள்!**

இதற்கு மாறாக பள்ளியில் தொழும் போதும், மற்றும் இஸ்லாமியக் கடமைகளைப் பொறுத்தவரையிலும் அவர்கள் காஃபிர்கள், முஷ்ரிக்குகள், அவர்கள் பின்னால் தொழக்கூடாது என்று ஃபத்வா-தீர்ப்புக் கொடுத்து ஒன்றுபட்ட ஒரே சமுதாயத்தைப் பிளவு படுத்துவார்கள். அதே சமயம் முறை தவறிய அரசியல் ஆர்ப்பாட்டங்கள், போராட்டங்கள், சாலை மறியல்கள் போன்ற நடவடிக்கைகளில் பள்ளிகளில் காஃபிராக மதிக்கப்பட்டவர்கள், முஷ்ரிக்காக்கப்பட்டவர்கள், அவர்கள் பின்னால் நின்று தொழக்கூடாது என்று ஃபத்வா கொடுக்கப்பட்டவர்கள் எல்லாம் முஸ்லிம்கள் ஆகி விடுகிறார்கள். அவர்களும் எங்களோடு முஸ்லிம்கள் என்ற நிலையில் இணைந்து அரசியலில் போராடலாம்

என்பது முனாஃபிக்தனமான- நயவஞ்சகத்தனமான ஃபத்வா-தீர்ப்பே அல்லவா?

உணர்வு ஏப்ரல் 04-10-2008 (உரிமை: 12, குரல் 31) வார இதழில் ஓர் அர்த்தமுள்ள கேள்விக்கு அபத்தமான பதிலைப் பாருங்கள்.

? ஏகத்துவத்தைப் பின்பற்றியவர்களை மட்டுமே முஸ்லிம்களாகக் கருதும் தாங்கள், ஒட்டுமொத்த முஸ்லிம்களுக்காகவும் இட ஒதுக்கீடு பெற்றுத் தந்தோம் எனக் கூறுவது எந்த வகையில் நியாயம்?

இந்தக் கேள்வியை தமுமுக துணை பொதுச் செயலாளர் ஜே.எஸ். ரிபாயி கேட்டுள்ளார். தங்களின் பதில் என்ன? கனி, கடையநல்லூர்.

! சமீப காலமாக வாத்தியாருக்கு தம்பியாக இவர் போட்டியாக முளைத்துள்ளார்.

நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் உண்மை முஸ்லிம்களை உருவாக்கவே வந்தார்கள். ஆயினும் முஸ்லிம்கள் என்ற பெயரில் உலகில் வாழும் முனாஃபிக்குகளுக்கும் கூட ஜகாத் உள்ளிட்ட சலுகைகளை வழங்கினார்கள்; போர்களுக்குக் கூட இஸ்லாமிய அணியில் முனாஃபிக்குகள் அழைத்துச் செல்லப்பட்டனர்.

இதனால் அவர்களை உண்மை முஸ்லிம்கள் என்று நபிகள் நாயகம்(ஸல்) அவர்கள் ஏற்றுக் கொண்டார்கள் என்று வாத்தியாரின் தம்பி கூறுவாரா?

உண்மை முஸ்லிம்கள் யார் என்பது வேறு; முஸ்லிம்கள் என்று சொல்லிக் கொள்வோரின் உரிமைகள் என்ன என்பது வேறு. இரண்டையும் குழப்பிக் கொள்ளத் தேவையில்லை.

இதுவே புரோகித தவ்ஹீத் மவ்லவி(?)யின் பதில். பதிலில் ஆணவமும், ஆத்திரமும் காணப்படுகிறதே அல்லாமல், முறைப்படி கேள்விக்குரிய பதிலாக இல்லை. "ஆத்திரக்காரனுக்கு புத்தி மட்டு" என்று சொல்வார்களே அதுவே இங்கு பிரதிபலிக்கிறது.

வாத்தியாருக்கு தம்பியாக முளைக்கலாம்; அல்லது வாத்தியாருக்கு போட்டியாக முளைக்கலாம். ஆனால் வாத்தியாருக்கு தம்பியாகவும், அதே சமயம் போட்டியாகவும் எப்படி முளைக்க முடியும்? பதிலின் ஆரம்பமே அண்ணனின் அவசர கோலத்தை புரிய வைப்பதை தம்பிமார்களால் உணர முடியவில்லையா?

முனாஃபிக்குகளுக்கு ஜகாத் உள்ளிட்டசலுகைகளை வழங்கிய தோடு, போர்களுக்கும் முஸ்லிம்களின் அணியில் சேர்க்கப்பட்டனர் என்பதை அவரே ஒப்புக் கொண்டுள்ளார். அப்படியானால் முஸ்லிம்கள் என்ற நிலையில் நபி(ஸல்) அவர்கள் அந்த நயவஞ்சகர்களை ஏற்றார் களா? அல்லது முஷ்ரிக், காஃபிர் என்ற நிலையில் ஏற்றார்களா? பதில் சொல்லுவரா தவ்ஹீத் மவ்லவி? உண்மை முஸ்லிம் வேறு; போலி நயவஞ்சக முஸ்லிம் வேறு என நபி(ஸல்) இவ்வுலகில் பிரித்து அடையாளம் காட்டியதாக இவரால் ஒரேயொரு ஆதாரபூர்வமான ஹதீஸையாவது காட்ட முடியுமா?

உண்மை முஸ்லிம்கள் யார் என்பது வேறு; முஸ்லிம்கள் என்று சொல்லிக் கொள்வோரின் உரிமைகள் என்ன என்பது வேறாம். இரண்டையும் போட்டு குழப்பிக் கொள்ள தேவையில்லையாம். இது வடி கட்டிய பிதற்றல் இல்லாமல் வேறு என்ன? உண்மை முஸ்லிம்கள் யார் என்று பிரித்துக்காட்ட, நபி(ஸல்) அவர்களுக்கு இல்லாத அதிகாரம் இவருக்கு எங்கிருந்து கிடைத்தது? அல்லாஹ்விடமிருந்து இவருக்கு வஹீ வருகிறதா? இந்தக் காலத்து நபியா(?) இவர்(நவூதுபில்லாஹ்).

ஜகாத்தைப் பெறுவதிலும், முஸ்லிம்களின் அணியுடன் இணைந்து போரில் கலந்து கொள்ளவும், இப்படி முஸ்லிம்களுக்குரிய அனைத்து உரிமைகளும் முனாஃபிக்குகளுக்கும் உண்டு என்ற நபி(ஸல்) அவர்களின் கட்டளையை ஒப்புக் கொள்ளும் இவர், வழிகேடன் இப்னுல் அரபியைப் போல், நபி(ஸல்) அவர்களை விட உயரிய பதவியில் இருப்ப தாகக் கனவு கண்டு கொண்டு அவர்களுக்குப் பின்னால் தொழக் கூடாது என்று ஃபத்வா கொடுக்கிறாரா?

**இதோ நபி(ஸல்) வழிகாட்டல்!**

**யார் நமது தொழுகையைத் தொழுகிறாரோ, நமது கிப்லாவை முன்னோக்குகிறாரோ, நாம் அறுத்ததைச் சாப்பிடுகிறாரோ அவர் முஸ்லிம்; அவர் அல்லாஹ்வினதும், அல்லாஹ்வின் தூதரினதும் பாதுகாப்பில் உள்ளார். எனவே இந்தப் பாதுகாப்பில் இருப்பவ ருக்கு நம்பிக்கைத் துரோகம் செய்வதன் மூலம் அல்லாஹ்வுக்கு நம்பிக்கைத் துரோகம் செய்யாதீர்கள்.**

அனஸ்(ரழி) புகாரீ, அபூதாவூத், திர்மிதி, இப்னு மாஜ்ஜா, தாரமி, அஹ்மத்)

இன்னொரு அறிவிப்பு இவ்வாறு நிறைவு செய்யப்பட்டுள்ளது.

**அப்படியானால் அவர் ஒரு முஸ்லிம்; மற்ற முஸ்லிம்களுக் கிருக்கும் அனைத்து உரிமைகளும் கடமைகளும் அவருக்கும் உண்டு.** (புகாரீ(ர.அ.) பாகம்1, ஹதீஸ் 391,392,393)

பரம்பரை பள்ளிகளின் இமாம்கள் பின்னால் தொழக் கூடாது என்று ஃபத்வா-தீர்ப்புக் கொடுப்பவர்கள் அல்லாஹ்வுக்கே நம்பிக்கைத் துரோகம் செய்யும் மாபாவிகளாகவும், 42:21-படி ஷிர்க் செய்யும் முஷ்ரிகீன்களாகவும் ஆகிறார்கள். இறைவனுக்கு இணை வைக்கும் குற்றத்தைச் செய்கிறார்கள்.

சமுதாயத்தைப் பிளவுபடுத்தி கூறு போட்டு, பல பிரிவுகளிலாக்கி, அற்ப உலக ஆதாயம் அடைவதைக் குறியாகக் கொண்ட வழிகேடர்கள் மட்டுமே இப்படிப்பட்ட முன்னுக்குப் பின் முரணான நயவஞ்சக முடிவை- ஃபத்வாவை- தீர்ப்பை அளிக்க முடியும்.

பொதுவாக முஸ்லிம் சமுதாயத்தில், பள்ளிவாசல் சம்பந்தப்பட்ட நடவடிக்கைகளில் முஸ்லிம்களை காஃபிர், முஷ்ரிக் என்று பிளவுபடுத்தி பிரித்தால்தான், தனிப்பள்ளி, தனி நிர்வாகம் உருவாக்கி ஆதிக்கம் செலுத்தி ஆதாயம் அடைய முடியும். ஆனால் அதற்கு மாறாக அரசியலில் அவர்களையும் முஸ்லிம்களாக ஏற்றுக் கொண்டதாக நடிப்பதால் மட்டுமே ஆதாயம் அடைய முடியும். எனவே இந்த தந்திரம்.

ஒன்றுபட்ட முஸ்லிம் உம்மத்தில் இருந்து வழிகெட்டுச் சென்று நரகில் விழ இருப்பவர்கள் பல பிரிவினராகப் பிரிந்து சென்றவர் களையும் நபி(ஸல்) அவர்கள், அத்தகையோரை முஸ்லிம்களாகவே ஏற்று அல்லாஹ் அறிவித்தபடி (21:92; 23:52) உம்மத்தன் வாஹிதாவை நிறுவினார்கள். இதையே பின்பற்றி, நேர்வழி நடந்து சுவர்க்கம் செல்ல விரும்புவோரும் அவ்விதமே நடந்து கொள்வார்கள். அல்லாஹ்வின் தனி அதிகாரத்தைத் தங்கள் கைகளில் எடுத்து தங்களை முஸ்லிம் என்று சொல்பவர்களை அவர்களின் நடத்தைக் காக குஃப்ர், ஷிர்க் ஃபத்வா - தீர்ப்புக் கொடுத்து தாங்களும் பிரிவு களுக்கு உள்ளாகி வழிகேட்டில் சென்று நரகில் விழ முற்பட மாட்டார்கள்.

## சமுதாய ஒற்றுமை சாத்தியமில்லை என்போர் யார்?

முஸ்லிம்கள் இவ்வுலகில் பல பிரிவினர்களாகி விடுவார்கள் என்று அல்குர்ஆனும், ஹதீஸ்களும் கூறுகின்றன. அல்லாஹ்வின் தீர்ப்பும்

(விதி) அப்படியே இருக்க, ஒன்றுபட்ட முஸ்லிம் சமுதாயம் எப்படி சாத்தியமாகும்? முஸ்லிம் சமுதாயம் ஒன்றுபடுவது சாத்தியமே இல்லை என்று கூறி, அல்லாஹ்வின் நேரடிக் கட்டளை 21:92, 23:52 இறைவாக்குகளை நிராகரிப்பவர்களும், ஜமாஅத் அல் முஸ்லிமீனும் ஒரு பிரிவுப் பெயர்தான், அதனால் சமுதாய ஒற்றுமை சாத்தியமே இல்லை என்று கூறி அதே இறைவாக்குகளை நிராகரிப்பவர்களும் தாங்கள் எந்த அளவில் வழிகேட்டில் இருக்கிறோம் என்பதை நடு நிலையோடு சிந்தித்தால் விளங்க முடியும். ஆனால் அவர்கள் அல்லாஹ்வையும், மறுமையையும் உறுதியாக நம்பி அல்லாஹ்வை அதிகமதிகம் நினைவு கூர்ந்து, ஐங்காலத் தொழுகைகளைப் பேணி அதனதன் நேரத்தில் தவறாது தொழுகிறவர்களாக இருக்க வேண்டும். தொழாதவன், மக்களுக்குக் காட்டுவதற்காகத் தொழுகிறவன், விட்டுவிட்டுத் தொழுகிறவன் குர்ஆன், ஹதீஸை சரியாக விளங்கி நடக்க முடியும் என்பது குதிரைக் கொம்பே. பட்டப்பகலில் வெள்ளைப் பசுமாட்டைப் பார்க்க முடியாத குருடன், இரவில் அதுவும் அமாவாசை இருட்டில் கருப்பு எருமை மாட்டைப் பார்த்ததாகச் சொன்னால் அதை நம்புகிறவன் எந்த அளவு மூடனாக இருப்பான் என்பதை நீங்களே முடிவு செய்து கொள்ளுங்கள். அது போன்றது தொழுகையற்றவன் மார்க்க சட்டம் பேசுவதும். சுமார் 75 இடங்களுக்கு மேலாக தொழுகை பற்றியும், சுமார் 55 இடங்களில் மார்க்கத்தைப் பிழைப்பாக்கக் கூடாது என்பது பற்றியும் குர்ஆனில் சொல்லி இருப்பதை விளங்காதவன் ஒருசில இடங்களில் சொல்லப்பட்டவற்றை விளங்க முடியுமா?

"முஸ்லிமீன்" என்று அல்லாஹ் இட்ட பெயரையும், "ஜமாஅத் அல் முஸ்லிமீன்" என்று நபி(ஸல்) அவர்கள் அறிவுறுத்திய ஜமாஅத் தையும் தமிழில் மொழிபெயர்க்க வேண்டும் என்று கூறிக்கொண்டு தங்களின் பெயரையும், தங்களின் பிரிவு இயக்கப் பெயரையும் தமிழில் மொழி பெயர்க்காமல் அப்படியே அரபியில் தக்கவைத்துக்கொண்டு, இருப்பவர்கள், தங்களை நம்பியுள்ள, அப்பாவி முஸ்லிம்களை ஏமாற்றி வழிகெடுக்கிறார்கள்.

**"ஜமாஅத் அல் முஸ்லிமீன் ''அபூ அப்தில்லாஹ்'' ஜமாஅத்தா?"**

முஸ்லிம் சமுதாயம் பிளவுபடுவது, பிரிவுகளாவது குர்ஆன், ஹதீஸ் கூறும் உண்மை; தக்தீரில் உள்ளது; ஒன்றுபட்ட முஸ்லிம் சமுதாயம் சாத்தியமே இல்லை என்று கூறி 21:92, 23:52 இறைவாக்கு களை நிராகரிப்பது, அதன் மூலம் அப்பாவி முஸ்லிம்களை வழிகெடுப்

பது போதாது என்று இன்னொரு தந்திரத்தையும் கைக்கொண்டு தங்கள் பின்னால் செல்லும் முஸ்லிம்களை, குறிப்பாக இளமை துடிப்புள்ள வாலிபர்களை அவர்களின் மனோ இச்சைக்கு ஏற்றவாறு வழிகெடுப்பவர்கள், அல்லாஹ் "முஸ்லிமீன்" என பெயரிட்டு, நபி(ஸல்) அறிவுறுத்திய "ஜமாஅத் அல்முஸ்லிமீன்"ஐ அபூஅப்தில்லாஹ்வின் பிரிவு ஜமாஅத் என அப்பட்டமாகப் பொய்கூறி அவர்களின் ஆதர வாளர்களை உண்மையை உணரவிடாமல் தடுக்கிறார்கள். அவர் களின் பின்னால் செல்லும் வாலிபர்களும் சிறிதும், அறிவோ, சுய சிந்தனையோ இன்றி கண்மூடி ஏற்று அதை அப்படியே மற்றவர்களிடம் ஒப்புவித்து வருகிறார்கள்.

அவர்கள் அல்குர்ஆனைப் படித்து பொருள் விளங்கி, சிந்தித்து புரிந்து கொள்வார்களானால் "முஸ்லிமீன்" என்பது அல்லாஹ் சூட்டிய பெயர். அதுவும் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால் அல்லாஹ் சூட்டியது என்று அறிந்து கொள்வார்கள் (பார்க்க 22:78). மார்க்கப் பிரசாரம் செய்பவர்கள் தங்களை முஸ்லிம்கள் என்று சொல்ல வேண்டும்; பிறிதொரு பெயரைத் தெரிவு செய்யக்கூடாது, விளம்பரப் படுத்தக் கூடாது என்பது அல்லாஹ்வின் நேரடிக் கட்டளை (பார்க்க 41:33) என்பதையும் தெளிவாக அறிந்து உணர முடியும். மேலும் அல்குர் ஆனில் 'முஸ்லிம்' எனும் சொல் சுமார் 37 இடங்களில் பிரயோகிக்கப் படுகிறது. நபிமார்கள் அனைவரும் தங்களை முஸ்லிம்கள் என்றே கூறி இருக்கி றார்கள். (பார்க்க. 2:133,136, 3:52,64,80,84,102, 5:111, 6:113, 7:126, 10:72, 84,90, 11:14, 15:2, 16:89,102, 21:108, 22:78, 27:31, 38:42,81,91, 28:53, 29:46, 30:53, 33:35, 39:12, 41:33,68, 46:15, 51:35, 68:35, 72:14.)

குழப்பங்கள் நிறைந்து, முஸ்லிம்கள் பல பிரிவுகளாக ஆகி வழி கேட்டில் செல்லும்போது, மனிதர்கள் உண்டாக்கிய எல்லா பிரிவுகளை விட்டும் விலகி-தௌபா செய்து "ஜமாஅத் அல் முஸ்லிமீன்"ஐயும் அதன் இமாமையும் பற்றிப் பிடித்துக்கொள்ள வேண்டும் என்பது நபி(ஸல்) அவர்களின் தெளிவான நேரடியான கட்டளை; பல ஹதீஸ் நூல்களில் காணப்படும் மிகமிக ஆதாரப்பூர்வமான ஹதீஸ்.

இந்த நிலையில் "ஜமாஅத் அல் முஸ்லிமீன்" அபூ அப்தில்லாஹ் வின் ஜமாஅத் என்று அவர்கள் கூறுவதாக இருந்தால் அவர்களுக்கு எந்த அளவு நெஞ்சழுத்தம் இருக்கும்? எந்த அளவு ஷைத்தான் அவர்களை ஆட்டிப்படைக்கிறான்? உண்மையிலே தக்வா-இறை யுணர்வு உடையவர்களுக்கு இப்படிப்பட்ட வழிகெட்ட சிந்தனை ஏற்பட

முடியுமா? மறுமையை அறவே மறந்து இவ்வுலகை நேசிப்பவர்களுக்கு மட்டுமே, பல குர்ஆன் வசனங்களை நிராகரித்தும், நபி(ஸல்) அவர்களின் கட்டளையை மறுத்தும் இப்படி முஸ்லிம்களை வழிகெடுக்கும் அசாத்திய துணிச்சல் ஏற்பட முடியும்.

**ஏனிந்த தந்திரம்?**

முஸ்லிம்கள் என்றழைக்கப்படவும், ஜமாஅத் அல் முஸ்லிமீன் என்றழைக்கப்படவும் ஆதாரமாக எண்ணற்ற குர்ஆன் வசனங்களும், ஹதீஸ்களும் இருக்கின்றன. அதற்கு மாறாக இவர்களின் ஜம்யியத் அஹ்லுல் குர்ஆன் வல்ஹதீஸ், தமிழ்நாடு தவ்ஹீத் ஜமாஅத், முஜாஹித் போன்ற இயக்கப் பெயர்களுக்கு குர்ஆன், ஹதீஸிலிருந்து ஒரேயொரு ஆதாரத்தையேனும் இவர்களால் தரமுடியாது. எனவே இந்தப் பெயர்கள்தான் அல்லாஹ்வின், அவனது தூதரின் அங்கீகார மில்லாத தூக்கி எறியப்பட வேண்டியவை. இவை இவர்களாக வைத்துக் கொண்ட இயக்கப் பெயர்கள். ஆனால் “ஜமாஅத் அல் முஸ்லிமீன்” அபூ அப்தில்லாஹ்வின் ஜமாஅத் அல்ல. அல்லாஹ்வும் அவனது தூதரும் அங்கீகரித்த ஜமாஅத் ஆகும்.

இப்படிப்பட்ட அராஜக வழியை புரோகித மவ்லவிகள் ஏன் கடை பிடிக்கிறார்கள் தெரியுமா? அவர்கள் ஷைத்தானின் தூண்டுதலால் தங்களின் மனோ இச்சைக்கு அடிமைப்பட்டு குர்ஆன் ஹதீஸுக்கு முரண்பட்டு தங்களின் விருப்பப்படி, ஜாக், ததஜ போன்ற பெயர்களில் எண்ணற்ற பிரிவுகளை உருவாக்கி விட்டார்கள்; அவற்றை அரசு அலுவலகங்களில் பதிவு செய்தும் கொண்டார்கள். அவை பித்அத்கள்– வழிகேடுகள் என்றாலும் தாங்கள் நேர்வழியில் செல்வதாகவே பிதற்றிக் கொண்டு மக்களையும் அவர்கள் தலைமையில் ஒன்றுபட அழைப்பு விடுக்கிறார்கள். அதேபோல நாமும் “ஜமாஅத் அல் முஸ்லிமீனை” நமது விருப்பத்தின்படி அமைத்து, பதிவு செய்து, முஸ்லிம்களை எமது தலைமையில் அந்த ஜமாஅத்தில் இணைந்து ஒன்றுபடும்படி அழைப்பதாகக் கூறி அவர்களின் பக்தகோடிகளை நம்பச் செய்கிறார்கள். அல்லாஹ் பல்லாயிரக்கணக்கான ஆண்டு களுக்கு முன்னரே முஸ்லிமீன் என்று அவனது அடியார்களுக்குப் பெயரிட்டு விட்டான். 1429 ஆண்டுகளுக்கு முன் நபி(ஸல்) அவர்களும் அதையே “ஜமாஅத் அல் முஸ்லிமீன்” என்ற ழைத்தார்கள். அது அல்லாத வேறு கூட்டங்களோடு (ஜாக், ததஜ போன்ற இயக்கங்களோடு) இணைய வேண்டாமென்றும் அவற்றை விட்டு விலகி இருக்கும்படியும்

ஆணையிட்டார்கள். இதை எல்லாம் நிரா கரித்து தங்களின் பக்தகோடிகளை ஏமாற்றித் தங்களுடன் தக்க வைத்தக் கொள்ள "ஜமாஅத் அல் முஸ்லிமீன்"அபூ அப்தில்லாஹ்வின் "ஜமாஅத்" எனப் பிதற்றுகிறார்கள்.

"ஜமாஅத் அல் முஸ்லிமீன்" எமது கற்பனையில் உதித்து அதை அரசில் பதிவு செய்து உரிமை பாராட்டிக்கொண்டு, நாம்தான் இந்த ஜமாஅத்தின் ஆயுட்கால அமீர், எமது தலைமையில் அனைவரும் ஒன்றுபட வேண்டும் என்று என்றுமே கூறியதில்லை. இலங்கை உமர் அலி போன்றோர் தம்மிடம் பைஅத் செய்து தம் தலைமையில் இருப் போர் மட்டுமே முஸ்லிம்கள்; மற்றவர்கள் அனைவரும் காஃபிர்கள், அவர்கள் பின்னால் நின்று தொழக் கூடாது. அந்த தொழுகை நிறைவேறாது என்று கூறி வருவது போல் நாம் என்றுமே கூறியதில்லை.

**நமது நிலை!**

நமது நிலை ஆரம்பத்திலிருந்து மிகத் தெளிவாகவே உள்ளது. சுமார் 25 ஆண்டுகளுக்கு முன் நபி(ஸல்) காட்டித்தந்த நபிவழி தொழுகை பற்றி அறியோம். ஹனஃபி தொழுகை , ஷாஃபி தொழுகை, மாலிக்கி தொழுகை, ஹன்பலி தொழுகை, முஜாஹித் தொழுகை, அஹ்ல ஹதீஸ் தொழுகை, ஸலஃபி தொழுகை, என்றே முஸ்லிம்கள் அழைத்து வந்தனர். நபிவழித் தொழுகை நடைமுறைப் படுத்தப்பட வில்லை. ஆனால் இன்றோ நாம் நபிவழித் தொழுகையை நடைமுறைப்படுத்தி வருகிறோம். இதேபோல் "ஜமாஅத் அல் முஸ்லிமீன்" என்று ஒன்றுபட்ட ஒரே சமுதாயம்–"உம்மத்தன் வாஹிதா"வும் நடைமுறையில் இருந்ததில்லை, தில்க்கல் ஃபிர்க்கா– அனைத்துப் பிரிவுகளை விட்டும் விலகிவிடு என்று நபி(ஸல்) அவர்களின் கடுமையான எச்சரிக்கைக்கு உள்ளான பிரிவுகள்தான் முஸ்லிம் சமுதாயத்தை ஆட்டிப்படைக்கின்றன. அல்குர்ஆனை பொருள் அறிந்து படிக்காமல் – குர்ஆன் அரபி மொழி தெரியாதவர் களுக்கு விளங்காது என்ற புரோகித மவ்லவிகளின் சுய நல போத னையை அப்படியே குருட்டுத்தனமாக நம்பியதால், எமது 21–வது வயதிலிருந்து 42–வது வயது வரை குர்ஆனை கிளிப்பிள்ளை பாடமாக தினசரி ஒரு பாகம் (ஜுஸ்வு) ஓதி வந்தோம். அப்போது ஷாஃபி மத்ஹபை பின்பற்றி, தப்லீக் பணியில் முழு மூச்சாக ஈடுபட்டிருந்தோம்.

பெரியார்கள், நாதாக்கள், அவுலியாக்கள் என்று பெரிதும்

புகழப்பட்டு பாராட்டப்பட்டு வந்தவர்களின் ஒழுக்கமற்ற செயல் பாடுகளை கவனித்த பின்னரே தீவிரமாக சிந்திக்க ஆரம் பித்தோம். அந்த இழி செயலில் ஈடுபட்ட பள்ளி இமாமாகிய புரோகித மவ்லவி அது அவுலியாக் களின் செயல் எனப் பிதற்றியது எம்மை மேலும் தீவிரமாக சிந்திக்க வைத்தது. தைரியத்தையும், தன்னம்பிக்கையையும் வளர்த்துக் கொண்டு அல்குர்ஆன் தமிழ்மொழி பெயர்ப்புகளை படித்து ஆராய ஆரம்பித்தோம். அப்போதுதான் இந்தப் புரோகித மவ்லவிகளின் செயல்பாடுகள் அல்குர்ஆனுக்கு முற்றிலும் முரணா னவை என்பது தெரிய வந்தது.

**அனைத்து மதப் புரோகிதர்களும் ஒரே குட்டையில் ஊறிய மட்டைகளே!**

ஹிந்துக்கள் தங்களின் மத குருமார்களை தெய்வாம்சம் பொருந்தியவர்களாக கருதி பல தெய்வ அவதாரத்தில் நம்பிக்கை கொண்டு வழிபடுவது போல், கிறிஸ்தவர்கள் தங்களின் மத குருமார் கள் திரித்துவ அடிப்படையில் தெய்வாம்சம் பொருந்தியவர்கள் என நம்பி வழிபடுவதுபோல், முஸ்லிம்களின் மத குருமார்களாக பீற்றும் இந்த மவ்லவி புரோகிதர்களும் அத்வைதம்–வஹ்தத்துல் உஜூது அடிப் படையில் தெய்வாம்சம் பொருந்தியவர்களாக நம்பப்பட்டு வருகிறார்கள் என்பதை அறிய முடிந்தது. அதனால் தான் ஹழ்ரத்–ஹஜ்ரத், மவ்லவி, மவ்லானா என்ற பெயர்களில் தங்களை இறைவனோடு சம்பந்தப் படுத்தி அறிமுகப்படுத்துகிறார்கள் என்ற உண்மையையும் அறிய முடிந்தது.

அனைத்து மதங்களின் மத குருமார்களிடம் காணப்படும் பலவித ஒழுக்கக் கேடுகளும் ஊடகங்களில் வெளிச்சத்திற்கு வந்து கொண்டிருக் கின்றன.

இந்த மவ்லவி புரோகிதர்களே முஸ்லிம் சமுதாயத்தைப் பல கூறுகளாக பிளவு படுத்தி– பல பிரிவினர்களாக்கி அற்ப உலக ஆதாயம் அடைந்து வருகிறார்கள் என்ற உண்மையும் புலப்பட்டது. இவை அனைத்தும் நமது அறிவுக்கு எட்டியவுடன் தமிழகத்திலுள்ள மதரஸாக்களுக்கும், பிரபல மவ்லவிகளுக்கும் விளக்கம் கேட்டு 11.5.1985–ல் கடிதம் எழுதினோம். எந்த மதரஸாவிலிருந்தும், எந்த மவ்லவியிடமிருந்தும் எவ்வித பதிலும் வரவில்லை.

## சமுதாயத்தை பிளப்போர் நேர்வழியில் இல்லை!

குர்ஆன், ஹதீஸ் வெளிச்சத்தில் பிளவுகளுக்கும், பிரிவுகளுக்கும் அணுவளவும் இஸ்லாத்தில் அனுமதி இல்லை என்பதையும், மனிதர்கள் கற்பனை செய்துள்ள எந்தப் பிரிவிலும் இருக்கக் கூடாது; அப்படிப்பட்ட பிரிவுகளை விட்டும் கண்டிப்பாக விலகிவிட வேண்டும் என்ற, நபி(ஸல்) அவர்களின் கட்டளையும் மேலும் நம்மை தீவிரமாக சிந்திக்க வைத்தது. இஸ்லாமிய அமைப்புகள் அனைத்தையும் மிகத் தீவிரமாக அலசினோம். மத்ஹபு பிரிவுகள், தரீக்கா பிரிவுகள் அத்துவைதம்-வஹ்தத்துல் உஜூது என இறைவனுக்கு இணை வைக்கும் வழிகேடு, மாற்று மதங்களில் காணப்படும் இணை வைக்கும் கொள்கை அடிப்படையிலானவை என அறிந்து ஷாஃபி மத்ஹபி லிருந்து அல்லாஹ்விடம் தௌபா செய்து மீண்டதோடு, அனைத்துப் பிரிவுகளையும் புறக்கணித்து விட்டோம். இறைவனுக்கு இணை வைக்கும் இந்த மத்ஹபு பிரிவுகளுக்கும் மரியாதைக்குரிய அந்த நான்கு இமாம்களுக்கும் அணுவளவும் சம்பந்தமில்லை. பவுல் என்பவர் ஈசா(அலை) அவர்களுக்குப் பிறகு, அவர்களின் பெயரால் திரித்துவ கிறிஸ்தவ மதத்தை உருவாக்கியது போல், அந்த நான்கு இமாம்களுக்குப் பிறகு வந்த சில கயவர்கள், இஸ்லாத்தில் இணை வைக்கும் கொடிய கொள்கையை அந்த இமாம்களின் பெயரால் உருவாக்கி உள்ளனர் என்பதையும் அறிந்தோம்.

இதில் பெரிய வேடிக்கை, ஈஸா(அலை) அவர்கள் போதித்த தூய இஸ்லாம் மார்க்கத்தை திரித்துவ இணை வைக்கும் கிறிஸ்தவ மதமாக திரித்தவர் பவுல் என்பது உலகறிந்த உண்மை. ஆனால் இறுதி நபி முஹம்மது(ஸல்) அவர்கள் போதித்து இறைவனால் நிறைவு செய்யப் பட்ட தூய இஸ்லாமிய மார்க்கத்தை -ஏகன் இறைவனுக்கு இணை வைக்கும் முஹம்மதிய மதமாக-நான்கு மத்ஹபுகளாக உருவாக்கிய வர்கள் யாரென்றே அறிய முடியவில்லை. பிக்ஹு நூல்களிலும், தஃப்ஸீர்களிலும் காணப்படும் கட்டுக்கதைகள், அசிங்கங்கள், அபாண்டங்கள் இவற்றை ஆய்வு செய்யும்போது, அவை அனைத்தும் இஸ்ராயிலியத்-அதாவது யூத, கிறிஸ்தவ மதங்களிலிருந்து படி எடுக்கப்பட்டவை(**Copy**) எனத் தெரிய வருகிறது. எனவே மத்ஹபு களைக் கற்பனை செய்தவர்கள் யூதக் கைக் கூலிகள் என்பதும், மக்களை ஏமாற்றி வயிறு வளர்க்க முஸ்லிம் மதப் புரோகிதர்களுக்கு இது நல்லதொரு வாய்ப்பாக இருக்கிறது என்பதால் இந்தப் புரோகித மவ்லவிகள், இந்த மத்ஹபுகளை விட்டுவிடாது குரங்குப்பிடியாகப்

பிடித்திருக்கிறார்கள் என்பதும் எம்மை அதிர்ச்சிக்குள்ளாக்கியது.

மரியாதைக்குரிய அந்த நான்கு இமாம்களின் முன்னெச்சரிக் கைகள் எமது இந்த கூற்றை உறுதிப்படுத்துகின்றன. அவை வருமாறு:

## நான்கு இமாம்களின் எச்சரிக்கைகள்!

**1. இமாம் அபூஹனீபா(ரஹ்) கூறுகிறார்கள்**

إذا صح الحديث فهو مذهبي

ஹதீஸ் சஹீஹாக (ஆதாரப் பூர்வமாக) கிடைக்கும் போது அதை பின்பற்றுவதே எனது வழியாகும்.

ஆதாரம் : ஹாஷியா இப்னுல் ஆபிதீன், பாகம்1, பக்கம் 63 ரஸ்முல் முப்தீ பாகம் 1, பக்கம் 4 ஈகாமுல் ஹிமம் பக்கம் 62

لا يحـــل لأحـــد أن يـــأ خذ بقولنا مـــالم يعلم من إين أخذناه

எந்த ஆதாரத்தின் அடிப்படையில் நாம் முடிவு செய்தோம் என்பதை அறியாமல் எமது சொல்லை நடைமுறைப் படுத்துவது எவருக்கும் ஹலால் அன்று

ஆதாரம் : அல்இன்திகா பக்கம் 145 ஹாஷியா இப்னுல் ஆபிதீன் பாகம் 6, பக்கம்293 ரஸ்மூல் முப்தீ பக்கம் 29, 32

وفي رواية حرام على من لم يعرف دليلي أن يفتي بكلامي

என்னுடைய ஆதாரத்தை அறியாதவன், என் சொல்லைக் கொண்டு ஃபத்வா கொடுப்பது ஹராமாகும்.

ஆதாரம் : மீஸான் ஷஃரானி பாகம் 1, பக்கம் 55

زاد في رواية فإننا بشرفقول القول اليوم ونرجع عنه غداً

நாங்கள் இன்று ஒரு சொல்லைச் சொல்லி விட்டு, நாளை அதைத் திரும்பப் பெற்றுக் கொள்கின்ற மனிதர்கள்தாம்.

ஆதாரம்: மீஸான் ஷஃரானி, பாகம் 1, பக்கம்55

وفي أخرى ويحك يا يعقوب ﴿هوأبو يوسف﴾ لا تكتب كل ما تسمع مني فإني قد أرى الرأي اليوم وأتركه غداً وأرى الرأي غداً وأتركه بعد غد

அபூ யூசுபே! என்னிடமிருந்து கேட்டவற்றை எல்லாம் எழுதி வைத்து விடாதே; ஏனெனில் இன்று ஒரு அபிப்பிராயத்தைக் கொண்டு (ஒரு தீர்ப்பை அளிப்பேன்) நாளை அதை விட்டு விடுவேன்; நாளை ஒரு அபிப்பிராயம் கொண்டு (தீர்ப்பு அளிப்பேன்) நாளை மறுநாள் அதை (தீர்ப்பு அளித்ததை) விட்டு விடுவேன்.

ஆதாரம் : இமாம் இப்னுல் மூயினுடைய “தாரிக்” பாகம், பக்கம் 77

إذا قلت قولاً يخالف كتاب الله تعالى وخبر الرسول ﷺ فاتركوا قولي

அல்லாஹ்வுடைய நெறி காட்டும் நூலுக்கும், நபி (ஸல்) அவர்களின் சொல்லுக்கும் மாற்றமான ஒன்றை நான் சொன்னால், என் சொல்லை விட்டு விடுங்கள்! ஆதாரம் : ஈகாமுல் ஹிமம், பக்கம் 50

**2. இமாம் மாலிக்(ரஹ்) அவர்கள் கூறுகிறார்கள் :**

إنما أنا بشر أخطىء وأصيب فانظروا في رأيي فكل ما وافق الكتاب والسنة فخذوه وكل ما لم يوافق الكتاب والسنة فاتركوه

1. நான் (சில நேரங்களில்) சரியாகவும், (சில நேரங்களில்) தவறாகவும் முடிவெடுக்கக் கூடிய ஒரு சராசரி மனிதன்தான். எனது முடிவுகளை நீங்களும் ஆராயுங்கள்! குர்ஆனுக்கும், நபி வழிக்கும் பொருத்தமானவற்றை எடுத்துக் கொள்ளுங்கள்! குர்ஆனுக்கும், நபி வழிக்கும் பொருத்தமில்லாதவற்றை விட்டு விடுங்கள்!

ஆதாரம் : ஜாமிவு இப்னி அப்தில்பர் பாகம்2, பக்கம் 42 உஸுலுல் அஹ்காம், பாகம் 6, பக்கம் 149 ஈகாமுல் ஹிமம், பக்கம் 62

ليس أحدً بعد النبي ﷺ إلا ويؤخذ من قوله ويترك إلا النبي

2. நபி(ஸல்) அவர்களின் சொல்லைத் தவிர வேறு எவரது சொற்களிலும், எடுக்கத் தக்கவையும் உண்டு. விடப்படக்கூடியவையும்

உண்டு. நபி(ஸல்) அவர்கள் சொல் மட்டுமே முற்றாக பின்பற்றப் பட வேண்டியவை.

ஆதாரம்: இர்ஷாதுஸ்ஸாலிக் பாகம் 1, பக்கம் 227 ஜாமிவு இப்னி அப்தில்பர், பாகம் 2, பக்கம் 91 உஸுலுல் அஹ்காம், பாகம் 6, பக்கம் 145

(இதே வார்த்தையை இப்னு அப்பாஸ்(ரழி) அவர்கள் கூறியதாக, இமாம் தகியுத்தீன் சுபுக்கீ அவர்கள் தனது “ஃபதாவா”வின் பாகம் 1, பக்கம் 148ல் குறிப்பிடுகிறார்கள்.)

قال ابن وهب سمعت مالكاً سئل عن تخليل أصابع
الرجلين في الوضوء؟ فقال ليس ذلك على الناس قال
فتركته حتي خف الناس فقلت له عندنا في ذلك سنة فقال
وما هي؟ قلت حدثنا الليث بن سعد وابن لهيعة وعمرو
بن الحارث عن يزيد بن عمرو المعافري عن ابي عبدالر
حمن الحبلي عن المستورد بن شداد القرشي قال رأيت
رسول الله ﷺ يدلك يخصره ما بين أصابع رجليه فقال إن
هذا الحديث حسن وما سمعت به قط إل الساعة ثم سمعته
بعد ذلك يسأل فيأمر بتخليل الأ صابع

3.“ஒளூ செய்யும்போது கால் விரல்களைக் கோதிக் கழுவ வேண்டியதில்லை” என்ற கருத்தை இமாம் மாலிக் அவர்கள் கொண்டிருந்தார்கள். அப்போது நான் “கால்களைக் கோதிக் கழுவ வேண்டும்” என்று ஹதீஸ் உள்ளதாகக் கூறி அவர்களிடம் ஸனதுடன் அறிவித்தேன். அதற்கு இமாம் மாலிக் அவர்கள், “இது சரியான ஹதீஸ்தான்; நான் இதுவரைக் கேள்விப்பட்டதில்லை” என்று கூறி விட்டு, அதன் பின்னால் விரல்களையும் கோதி க்கழுவிட உத்தரவிட்டார்கள் என்று இப்னு வஹ்ப் (ரஹ்) அவர்கள் குறிப்பிடுகின்றார்கள்.

ஆதாரம்:அல்ஜர்ஹு வத்தஃதீல் முன்னுரை பக்கம் 31, 32

### 3. இமாம் ஷாஃபிஈ(ரஹ்) கூறுகிறார்கள்

ما من أحد إلا وتذهب عليه سنة لرسول الله ﷺ وتعزب عنه فمهما قلت من قول أو أصّلت من أصل فيه عن رسول الله ﷺ خلاف ما قلت فـــالقول ما قال رسول الله ﷺ وهوقولي

1. எவராக இருந்தாலும் அவரை விட்டும் ரசூல்(ஸல்) அவர்களின் வழிமுறைகளில் ஏதேனும் (சில) தவறிவிடத்தான் செய்யும். நான் ஏதேனும் ஒரு சொல்லைச் சொல்லும் போது அல்லது ஏதேனும் ஒரு அடிப்படையை வகுத்துத் தரும்போது, அல்லாஹ்வின் திருத்தூத ருடைய கூற்றுக்கு மாற்றமாக அது இருந்தால், ரசூல்(ஸல்) அவர்கள் கூற்றை ஏற்பதே எனது கொள்கையாகும்.

ஆதாரம்: தாரீகு திமிஷ்க் (இப்னு அஸாகிர்) பாகம் 3, பக்கம் 15 ஈகாமுல் ஹிமம் பக்கம் 100

أجمع المسلمون على أن من استبان له سنة عن رسول الله ﷺ لم يحل له أن يدعها لقول أحد

2. ரசூல்(ஸல்) அவர்களின் வழிமுறை எவருக்குத் தெரிகின்றதோ, அதை எவருடைய கருத்துக்காகவும் விடுவது ஹலால் இல்லை என்று முஸ்லிம்கள் அனைவரும் ஒருமித்து ஏற்றுள்ளனர்.

ஆதாரம்: ஈகாமுல் ஹிமம் பக்கம் 68

إذا وجدتم في كتابي خلاق سنة رسول الله ﷺ فقولوا بسنة رسول الله ﷺ ودعوا ما قلت ﴿وفي رواية﴾ فاتبعو ها ولا تلتفتوا إلى قول أحد

3. எனது நூலில் நபி(ஸல்) அவர்களின் சுன்னத்துக்கு மாற்றமானதைக் கண்டால் ரசூலுடைய சுன்னத்தையே (மக்களிடம்) சொல்லுங்கள்! என் கூற்றை விட்டு விடுங்கள்!

ஆதாரம்:அல்மஜ்மூவுந்நவவீபாகம்1, பக்கம்63
இப்னு அஸாகிர், (9,10,15)

ஈகாமுல் ஹிமம் பக்கம் 706

அல்இஹ்திஜாஜ் பாகம் 2,

إذا صح الحديث فهو مذهبي

4. ஆதாரப்பூர்வமான ஹதீஸ் இருக்கும் போது அதைப் பின்பற்றுவதே எனது வழி.

ஆதாரம்:அல்மஜ்மூவுந்நவவீ பாகம்1, பக்கம்63

மீஸான் ஷஃரானி பாகம் 1, பக்கம் 57

ஈகாமுல் ஹிமம் பக்கம் 107

(இதை நான்கு இமாம்களும் கூறியதாக இமாம் இப்னுஹஸ்மு அவர்களின் கூற்றை இமாம் ஷஃரானி பாகம் 1, பக்கம் 57ல் குறிப்பிடுகிறார்கள்)

أنتم أعلم بالحديث والرجال مني فإذا كان الحديث الصحيح فأعلموني به أي شيء يكون كوفياً أو بصريًا أو شامياً

5. இமாம் அஹ்மது இப்னு ஹன்பலை நோக்கி இமாம் ஷாஃபிஈ (ரஹ்) கூறுகிறார்கள்.

“ஹதீஸ்களையும், அதன் அறிவிப்பாளர்களையும் நீங்கள் நன்கு அறிந்து வைத்துள்ளீர்கள்! ஆதாரப்பூர்வமான ஹதீஸ் என்றால் உடனே அதை எனக்கு அறிவித்து விடுங்கள்!”

ஆதாரம் : ஆதாபுஷ்ஷாஃபியி, பக்கம் 94,95

ஆபூநயீமின் ‘ஹில்யா’ பாகம் 9, பக்கம்106

இப்னுல் ஜவ்ஸியின் “மனாகிபுல் இமாம் அஹ்மத்” பக்கம் 499 ‘அல் இன் திகா’ பக்கம் 75

كل مسألة صح فيها الخبر عن رسول الله ﷺ عند أهل النقل غلاف ما قلت فأنا راجع عنها في حياتي وبعد موتي

நபி(ஸல்) அவர்களின் ஆதாரபூர்வமான ஹதீஸ்கள் மூலம் வந்துள்ள சட்டங்களுக்கு மாற்றமாக நான் சொன்ன அத்தனை சட்டங்

களிலிருந்தும் நான் வாழும் போதும் விலகிக் கொண்டேன். எனது மரணத்திற்குப் பின்னும் நான் விலகிவிட்டேன். (நான் இதற்குப் பொறுப் பேற்க இயலாது)

ஆதாரம் :

ஹில்யா (அபூநயீம்) பாகம்9 பக்கம்
இஃலாமுல்மூகியீன், பாகம்2, பக்கம்363
ஈகாமுல்ஹிமம் பக்கம் 104

إذا رأيتموني أقول قولاً وقد صحَّ عن النبي ﷺ خلافه
فاعلموا أن عقلي قد ذهب

நான் எதையாவது சொல்லி அது நபி (ஸல்) அவர்கள் கூற்றுக்கு மாற்றமாக இருப்பின், அது என் அறிவுக் குறைவு எனப் புரிந்து கொள்ளுங்கள்.

ஆதாரம் :

இப்னு அஸாகிர், 1, 10, 15
அல்ஆதாப் (இப்னு அபீஹாதம்) பக்கம் 93
அபூநயீம், பாகம் 9, பக்கம் 106

كل ما قلت؟ فكان عن النَّبي ﷺ خلاف قولي مما يصح
فحديث النبي أولى فلا تقلدوني

நான் சொன்ன சொற்கள் ஆதாரபூர்வமான நபி மொழிக்கு முரண்படும்போது, நபியின் ஹதீஸ்தான் ஏற்கத்தக்கது; என்னைப் பின்பற்றாதீர்கள்!

ஆதாரம் :

அல்ஆதாப் (இப்னு அபிஹாதம்) பக்கம் 93
அபூநயீம் பாகம் 9, பக்கம் 106

كل حيدث عن النَّبي ﷺ فهو قولي وإن لم تسمعوه مني

நபி(ஸல்) அவர்கள் வாயிலாக வந்துள்ள எல்லா ஹதீஸ்களும்தான் என் சொல்லாகும். என் மூலம் நீங்கள் அதைச் செவியுறாவிட்டாலும் சரியே!

ஆதாரம் : அல்ஆதாப்(இப்னு அபீஹாதம்) பக்கம் 93,94

**4. இமாம் அஹ்மது இப்னு ஹன்பல் (ரஹ்) கூறுகிறார் கள்.**

لا تقلدني ولا تقلد مالكاً ولا الشافعي ولا الأوزاعي ولا
الثوري وخذ من حيث أخذوا

என்னையோ, மலிக், ஷாபியீ, அவ்ஸாயீ, ஸவ்ரீ (போன்ற இமாம் களையோர்) பின்பற்றாதே! அவர்கள் எதிலிருந்து எடுத்துக் கொண்டார் களோ அதையே (அந்த குர்ஆன், ஹதீஸிலிருந்து) நீயும் எடுத்துக்கொள்.

ஆதாரம் : ஈகாளுல் ஹிமாம், பக்கம் 113

رأي الأوزاعي ورأي مالك ورأي أبي حنيفة كله رأي
وهو عندي سواء وإنما الحجة في الآثار

அபூஹனீபா, மாலிக், அவ்ஸாயீ ஆகியோரின் கருத்துக்கள் அவர் களின் அபிப்பிராயமே. உண்மையான ஆதாரம் நபி தோழர்களின் சரியான அறிவிப்பில் தான் உண்டு.

ஆதாரம் : ஜாமிவு இப்னி அப்தில்பர், பாகம்2, பக்கம் 149

من رد حديث رسول الله ﷺ فهو على شفا هلكة

நபி(ஸல்) அவர்களின் ஹதீஸை நிராகரிப்பவன் அழிவின் விளிம்பிலே இருக்கிறான். ஆதாரம் : இப்னுல்ஜவ்ஸி, பக்கம் 182 30,31,32

**இமாம்களை மதிக்கிறார்களா? மிதிக்கிறார்களா?**

இவ்வளவு தெள்ளத் தெளிவாக நெற்றியல் அடித்தாற் போல் அந்த மரியாதைக்குரிய இமாம்கள் சொல்லி இருந்த போதிலும், அவற்றை முற்றிலு மாகப் புறக்கணித்து நடக்கும் இந்த முகல்லிது மவ்லவிகள் அந்த இமாம்களை மதிக்கிறார்களா? அல்லது மிதித்து அவமதிக்கிறார் களா? என்பதை நீங்களே முடிவு செய்யுங்கள்.

**கிறிஸ்தவர்களின் ஒத்த நிலையில் மத்ஹபினர்!**

ஈஸா(அலை) அவர்களை அல்லாஹ்வின் குமாரர் என்றும், தெய்வம் என்றும் ஏற்றிப் போற்றி புகழ்ந்து வரும் கிறிஸ்தவர்கள்,

தாங்கள் தான் யேசுவை மதித்துக் கண்ணியப்படுத்தி வருவதாகவும், முஸ்லிம்களோ-ஈஸா(அலை) அவர்கள் அல்லாஹ்வின் குமாரர் அல்ல; இறைவனின் தூதர்களில் ஒருவர் என்று கூறி அவமதித்து வருவதாகவும், இழிவுபடுத்தி வருவதாகவும் கூறுகிறார்கள்; ஆனால் நாளை மறுமையில் ஈஸா(அலை) அவர்கள் என்ன சொல்வார்கள்? "இறைவா! கிறிஸ்தவர்களாகிய இவர்களின் செயல்பாட்டிற்கும் எனக்கும் கடுகளவும் சம்பந்தமே இல்லை. அவர்களிடம் நான் அவ்வாறு கூறவே இல்லை. அவர்கள்தான் என்னை உன்னுடைய குமாரனாக கற்பனை செய்து கொண்டு வழிகேட்டில் சென்றிருக்கிறார்கள்" என்று கூறி கிறிஸ் தவர்களைக் கைவிட்டுவிட்டு முஸ்லிம்களையே ஆதரிப்பார்கள். இதை முகல்லிது மவ்லவிகளில் யாருமே மறுக்க மாட்டார்கள்.

(பார்க்க: அல்மாயிதா 5:116, 117)

இதேபோல் இன்று இவ்வுலகில் அஹ்ல சுன்னத் வல்ஜமாஅத்தின ராகிய மத்ஹபுகளைப் பின்பற்றும் நாங்கள்தான் அந்த இமாம்களை ஏற்றிப் போற்றுகிறோம்; மதிப்பும் மரியாதையும் வைத்திருக்கிறோம். மத்ஹபுகளைப் பின்பற்றக் கூடாது; அது வழிகேடு என்று சொல்கிறவர் கள் தான் அந்த இமாம்களைத் தூற்றுகிறார்கள்; ஏசுகிறார்கள்; அவமரியாதை செய்கிறார்கள் என்று கூறும் இவர்களைப் பற்றி, அந்த இமாம்கள் நாளை மறுமையில் அல்லாஹ்விடம் இப்படி முறையிட்டால் இவர்களது நிலை என்னவாகும்?

"இறைவா! இந்த முகல்லிதுகளாகிய மத்ஹபைப் பின்பற்றியவர் களாகிய இவர்களுக்கும் எனக்கும் கடுகளவும் சம்பந்தமே இல்லை. இவர்களை என்னைப் பின்பற்றும்படியோ, என் பெயரால் மத்ஹபு அமைக்கும்படியோ நான் சொல்லவே இல்லை. என்னை தக்லீது செய்யக்கூடாது, நான் கூறுவது குர்ஆன், ஹதீஸ்படி இருந்தால் மட்டுமே எடுத்து நடக்க வேண்டும். அவற்றிற்கு முரணாக இருந்தால் ஒருபோதும் எடுத்து நடக்கக் கூடாது; நான் சட்டத்தை எங்கிருந்து எடுத்தேன் என்று குர்ஆன், ஹதீஸ் ஆதாரம் பார்க்காமல், அதை ஒருபோதும் எடுத்து நடக்கக் கூடாது என்று தெள்ளத் தெளிவாகக் கூறி இருந்தேன். நபி(ஸல்) அவர்களின் ஆதாரபூர்வமான ஹதீஸ்கள் மூலம் வந்துள்ள சட்டங்களுக்கு மாற்றமாக நான் சொன்ன அத்தனை சட்டங்களிலிருந்தும், நான் வாழும்போதும், எனது மரணத்திற்குப்

பின்னும் நான் விலகிவிட்டேன். நான் இதற்குப் பொறுப்பு ஏற்க முடியாது என்று தெளிவாக அறிவித்து விட்டேன், நான் இவ்வாறு தெளிவாக வழிகாட்டியதைப் புறக்கணித்துவிட்டு, தங்களின் மனோ இச்சைப்படி ஷைத்தானைப் பின்பற்றி என் பெயரால் மத்ஹபை அமைத்துள்ள னர். இந்தச் செயலுக்கும் எனக்கும் கடுகளவும் சம்பந்தமே இல்லை" என்று ஒவ்வொரு இமாமும் உறுதியாகக் கூறி அஹ்லசுன்னத் வல்ஜமாஅத் என்று கூறிக்கொள்ளும் மத்ஹபினரை நிராகரித்துவிடும் வாய்ப்பு இருக்கிறதா? இல்லையா?

அந்த மரியாதைக்குரிய நான்கு இமாம்கள் வழிகாட்டுதல் குர்ஆனுக்கும், ஆதாரபூர்வமாக ஹதீஸ்களுக்கும் ஒத்திருப்பதால், அந்தக் கட்டளையை ஏற்று மத்ஹபுகளை விட்டு தௌபா செய்து மீண்டு, எந்த மவ்லவியின் பின்னாலும் செல்லாமல் நேரடியாக குர்ஆன், ஹதீஸ்களை பார்த்து படித்துச் சிந்தித்து விளங்கிச் செயல் டுகிறவர்களே அந்த இமாம்களை முறையாக மதித்துச் செயல்படுகிற வர்களாகவும், அல்லாஹ்வின் பொருத்தம் பெற்று சுவர்க்கம் செல்லக் கூடியவர்களாகவும் இருக்க வாய்ப்பு உள்ளவர்கள்.

**தெளிவான ஆதாரங்களுக்குப் பின்னரும் வழிகேடா?**

மரியாதைக்குரிய அந்த நான்கு இமாம்கள் தெள்ளத் தெளிவாக வழிகாட்டிய பின்னரும் மத்ஹபைப் பின்பற்றிச் செல்கிறவர்கள் அல்குர்ஆன் அல்கஹ்ஃப் 18:102-106 மற்றும் அல்அஹ்ஜாப் 33:21, 36,66, 67,68 இறைக் கட்டளைகளின்படி பகிரங்கமான வழிகேட்டில் சென்று, நாளை மறுமையில் நரக நெருப்பில் அவர்களது முகங்கள் பொசுக்கப்படும்போது, வேதனை தாங்க இயலாது கதறுவார்கள். எந்தப்புரோகித மவ்லவிகளைப் பெரும் வழிகாட்டிகளாகவும், நாதாக்களாகவும், பெரியார்களாகவும் மூடத்தனமாக நம்பிச் சென்றார் களோ அவர்கள், நரக நெருப்பில் வெந்து கருகிக் கொண்டு அவர்களை சபிப்பார்கள். அல்லாஹ்விடம் "எங்கள் இறைவா! நாங்கள் நம்பிப் பின் பற்றிய இந்தப் புரோகித மவ்லவிகளுக்கு இரு மடங்கு வேதனையைக் கொடுப்பாயாக; அவர்களைப் பெருஞ்சாபத்தைக் கொண்டு சபிப்பாயாக" என சாபம் இடுவார்கள்; ஆனால் அவர்களின் இக்கூக்குரல் நாளை எப்பயனும் அளிக்காது. அவர்கள் உணர்வுடையவர்களாக, இருந்தால் அவர்களை வழிகெடுக்கும் இந்த தக்லீது, தரீக்கா, தவ்ஹீது, முஜாஹித்,

ஜாக், ததஜ, ஸலஃபி புரோகித மவ்லவிகளின் உடும்புப் பிடியிலிருந்து விடுபட்டு அல்லாஹ்வின் 7:3, 33:21, 36,66,67, 68, 59:7 வசனங் களும் இன்னும் இவை போல் பல வசனங்களும் தரும் அறிவுரைகளின் படி அல்குர்ஆனையும், ஆதாரபூர்வமான ஹதீஸ்களையும் சுயமாகப் படித்து சிந்தித்து விளங்கி அவற் றின்படி நடக்க முன் வருவார்களாக. அவர்கள் மட்டுமே நேர்வழி நடந்து வெற்றி பெறும் அந்த சின்னஞ்சிறு கூட்டத்தில் இணைய முடியும். அல்லாஹ் அருள் புரிவானாக.

**உறுதியான முடிவு ஏன்?**

குர்ஆன், ஹதீஸ் போதனைக்கு உட்பட்ட நான்கு இமாம்களின் தெள்ளத் தெளிவான மேல்கண்ட எச்சரிக்கைகளைக் கண்ட பின்னரே, நாம் ஓர் உறுதியான முடிவுக்கு வந்தோம். யூதக் கைக்கூலிகள் கற்பனை செய்த நான்கு மத்ஹபுகளையும், பல தரீக்காக்களையும் ஏற்று மார்க்கமாக பின்பற்றி நடப்பவர்கள், அல்லாஹ்வின் கட்டளைப் படி, அல்குர்ஆனின் போதனைப்படி, அல்லாஹ்வுக்கும் வழிபட வில்லை; ஆதாரபூர்வமான ஹதீஸ்களை மட்டும் பின்பற்றி நடக்காமல் அல்லாஹ்வின் தூதருக்கும் வழிப்படவில்லை; குர்ஆனுக்கும், ஹதீஸுக்கும் உட்பட்டு முரண்படாமல் வாழ்ந்த மரியாதைக்குரிய இமாம்களின் அறிவுரைகளை ஏற்று நடக்காமல் அந்த இமாம்களுக் கும் வழிப்படவில்லை; மாறாக அற்ப இவ்வுலக ஆதாயத்தைக் குறியாகக் கொண்டு மனோ இச்சைக்கு அடிமைப்பட்டு ஷைத்தானுக்கு வழிப்படுகின்றனர். ஹிந்து, கிறிஸ்தவ, பௌத்த இதர மதங்களின் புரோகிதர்களைப் போல், முஸ்லிம் மதப்புரோகிதர்களின் பேச்சு, உபதேசங்கள் மக்களை கவருவதாக இருந்தாலும், அவை அனைத்தும் ஷைத்தானின் தந்திரமான உபதேசங்களே என்பதையும் விளங்க முடிந்தது. ஆதி பிதா ஆதம் (அலை) அவர்கள் எப்படி அல்லாஹ்வின் நேரடியான தெளிவான கட்டளைக்கு மாறாக மனோ இச்சைக்கு அடிமைப்பட்டு ஷைத்தானின் தவறான உபதேசத்தை மிக உயர்வாக எடுத்து, தடுக்கப்பட்ட மரத்தை அணுகினார்களோ அதேபோல், இந்த மவ்லவி புரோகிதர்களும் அல்லாஹ்வின் கட்டளைகளுக்கும், அவனது தூதரின் கட்டளைக்கும், முரணான ஷைத்தானின் உபதேசங்களையே உயர்வாகக் கொண்டு அதையே மக்களுக்கு போதித்து வருகிறார்கள் என்பதையும் உணர்ந்தோம். (பார்க்க 7:11-25)

**ஆதத்தைப் பின்பற்றுகிறார்களா? ஷைத்தானை பின்பற்று கிறார்களா?**

ஆனால் ஆதம்(அலை) அவர்களுக்கும் இந்த புரோகித மவ்லவி களுக்கும் ஒரு பெரிய வித்தியாசம் இருக்கிறது. ஆதம்(அலை) ஷைத் தானின் மாய வலையில் சிக்கி தடுக்கப்பட்ட மரத்தை அணுகினாலும், அவரது தவறு எடுத்துக்காட்டப்பட்டவுடன், தமது தவறை உணர்ந்து அல்லாஹ்விடம் மன்னிப்புக் கேட்டார்கள். அல்லாஹ்வும் அவர்களை மன்னித்துவிட்டான் (பார்க்க பகரா 2:37, அஃராஃப் 7:22, 23) இதே போல் இந்தப் புரோகித மவ்லவிகள் அவர்கள் செய்து வரும் மாபெரும் குற்றங்கள், அல்குர்ஆனின் வசனங்களை ஆதாரமாகக் காட்டி நேரடி யாகச் சுட்டிக் காட்டப்பட்டாலும், தங்கள் தவறை உணர்ந்து அல்லாஹ் விடம் மன்னிப்புக் கேட்டுத் திருந்தத் தயாரில்லை. அதற்கு மாறாக ஷைத் தானைப் பின்பற்றி அவனது ஆணவமிக்க வாதங்களையே இந்தப் புரோகித மவ்லவிகளும் முன் வைத்து மேலும் வழிகேட்டில் செல்கிறார் கள். (பார்க்க அஃராஃப் 7:11-18) அவர்களை நம்பி அவர்கள் பின்னால் கண்மூடிச் செல்லும் அப்பாவி முஸ்லிம்களையும் வழிகெடுத்து நரகிற் குரியவர்களாக ஆக்குகிறார்கள். ஷைத்தானிடம் காணப்படும் ஆணவம், அகம்பாவம், தலைக்கனம் அனைத்தும் ஆதம்(அலை) அவர்களது காலத்திலிருந்தே இந்தப் புரோகித முல்லாக்களிடம் காணப் படுகிறது; அபூ ஜஹ்லிடமும், தாருந் நத்வா ஆலிம்களிடமும் காணப்பட்டது; இப்போது இந்த முஸ்லிம் மதப் புரோகித மவ்லவி களிடமும் அப்படியே காணப்படுகிறது என்பதை அறிந்துகொண்ட பின்னரே அவர்களை மக்களுக்கு அடையாளம் காட்டி அவர்களின் வசீகர உடும்புப் பிடியிலிருந்து மக்களைக் காப்பாற்றும் நன் நோக்கத்துடன் செயல்படத் துணிந்தோம்.

## தப்லீக் ஜமாஅத் !

1963லிருந்து 1972 வரை மிகத் தீவிரமாகவும், 1983 வரை ஓரளவும் தப்லீக் பணியில் ஈடுபட்டிருந்தோம். தப்லீக் பணியில் காணப் பெறும் குறைபாடுகளை அகற்ற 1978 ஜனவரி 13,14,15 தேதிகளில் காயல்பட்டினத்தில் நடை பெற்ற மூன்றாவது அனைத்துலக இஸ்லாமிய தமிழ் இலக்கியக் கருத்தரங்க மாநாட்டில் "பேரறிஞர் பெருமக்களிடம்

ஒரு கனிவான வேண்டுகோள்"! என்ற பெயரில் ஒரு சிற்றேடு வெளியிட்டோம். அதிலும் உரிய பலன் கிடைக்கவில்லை. தப்லீகின் தலைமைப் பீடம் டெல்லி நிஜாமுத்தீனிலுள்ளது. அங்கு இரு முறை சென்று முயற்சி மேற்கொண்டோம். தப்லீகில் உலகளாவிய அளவில் மார்க்க வலைத்தளமும் (Network) சில நபி நடைமுறைகளும் இருப்பதால், அவர்களுடைய கூட்டத்தில் வாசிக்கப்படும் கற்பனை கட்டுக்கதைகள், யூத கிறிஸ்தவர்களிடமிருந்து கற்று அப்படியே பின்பற்றப்படும் அசிங்கங்கள், அபத்தங்கள் நிறைந்த "அமல்களின் சிறப்பு" என்ற நூலை அகற்றிவிட்டு, நெறிகாட்டும் நூல் அல்குர்ஆனையும், ஆதாரபூர்வமான ஹதீஸ்களையும் அனைத்து மொழிகளிலும் தஃலீமில் வாசித்தால் அது சிறந்த பலனைத் தரும் என்ற நம்பிக்கையில் பெரும் முயற்சி மேற்கொண்டோம். மூட நம்பிக்கைகள் நிறைந்த அந்த பித்அத் நூலில்தான் பரக்கத் இருக்கிறது என்று கூறி தப்லீக் தலைமைப் பீடம் எமது கோரிக்கையை நிராகரித்துவிட்டது; பலனில்லை. அதன் பின்னரே மக்களை வழிகெடுக்கும் புரோகித மவ்லவிகளை அடையாளம் காட்டுவதில் மிகத் தீவிரமாக இறங்கினோம்.

## அஹ்லஹதீஸ், முஜாஹித், ஜாக், ததஜ!

முகல்லிது புரோகித மவ்லவிகளின் பின்னால் நாம் சென்று கொண்டிருந்த 1963-83 காலகட்டங்களில் அவர்களின் கூற்றை நயவஞ்சகமானது என்று அறியாமல் அப்படியே ஏற்று, முஸ்லிம் சமுதாயம் ஒன்றுபட வாய்ப்பே இல்லை என்ற மூட நம்பிக்கையில் ஷாஃபி மத்ஹபில் உறுதியாக இருந்து கொண்டு, தப்லீக் பணியில் தீவிரமாக ஈடுபட்டோம். அப்போது ஜமாஅத்தே இஸ்லாமி மற்றும் அஹ்லஹதீஸ், முஜாஹித் போன்ற ஸலஃபி அமைப்புகள் இருந்தும் ஒவ்வொரு பிரிவாரும் தத்தம் பிரிவில் எம்மை இணைக்க முயன்றும் அவையும் பிரிவுகளே; மிக சமீப காலத்தில் ஏற்பட்டவை என்றும்; ஆனால் ஷாஃபி மத்ஹபோ கடந்த(1000) ஆயிரம் வருடங்களாக இருப்பது என்றும் நம்பி அதில் உறுதியாக இருந்தோம். அல்குர்ஆனை தன்னம்பிக்கை யுடன் பொருள் அறிந்து படிக்க ஆரம்பித்த பின்னரே, அல்லாஹ் 21:92, 23:52 இறைக் கட்டளைகளில் கூறி இருக்கும் ஒன்றுபட்ட ஒரே 'முஸ்லிம்' சமுதாயம் சாத்தியமானதே எனத் திட்டமாக அறிந்தோம். பின்னர் ஷாஃபி மத்ஹபிலிருந்து தவ்பா செய்து மீண்டு

1984லிலிருந்து 'முஸ்லிம்' என்ற நிலையில், தப்லீகிலிருந்து விடுபட்டு எமது இந்த பிரசாரப் பணியை ஆரம்பித்தோம். அப்போது நாம் வெளியிட்ட பிரசுரங்களை, குறிப்பாக 30.10.1984-ல் கிறிஸ்தவ மடத்தில் நாம் நிகழ்த்திய உரையைப் பார்த்த பின்னரே பல மவ்லவிகள் எம்முடன் தொடர்பு கொண்டு, எம்மோடு இணைந்து பிரசார பணி புரிய ஒப்புக் கொண்டனர். ஆனால், அஹ்லஹதீஸ், முஜாஹித், எம்மை விட்டுப் பிரிந்த பின்னர் உருவாக்கிய ஜம்யியத்து அல்லுல் குர்ஆன் வல் ஹதீஸ், தமிழ்நாடு தவ்ஹீத் ஜமாஅத் ஆகிய அமைப்புகள், கலஃபிகள் உருவாக்கிய மத்ஹபு பிடியில் சிக்கி முகல்லிதுகளாக இருந்த நிலையிலிருந்து உயர்ந்து, நேரடியாக குர்ஆன், ஹதீஸை படித்து விளங்கிச் செயல்படுகிறோம் என்கிறார்கள். ஆனால் அவர்களின் இந்த கூற்றில் உண்மை இல்லை என்பதுதான் வேதனைக்குரிய விஷயம்.

இவர்களில் அஹ்ல ஹதீஸ், முஜாஹித் பிரிவினர் தங்களை ஸலஃபி பிரிவில் இணைத்துக் கொண்டுள்ளனர். மத்ஹபுகள், தரீக்காக் கள் இவற்றை ஆதரிக்கும் சுன்னத் வல் ஜமாஅத்தினரை பின்வந்த கலஃபிகளைப்பின்பற்றுகிறவர்கள் என்றும், ஆனால் தங்களை முன் சென்றவர்களான ஸலஃபுகளை பின்பற்றுகிறவர்கள் என்றும் கூறிக் கொள்கிறார்கள்.

தமிழ்நாட்டிலுள்ள இந்த இரு சாராரும் 1984 முதல் 1986 வரை எம்முடன் இணைந்து குர்ஆன், ஹதீஸ் அடிப்படையில் பிரச்சார பணி செய்ய முன் வந்தனர். அந்நஜாத் ஆரம்பிக்கும் முன்னர் 1985 இறுதியில் நாம் நடத்திய மாநாடு அவர்களோடு இணைந்து நடத்தியது தான். அதில்தான் **P.J.** வாக்களித்து விட்டு கலந்து கொள்ள வில்லை. நாங்கள் மத்ஹபுகளை எதிர்க்கும் கூட்டம், அதனால் கலந்து கொள்ள வில்லை என்று தனது தஞ்சாவூர் நண்பரிடம் கூறியுள்ளார்.

1986-ல் அந்நஜாத் ஆரம்பிக்கும்போது, அது ஸலஃபி பிரிவைச் சார்ந்த பத்திரிகையாக வெளிவர வேண்டும் என்ற கோரிக்கையை ஸலஃபிகள் பிடிவாதமாக முன் வைத்தனர். அதைத் திட்டமாக நாம் மறுத்து அவர்களை விட்டு வெளியேறி விட்டோம். அப்போது கமாலுத்தீன் மதனி, ஜைனுல் ஆபிதீன் போன்ற மவ்லவிகள் அவர்களோடு இணையாமல், நாம் 84 முதல் சொல்லி வருகின்றபடி

எந்தப் பிரிவிலும் சேராமல் 'முஸ்லிம்' என்ற நிலையில் அந்நஜாத்தை ஆரம்பிப்பதை ஏற்றுக் கொண்டே எம்முடன் இணைந்து செயல்பட முன் வந்தனர்.

19.2.86-ல் P.J. எமக்கு எழுதிய கடிதத்தில் "**ஸலஃபியை இழுக்காமல், உங்கள் மேற்பார் வையிலே நடப்பதைத்தான் நான் விரும்பு கிறேன்**" என்றும்

1.3.86-ல் S.K. எழுதிய கடிதத்தில் "**பத்தி ரிகை மர்கஸுஸ் ஸலபி சார்பாக வெளிவர வேண்டுமென்பது எனக்கும் சரியாகப் பட வில்லை**" என்றும் எழுதி இருந்தனர்.

அந்த குறுகிய காலத்தில் 'முஸ்லிம்' என்ற நிலையில் தமிழக மெங்கும் நடத்திய பிரசார பணியாலும், அந்நஜாத் மாத இதழாலும் தமிழகமெங்கும் ஓர் அதிரடி புரட்சியே ஏற்பட்டது. தமிழகமெங்கும் எமது பிரச்சார பணி பற்றிய பேச்சாகவே இருந்தது.

இந்த நிலையில் 1987 ஜனவரியில் கேரளா குட்டிபுரத்தில் அஹ்ல ஹதீஸ், முஜாஹித்களுடன் இந்த தவ்ஹீத் மவ்லவிகளும் இணைந்து பெரியதொரு சதியாலோசனை நடத்தி, தங்கள் புரோகித இனத்தைத் தக்க வைத்துக் கொள்ளும் முடிவுக்கு வந்தனர்.

எம்மை அந்நஜாத்தை விட்டு வெளியேற்றிவிட்டு, அதைக் கைப் பற்ற முற்பட்டனர். அதனால் எம்மீது அமானித மோசடி, நஜாத்திற்கு வந்த காசோலைகள் (செக்) கணக்கில் வரவு வைக்கப்படவில்லை, மவ்லவி களை தனது வீட்டு வேலையாட்கள் போல் நடத்துகிறார், இப்படி எல்லாம் அவதூறு பரப்பி னார்கள். முடிவில் எம் பொறுப்பிலிருந்த அனைத்து அதிகாரங்களையும் பறித்துக் கொண்டு, மவ்லவிகள் ஆறு பேரும், மவ்லவி அல்லாத மூன்று பேரும் என்று ஒன்பது பேர் கொண்ட அட்ஹாக் கமிட்டி அமைத்து, எம்மீது எப்படியும் குற்றம் சுமத்தி, அந்நஜாத்தை விட்டு வெளியேற்றிவிடுவது என்ற கடும் முனைப்புடன் கங்கணம் கட்டிக்கொண்டு பெரும் பாடுபட்டனர்.

இறுதியில் அவர்கள் சுமத்திய அனைத்துக் குற்றச் சாட்டுகளும் புஸ்வானமாகப் போய், தங்களின் முகத்திலேயே கரியைப் பூசிக் கொண்டனர். வரவுகள் அனைத்தும் முறையாக வரவு வைக்கப்பட்டுள்ளன, செலவுகள் அனைத் தும் சரி பார்க்கப்பட்டு ஏற்கப்பட்டது என்று அவர் களே எழுதி கையெழுத்திட நேரிட்டது. இத்தனை க்கும் அந்நஜாத்தின் செலவுகளில் அந்நஜாத் அச்சடிக்கும்

செலவு போக, எஞ்சியவை அனைத் தும் இந்த மவ்லவிகளுக்காக செலவிடப் பட்ட வையே! ஆக, வேறு வழியின்றி மீண்டும் எம்மையே தலைவராக தேர்ந்தெடுக்கும் கட்டாய த்திற்கு ஆளானார்கள். எம்மை அந்நஜாத்தை விட்டும் வெளியேற்ற முற்பட்டவர்கள், அதில் பெரும் தோல்வி கண்டு, அவர்கள் அனைவரும் கூண்டோடு அந்நஜாத்தை விட்டு வெளியேறி, அந்நஜாத் நின்றுவிட்டது என்று அவதூறு பரப்பினர். மவ்லவிகள் அனைவரும் வெளி யேறி விட்டதால், எம்மால் அந்நஜாத்தை நடத்த முடியாமல் நிறுத்தி விடுவோம் என பகல் கனவு கண்டனர். அப்படி பலருக்குக் கடிதமும் எழுதினர்.

அதன் பின்னரே தவ்ஹீத் மவ்லவிகள் அஹ்லஹதீஸ், முஜாஹித் களுடன் இணைந்து 1987 நவம்ப ரில் திருச்சியில் தேவர் ஹாலில் ஒன்று கூடி ''**அஹ்லுல் குர்ஆன் வல் ஹதீஸ்**'' (ஆக்) என்ற பிளவு இயக் கத்தை ஆரம்பித்தனர். அதையே 1988-ல் ''**ஜம்யியத்து அஹ்லுல் குர்ஆன் வல் ஹதீஸ்(ஜாக்)**'' என்று மாற்றி அமைத்தனர்.

**இந்த நிலையில் நாம் ஜாக்கிலிருந்து வெளியேறி தனித்துச் செயல் படுவதாக, தங்கள் ஆதரவாளர்களை ஏமாற்றி வருவது தான் வேடிக்கையும், மோசடியுமாகும்.**

10 வருடங்களுக்குப் பின்னர் 1998-ல் **P.J.ஜாக்**கிலிருந்து விலகி தமுமுகவில் தனது ஆதரவாளர்களுடன் இணைந்தார். ஏழு வருடங்களுக்குப் பின் 2005-ல் அதிலிருந்தும் வெளியேறி தமிழ்நாடு தவ்ஹீத் ஜமாஅத்**(ததஜ)** என்று மூன்றாவது பிளவு ஜமாஅத்தை அமைத்தார். 21:92, 23:52 இறைக் கட்டளைக்கு முரண்பட்ட இந்த நான்கு அமைப்புகளில் அஹ்ல ஹதீஸ், முஜாஹித் இரு அமைப்புகளும் தங்களை ஸலஃபிகள் என்று அழைத்துக் கொண் டாலும், தங்கள் தங்கள் புரோகித மவ்லவிகளின் ஃபத்வாக்களை-தீர்ப்புக்களை எடுத்து நடப்பவர்களே. அவர்கள் இரண்டு சாராரிடையே யும் மார்க்க விஷயங்களில் சில கருத்து வேறுபாடுகள் உண்டு.

1988க்குப் பிறகு தோன்றிய **ஜாக், ததஜ** பிளவு அமைப்புகளும் தாங்கள் ஸலஃபிகளை பின்பற்றவில்லை என்று சொல்லிக் கொண்டா லும், சமுதாயத்தைப் பிளவுபடுத்துவதிலும், இன்னும் சில மார்க்கக் காரியங்களிலும் ஸலஃபுகளை பின்பற்றுகிறவர்களே. **ததஜ** பிளவு

பிரிவினரோ தவ்ஹீத் மவ்லவி(?)யின் சுய விளக்கங்களை மார்க்கமாக நம்பி செயல்படுகிறவர்களே. இந்த நான்கு பிரிவினரும் குர்ஆன், ஹதீஸை மட்டும் பின்பற்றுகிறோம் என்று கூறுவது பொய்யே ஆகும். அல்லாஹ் ஒரே சமுதாயம் என்று கூறும் முஸ்லிம் சமுதாயத்தை பிளவு படுத்தி கோணல் வழிகளில் செல்பவர்களே!

## ஜமாஅத்தே இஸ்லாமி!

அப்போது மத்ஹபுகளை ஆதரித்தாலும் தரீக்காக்களை எதிர்த்த ஜமாஅத்தே இஸ்லாமியின் பக்கமும் எமது கவனத்தை திருப்பினோம். அவர்களின் சென்னை தலைமையிடத்திற்கு பலமுறை சென்று கருத்துப் பறிமாற்றம் செய்தோம். அதன் முக்கியஸ்தர்களில் சிலர் எம்மோடு கலந்துரையாடி இருக்கிறார்கள். அவர்களிடமும் அறிஞர் மவ்தூதி அவர்களின் கருத்துக்களையும், அவர்களது இயக்கத்தையும் நிலை நாட்டுவதில் காணப்பட்ட ஆர்வம், ஒன்றுபட்ட ஒரே சமுதாயம், மார்க்கப் பணி இவ்வுலக கூலிக்காக அல்லாமல், மறுமையில் அல்லாஹ்விடம் கூலியை எதிர்பார்த்து தூய நோக்கத்துடன் செய்யப்பட வேண்டும் எனும் விஷயங்களில் காணப்படவில்லை. பெயர் "ஜமாஅத் அல் முஸ்லிமீன்" என்று நபி(ஸல்) காட்டித்தந்ததின் உருது மொழி பெயர்ப்பாக அதாவது "ஜமாஅத்தே இஸ்லாமி'' என்று இருப்பதுடன் குர்ஆன், ஹதீஸுடன், அதற்கான அமைப்புச் சட்டத்தை வடிவமைத்து புதிதாக நிறுவப்பட்ட தாகும்.

அப்படி நிறுவும்போது அதன் நிறுவனரின் அறிவிப்பே அந்த ஜமாஅத்தின் நிலையை விளக்கப் போதுமானதாகும்.

**அது வருமாறு :**

இப்போது உங்கள் முன் மூன்று வழிகள் உள்ளன. அவற்றுள் நீங்கள் விரும்பும் எந்த ஒரு வழியையும் ஏற்றுக் கொள்ள உங்களுக்கு முழுச் சுதந்திரம் உண்டு. எங்கள் அழைப்பு, கோட்பாடு, குறிக்கோள், ஜமாஅத்தின் அமைப்பு, செயல்முறை ஆகியன யாவும் முழுக்க இஸ்லாத்தையே சார்ந்தவை என்றும், குர்ஆன் ஹதீஸின் படி எது முஸ்லிம் சமுதாயத்தின் அடிப்படைக் கடமையாயிருக் கிறதோ அதை நிறை வேற்றவே ஜமாஅத் முன் வந்துள்ளது என்றும்

உங்கள் மனச்சான்று கூறினால் எங்களுடன் சேர்ந்து கொள்ளுங்கள்.

ஏதாவது காரணத்தால் உங்களுக்கு எங்கள் மீது நம்பிக்கை ஏற்படவில்லையானால் வேறு ஏதாவது ஒரு ஜமாஅத் முழுக்க முழுக்க இஸ்லாமியக் குறிக்கோளுக்காக, இஸ்லாமிய முறைப்படிச் செயலாற்றுகிறது என்று உங்களுக்குத் தோன்றினால் அத்துடன் இணைந்து கொள்ளுங்கள். எங்களுக்கு அத்தகைய ஜமாஅத் ஒன்று இருப்பதாகத் தெரிந்தால் நாங்களும் அதில் சேர்ந்து கொண்டிருப்போம். அத்தகைய தூய்மையான இஸ்லாமிய ஜமாஅத் ஒன்று ஏற்கனவே இருந்தால் அதை விட்டு விலகி எங்களுக்காக ஒரு தனி ஜமாஅத் நிறுவும் ஆசை எங்களுக்கு இல்லை.

உங்களுக்கு எங்கள் மீதும் திருப்தி இல்லை; வேறு ஒரு ஜமாஅத் மீதும் நம்பிக்கை இல்லை என்றால், இஸ்லாம் உங்கள் மீது விதித் துள்ள கடமையை நிறைவேற்றுவதற்காக நீங்களே முன்வந்து இஸ் லாமிய முறைப்படி ஒரு ஜமாஅத்தை அமைக்க வேண்டியது இன்றி யமையாததாகும். முழு தீனை நிலை நாட்டுதலும், சொல்லாலும் செயலாலும் அதற்குச் சான்றாக விளங்குவதும், அத்தகைய ஜமா அத்தின் முதன்மைக் குறிக்கோளாய் இருக்க வேண்டும். இம் மூன்று வழிகளில் எந்த வழியை நீங்கள் தேர்ந்தெடுத்துக் கொண் டாலும் இன்ஷா அல்லாஹ் நீங்கள் நேர்வழியில் இருப்பீர்கள்.

எங்கள் ஜமாஅத் மட்டுமே நேர்வழியில் இருக்கிறது என்றும், இதில் சேராதவர் தவறான வழியில் செல்கிறார் என்றும் நாங்கள் எப்போதும் வாதம் செய்தது இல்லை; செய்யப் போவதும் இல்லை. நாங்கள் எப்போதுமே பொது மக்களுக்கு எங்கள் ஜமாஅத்தில் சேரும்படி அழைப்பு விடுத்ததும் இல்லை. முஸ்லிம் எனும் முறை யில் எங்கள் மீதும் உங்கள் மீதும் ஒரே மாதிரியாகச் சுமத்தப்படும் அந்தக் கடமையை நிறைவேற்றும் பொருட்டு உங்களுக்கு அழைப்பை விடுக்கிறோம். நீங்கள் அக்கடமையை நிறைவேற்றிக் கொண்டிருந்தால் நேர்மையின் பக்கம் இருக்கிறீர்கள். நீங்கள் எங்களுடன் சேர்ந்து பணியாற்றினாலும் சரி, இல்லையாயினும் சரியே.

**ஆனால் நீங்களும் முன்வராமல், முன் வருபவருக்கும் துணை செய்யாமல் விதவிதமான சாக்குப் போக்குகளைக் கூறிக் கொண்டு, தீனை நிலைநாட்டுவதிலும் (இகாமத்தே தீன்),**

**அதனை மக்களிடம் முழுமையாகத் தெளிவு படுத்த வேண்டிய கடமையிலிருந்தும் பின் வாங்கினால்–**

**அல்லது, இறைவனின் மார்க்கம் நிலை நாட்டப்படுவதற்குப் பதிலாக வேறு ஓர் அமைப்பு நிலைநாட்டப்படுவதற்குரிய பணியில் உங்கள் ஆற்றல்களை வீணாக்கினால்–**

**அல்லது, இஸ்லாத்திற்குப் பதிலாக வேறு எந்த அமைப்பை பற்றியாவது உங்கள் சொல்லும் செயலும் உலகுக்குச் சான்றாக விளங்கினால் நிச்சயமாக நீங்கள் எந்த வகையிலும் நேர்வழி யில் இருப்பதாகக் கருத முடியாது.**

இந்த விவகாரம் உலகுடனும் உலக மக்களுடனும் இருந்தால் சாக்குப் போக்குகளால் காரியம் நிறைவேறக்கூடும். ஆனால் இங்கே விவகாரம் இறைவனோடு சம்பந்தப்பட்டது. அவனோ நெஞ்சங்களில் உள்ள எல்லா மர்மங்களையும் அறிபவன். அவனை எந்த வகையான பித்தலாட்டத்தாலும் ஏமாற்ற முடியாது.

நன்றி : சமரசம்

மௌதூதி அவர்களின் இந்த அறிவுரையில் சில படிப்பினைகள் இருக்கின்றன. மார்க்கத்தை– தீனை நிலைநாட்டுவது ஒவ்வொரு முஸ்லிம் ஆண், பெண் மீதும் கட்டாயக் கடமை. அதிலிருந்து யாரும் விலகிச் செல்ல முடியாது. நாளை மறுமையில் அல்லாஹ்வை ஏமாற்றி தப்ப முடியாது என்பதைத் தெளிவாக வலியுறுத்தி இருக்கிறார். இன்னொன்றையும் அவர் மிக ஆணித்தரமாக வலியுறுத்தியுள்ளார். “இறைவனால் அருளப் பட்ட இஸ்லாமிய மார்க்கத்தை நிலைநாட்டுவதற்குப் பதிலாக வேறு ஓர் அமைப்பை–இயக்கத்தை நிலைநாட்டுவதற்குரிய பணியில் முஸ்லிம்கள் தங்கள் ஆற்றல்களை வீணாக்கினால், அல்லது, இஸ்லாத்திற்குப் பதிலாக வேறு எந்த அமைப்பிற்கு அவர்களின் சொல்லும் செயலும் உலகுக்குச் சான்றாக விளங்கினால் நிச்சயமாக அவர்கள் எந்த வகையிலும் நேர்வழியில் இருப்பதாகக் கருதமுடியாது” என்று ஆணித் தரமாக அறிவித்துள்ளார்.

இன்று நடைமுறையிலிருக்கும் அனைத்து இயக்கங்களின் முயற்சி களை உற்றுநோக்குங்கள். இஸ்லாத்தை நிலைநாட்டுவதைவிட தங்க ளின் இயக்கத்தை நிலைநாட்டுவதிலேயே ஒவ்வொரு இயக்கத்தாரும் தங்களின் சொல்லாலும், செயலாலும் உலகுக்குச் சான்றாக விளங்குகி

றார்கள். இதற்கு மௌதூதி அமைத்த ஜமாஅத்தே இஸ்லாமியும் விதி விலக்காக இருப்பதாகத் தெரியவில்லை. இதற்குக் காரணம் இவ்வளவு தெளிவாக ஆணித்தரமாக இஸ்லாத்தை நிலைநாட்டுவதே முஸ்லிம் களின் இலட்சியம் என்று கூறும் மௌதூதி அவர்கள், ''உங்களுக்கு எங்கள் மீதும் திருப்தி இல்லை; வேறு ஒரு "ஜமாஅத்" மீதும் நம்பிக்கை இல்லை என்றால், இஸ்லாம் உங்கள் மீது விதித்துள்ள கடமையை நிறைவேற்றுவத ற்காக நீங்களே முன்வந்து இஸ்லாமிய முறைப்படி ஒரு ஜமாஅத்தை அமைக்க வேண்டியது இன்றியமையாததாகும்" என்று கூறி இருப்பதே, அவரது முன்னைய கூற்றுக்கு முரணாகும். அந்த எண்ணப் படி அவர் புதிதாக "ஜமாஅத்தே இஸ்லாமி" என்ற அமைப்பையும், அதற் கென்று நிர்ணய சட்ட வடிவையும் உண்டாக்கிக் கொண்டதுமே, அவரது அந்த ஜமாஅத்தும் இஸ்லாத்தை நிலை நாட்டுவதைவிட அவர்களின் இயக்கத்தை நிலைநாட்டும் முயற்சிக்கு முன்னுரிமை கொடுக்கக் காரணமாயிற்று.

**மௌதூதியின் வழிகாட்டிகள்!**

மௌதூதி அவர்கள், எகிப்து அறிஞர்கள் சிலரின் எழுத்துக்களால் ஈர்க்கப்பட்டு, இஸ்லாமிய ஆட்சியை நிலைநாட்டுவதையே குறிக்கோளாக கொண்டு பாடுபட்டார். பாகிஸ்தான் முஸ்லிம் நாடு என்ற அடிப்படையில் பிரிந்தவுடன் மௌதூதியும் பாகிஸ்தானில் குடியேறி தனது முயற்சியை மேற்கொண்டார். தேர்தலில் அவரது கட்சி போட்டியிடவும் செய்தது. ஆனால் தோல்வியைத் தழுவியது. யூதர்களின் பிடியிலிலுள்ள ஊடகங்கள் முஸ்லிம்களே இஸ்லாமிய ஆட்சியை விரும்பவில்லை என உலகமெங்கும் செய்திகளைப் பரப்பின.

முஸ்லிம்கள் புரோகிதர்களின் கரங்களில் சிக்கி ஈமானுடைய உணர்வை இழந்து, இன உணர்வுக்கு அடிமையாக இருக்கும் நிலையில், குர்ஆன் கூறும் இறையாட்சியை–இஸ்லாமிய ஆட்சியை எங்ஙனம் விரும்புவார்கள்? உண்மையிலேயே இறையாட்சியை –இஸ்லாமிய ஆட்சியை நிலை நாட்ட விரும்புகிறவர்கள், முதலில் முஸ்லிம்களை வஞ்சக புரோகிதர்களின் வசீகர உடும்புப் பிடியிலிருந்து விடுவித்து, அவர்கள் அல்குர்ஆனை பற்றிப் பிடிக்கும் நிலையை ஏற்படுத்த வேண்டும். குறைந்த பட்சம் அதற்காகப் பாடுபட்டாலாவது அதில் வெற்றி

இவ்வுலகில் கிடைக்காவிட்டாலும், மறுமையில் நிச்சயம் வெற்றி கிடைக்கும்.

மௌதூதியின் இறையாட்சி அடிப்படையிலான போதனைகளின் விளைவாக தோன்றியதுதான் **SIM** என்ற இஸ்லாமிய மாணவர் அமைப்பு; இவர்களது முயற்சிகளும் இஸ்லாமிய ஆட்சியை அமைக்கும் இலட்சியத்திலேயே அமைந்தன. ஆரம்பத்தில் ஜமாஅத்தே இஸ்லாமியின் மாணவர் அமைப்பாகத் துவங்கப்பட்டது, பின்னர் தலைமைக்குக் கட்டுப் படாமல் தனித்து இயங்க ஆரம்பித்தது.

எனவே ஜமாஅத்தே இஸ்லாமியின் தலைமைக்குக் கட்டுப்பட்டு நடக்கும் மாணவர் அமைப்பாக **SIO** தொடங்கப்பட்டது. இப்படி இயக்கங் களும் அமைப்புகளும் முஸ்லிம் சமுதாயத்தில் புற்றீசல் போல் புதிது புதிதாக தோன்றுகின்றனவே அல்லாமல், முஸ்லிம்களின் இவ்வுலக பிரச் சினைகளும் தீர்ந்தபாடில்லை. மறுமைக்குப் பலன் தருவனவாகவும் இல்லை. இப்போது **SIM** இயக்கத்தைவிட மிகமிக மோசமாக நடந்து கொள் ளும் ஹிந்து வெறி அமைப்புகள் பல இருக்க, அவற்றை எல்லாம் தடை செய்யாத மத்திய அரசு, **SIM** இயக்கத்தை நியாயமின்றி தடை செய்துள்ளது.

முஸ்லிம் சமுதாயத்தைப் பிளவுபடுத்தி தோன்றும் ஒவ்வொரு இயக்கமும், அல்லாஹ் 30:32-ல் கூறுவதுபோல், கணக்கிலே எடுக்க முடியாத அற்பமான, துரும்புபோல் தங்களுக்கு கிடைக்கும் சாதாரண பலன்களைப் பெரிதுபடுத்திக் காட்டி மகிழ்ச்சியடைகின்றனர். மற்றபடி சமுதாயத்தைப் பிளவுபடுத்தி உருவாக்கப்பட்ட எந்த அமைப்பும் சமுதாயத்திற்கு எவ்வித பலன் தரத்தக்க காரியங்களைச் சாதித்ததாக ஆதாரமில்லை. அதற்கு மாறாக அந்த அமைப்புகளை, இயக்கங் களை அமைத்தவர்கள், இவ்வுலக ஆதாயங்களையும் பதவிகளையும் அனுப விக்கிறார்கள். அவர்களின் அசல் நோக்கமும் அது வாகவே இருப்பதால், அல்குர்ஆன் அல்பகரா 2:200, பனீ இஸ்ராயீல் 17:18 கூறுவதுபோல் இவ்வுலக ஆதாயங்களை அடைகிறார்கள். மறுமையின் ஆதாயத் தையும், அல்லாஹ்வின் பொருத்தத்தையும் நாடும் நல்ல உள்ளங்கள் 21:92, 23:52 இறைக் கட்டளைக்கு முரணாக ஒரு போதும் சமுதாயத்தைப் பிளவு படுத்தி தனித்தனி இயக்கங்களை கற்பனை செய்து அமைக்கத் துணியமாட்டார்கள். **SIM, SIO** அமைப்புகள் மௌதூதியின் கொள்கை அடிப்படையில் செயல்படும் நோக்குடன் ஆரம்பிக்கப் பட்டனவே

அல்லாமல், குர்ஆன், ஹதீஸ் அடிப்படையில் மட்டுமே செயல்பட வேண்டும் என்ற தெளிவான நோக்கத்தில் ஆரம்பிக்கப்பட்டவை அல்ல.

### மார்க்கம் நிறைவு பெறவில்லையா?

இப்போது புதிதாக ஓர் அமைப்பை–இயக்கத்தை யாரும் அமைக்கும் நிலையில்தான் அல்லாஹ்வால் அருளப்பட்ட இஸ்லாமிய மார்க்கம் குறைவுள்ளதாக இருக்கிறதென்றால், அல்லாஹ்வோ, அவனது தூதரோ அந்த ஏற்பாட் டைச் செய்யாமல் அரைகுறை நிலையில் முஸ்லிம்களைப் பரிதவிக்க விட்டுவிட்டார்கள் என்பதே அதன் பொருளாகும் (நவூது பில்லாஹ்). **“இஸ்லாம் மார்க்கத்தை உங்களுக்காக நிறைவு செய்து விட்டேன்; பூர்த்தியாக்கிவிட்டேன்; மேலும் உங்கள் மீது என் அருட் கொடைகளைப் பூர்த்தியாக்கிவிட்டேன். உங்களுக்காக இஸ்லாம் மார்க்கத்தையே தேர்ந்தெடுத்துள்ளேன்” என்று அல்மாயிதா 5:3லும், “நிச்சயமாக இஸ்லாம்தான் அல்லாஹ்விடத்தில் (ஏற்கப் பட்ட) மார்க்கமாகும்” என்று ஆலஇம்ரான் 3:19லும், “இஸ்லாம் அல்லாத (வேறு) மார்க்கத்தை எவரேனும் விரும்பினால் (அது) ஒரு போதும் ஏற்கப்படாது; அவர் மறுமை நாளில் இழப்புக்குரியவர்தான்” என்று ஆல இம்ரான் 3:85லும் உறுதியிட்டு அல்லாஹ் கூறி இருப் பதில் சந்தேகம் கொள்பவர்களே புதிதாக ஒரு இயக்கத்தை உருவாக்க முற்படுவார்கள்.**

### முஸ்லிம் உம்மத்திலிருந்து பிரித்து காட்ட வேண்டுமா?

அல்லாஹ் அல்குர்ஆனில் “உம்மத்” என்று பல இடங்களில் குறிப்பிடுகிறான். “உம்மத்” என்றால் தமிழில் சமுதாயம். சமுதாயம் என்றாலே மக்களின் கூட்டமைப்புத்தான். மக்கள் ஒன்று சேர்ந்து ஒரு அமைப்பாக இருக்கும்போது அது “ஜமாஅத்” என்றும் அழைக்கப்படு கிறது. அல்லாஹ்வுடைய பல கட்டளைகளுக்கு முரணாகப் பல பிரிவுகளை உண்டாக்கியவர்களும் தங்களை “ஜமாஅத்” என்று அழைத்துக் கொள்வதில் மாறுபட்ட கருத்தில் இல்லை; ஆனால் தங்களை முஸ்லிம் சமுதாயத்திலிருந்து பிரித்துக் காட்டத் தனித்தனிப் பெயர்களை தாங்களே தேர்வு செய்து சூட்டிக் கொள்கிறார்கள். அவர்கள் சூட்டிக் கொண்ட பெயரையே விளம்பரப்படுத்தி, தாங்களாக இட்டுக் கொண்ட பெயரை நிலைநாட்டப் பாடுபடுகிறார்களே அல்லாமல்

உலகளாவிய இஸ்லாமிய பேரியக்கத்தை நிலை நாட்ட முன் வருவதில்லை.

இறைவனால் இறக்கியருளப்பட்ட அனைத்து வழிகாட்டும் நூல்களிலும், இறுதி வழிகாட்டும் நூல் அல்குர்ஆனிலும் இறுதி நபியின் சமுதாயத்திற்கு "முஸ்லிமீன்" என அல்லாஹ் பெயர் சூட்டியுள்ளான் (அல் ஹஜ் 22:78) . இந்த சமுதாயத்தினராகிய முஸ்லிம்கள் நபிமார்கள் செய்த சத்திய – நேர்வழி அழைப்புப் பணியையே செய்து வந்தாலும் தங்களை பேரியக்கமான முஸ்லிம் சமுதாயத்தில் உள்ளவர் என்று கூறுவதற்கே அல்லாஹ் அனுமதி அளித்துள்ளான். (பார்க்க ஹாமீம் ஸஜ்தா 41:33)

இன்று முஸ்லிம் சமுதாயத்தில் சத்திய–நேர் வழியில் தாங்கள்தான் இருப்பதாக ஒவ்வொரு பிரிவாரும் கூறிக்கொண்டு, அல்லாஹ் பல இடங்களில் குறிப்பிட்டுள்ள ஒட்டுமொத்த முஸ்லிம் சமுதாயத்திலிருந்து தங்களை பிரித்தெடுத்து– வேறுபடுத்திக்காட்டியுள்ளனர். அதற்காகவே தனித் தனிப் பெயர்களைச் சூட்டி விளம்பரப்படுத்தி வருகின்றனர். அல்லாஹ் மறந்து விடுவான்–தவறி ழைத்து விடுவான் (நவூதுபில்லாஹ்) என இவர்களாக ஊகம் செய்து கொண்டு இவர்கள் நேர்வழியில் இருப்பதாக விளம்பரப்படுத்தி வருகின்றனர். தங்கள் தலைமையிலுள்ள பிரிவுப் பெயரில் வந்து இணைந்து கொள்ள மக்களுக்கு அழைப்பு விடுக்கின்றனர்.

**நேர்வழி அல்லாஹ்விடமே!**

நேர்வழி அல்லாஹ்வின் கையில் இருக்கிறது. நபிமார்கள் உட்பட மனிதர்களில் யாருக்கும் அந்தத்தகுதி இல்லை என்று கூறும் அல்கஸஸ் 28:56 இறைவாக்கையும், தாஹா 20:52 இறை வாக்கையும் புறக்கணித்துவிட்டு, தான்தோன்றித் தனமாக நடக்கின்றனர். யார் நாங்கள்தான் நேர் வழியில் இருக்கிறோம்; குர்ஆன், ஹதீஸ்படி நடக்கிறோம் என்று கூறுகிறார்களோ அவர்கள், இந்த 28:56, 20:52, 53:32 இறைக் கட்டளைகளை நிராகரிப்பதால், வழிகேட்டில் இருக்கிறார்கள் என்பதை மக்கள் புரிந்து கொள்ள வேண்டும். உண்மையில் நேர்வழி நடப்பவர்கள் தாங்கள்தான் நேர்வழியில் இருப்பதாக ஒருபோதும் கூற மாட்டார்கள். தாங்கள் சொல்வதுதான் குர்ஆன், ஹதீஸ் என்றும் கூற

மாட்டார்கள். ஒரு குறிப்பிட்ட விஷயத்திற்கு சம்பந்தப்பட்ட குர்ஆன் வசனங் களையும், ஆதாரபூர்வமான ஹதீஸ்களையும் எடுத்து வைத்து அவற்றிலுள்ளதை மட்டுமே கூறுவார்கள். குர்ஆன், ஹதீஸ் என்று சொல்லிக் கொண்டு தங்களின் கற்பனைகளையும், யூகங்களையும் கூறமாட்டார்கள்.

**சுய விளக்கம் வழிகேடே!**

அப்படி ஒருவர் ஒரு விஷயம் பற்றி குர்ஆன், ஹதீஸ் ஆதாரத்தைக் காட்டும்போது, குறிப்பிட்ட வசனம், குறிப்பிட்ட நபிமொழி சாதாரண, எழுதப் படிக்கத் தெரியாத பாமரனும் சுயமாக விளங்கிக் கொள்ளும் வகையில் இருக்க வேண்டும். "நாம் எழுதப்படிக்கத் தெரியாத அறிவிலி; இவரோ மெத்தப்படித்த மேதை, இவர் சொல்லுவது சரியாகத் தான் இருக்கும்" என்ற குருட்டு நம்பிக்கையில் இவர் கூறும் சுய விளக்கத்தை எடுத்து நடக்கக் கூடாது. இந்த அடிப்படையில்தான் ஒவ்வொரு பிரிவாரும் தங்களின் வழிகேட்டுக் கொள்கையை சுய விளக்கத்தின் மூலம் நியாயப்படுத்தி அப்பாவி முஸ்லிம்களை ஏமாற்றி வருகிறார்கள்.

மௌதூதி குருகுல புரோகிதக் கல்வியைப் போதிக்கும் மதரஸா ஒன்றில் தெண்டச்சோறு சாப்பிட்டு கல்வி கற்று, மூளைச்சலவை செய்யப்பட்டு மவ்லவி பட்டத்துடன் வெளி வந்தவர் அல்லர்; எனவே இந்த புரோகித மவ்லவிகள் அவரை ஆலிமாக–அறிஞராக ஏற்றுக் கொள்வதில்லை. ஆயினும் புரோகிதக் கல்வியால் மூளைச்சலவைச் செய்யப்படாததால், இந்தப் புரோகித மவ்லவிகளைவிட தரத்தில் உயர்ந்தவரே! யூதர்களின் சதியில் உருவான மத்ஹபுகளை சரி கண்டது, சமீபகால சில புரோகிதர்களின், "இஸ்லாமிய ஆட்சி அமைந் தால்தான் இஸ்லாத்தை நிலைநாட்ட முடியும்" என்ற தவறான போத னைக்கு அடிமைப்பட்டு அக்கருத்தை ஆதரித்தது, தனி ஜமாஅத்தை நியாயப்படுத்தியது ஆகியவை தவிர, மற்ற விஷயங்களில் நேரிய சிந்தனை உடையவர் என்பதை மறுப்பதற்கில்லை. ஆயினும் அவர் உருவாக்கிய "ஜமாஅத்தே இஸ்லாமி" அமைப்பினரும், இன்று தங்கள் இயக்கத்தை நிலைநாட்டுவதில் முனைப்பாக இருக்கின்றனரே அல்லாமல், அதன் தூய நிலையில் இஸ்லாத்தை நிலைநாட்ட முனைப்புக் காட்டுவதில்லை. இது விஷயமாகப் புதிதாகத் தேர்ந்தெடுக் கப்பட்டுள்ள தலைவருக்கு விரிவான ஒரு கடிதம் எழுதியுள்ளோம்.

அதற்கு இதுவரை எவ்வித பதிலும் இல்லை. எனவே ஜமாஅத்தே இஸ்லாமும் பின்பற்றத்தக்க ஓர் இயக்கம் அல்ல என்ற முடிவுக்கு வந்தோம்.

## அஹ்மதியா முஸ்லிம்கள் இயக்கம் !

அடுத்து தங்களை அஹ்மதியா முஸ்லிம்கள் என்று கூறும் காதியானிகள் பற்றி 1963-லேயே அறிந்தோம். அப்போது எமது உறவினர் ஒருவரிடம் இருந்த குலாம் அஹ்மது மிர்சாவுடைய "இஸ்லாமிய ஞான போதம்" மற்றும் சில நூல்கள் கிடைத்துப்படித்தோம். அதேபோல் அப்துல்காதிர் ஜீலானி (ரஹ்) அவர்களது சில நூல்களின் மொழிபெயர்ப்புகளையும், இமாம் கஸ்ஸாலியின் கீமியா ஸஆதத் என்ற நூல் நான்கு பாகங்களையும் பார்த்தோம். அப்போது எங்கள் பகுதியில் சில காதியானிகள் இருந்தும் அவர்களின் தாக்கம் எம்மிடம் ஏற்படவில்லை. தப்லீகில் தீவிரமாகச் செயல்பட்டோம். மனித அபிப்ராயத்திற்கு மார்க்கத்தில் அணுவளவும் அனுமதி இல்லை; குர்ஆன், ஹதீஸ் மட்டுமே மார்க்கம் என்ற தெளிவு கிடைத்த பின்னரும், அஹ்மதியா ஜமாஅத்தைப் பற்றியும் தீவிரமாக ஆய்வு செய்தோம். அவர்களும் சமுதாயத்தைப் பிளவுபடுத்துவதன் மூலம் பெரியதொரு வழிகேட்டில் இருப்பதே தெளிவானது.

குலாம் அஹ்மது தன்னை ஒரு சீர்திருத்தவாதி என்ற நிலையோடு அவரது ஆரம்பகால முயற்சிகளையே தொடர்ந்திருந்தால் உரிய பலன் கிடைத்திருக்கலாம்; முஸ்லிம்களிடையே மண்டிக் கிடக்கும் சமாதி வழிபாடுகள், மூடச் சடங்கு சம்பிரதாயங்கள் இவை அனைத்தையும் மிகக் கடுமையாகக் கண்டிக்கக் கூடியவராகவே அவர் இருந்துள்ளார். மக்களிடையே நல்ல செல்வாக்கு ஏற்பட்டுத்தான் இருக்கிறது. தான் எதைச் சொன்னாலும் அதைக் கண்ணை மூடி ஏற்கும் ஒரு கூட்டம் இருக்கிறது என்ற நிலை ஏற்படும்போது, மனிதனை ஷைத்தான் வழிகெடுத்துவிடத் தான் செய்கிறான். அவனது சூழ்ச்சிக்குப் பலியாகியே குலாம் அஹ்மது தன்னை நபி, மஸீஹ் என பிதற்ற ஆரம்பித்தார். குர்ஆன், ஹதீஸ் வெளிச்சத்தில் பார்க்கும்போது அவரது இக்கூற்றுக்கள் கடைந்தெடுத்த பொய்கள் என்பதை குர்ஆன், ஹதீஸில் உள்ளதை உள்ளபடி ஏற்பவர்கள் அறியமுடியும். சிலர், அவர் நபி என்ற வாதத்தை வைக்கவில்லை; அவரது மகனே, தலைமைப் பொறுப்பேற்ற பின்னர் அப்படியொரு

கற்பனையை கட்டிவிட்டார் எற்கின்றனர். உண்மையை அல்லாஹ்வே நன்கறிந்தவன்.

**நபிமார்களின் வருகை ஏன்?**

நேர்வழியை மக்களுக்கு எடுத்துச் சொல்லவே நபிமார்கள் அனுப்பப்பட்டார்கள். ஒரு நபி வரும்போது அவருக்கு முன்னால் வந்த நபியின் நேர்வழி போதனை பதிந்து பாதுகாக்கப்படவில்லை. அந்த சமூகத்தில் திருட்டுத்தனமாகப் புகுந்து கொண்ட புரோகிதர்கள், அந்த நபியின் நேர்வழி போதனைகளில் இவர்களின் அற்ப உலக ஆதாயத் திற்காக பல பொய்யான தகவல்களை அல்லாஹ்வின் பெயராலும், அந்த நபியின் பெயராலும் இட்டுக்கட்டினார்கள். நேர்வழி போதனை என்ற பெயரில் பல கோணல்வழி போதனைகள் பெருகின. எனவே அடுத்து வந்த நபி நேர்வழி போதனையை நேரடியாக அல்லாஹ்விட மிருந்து வஹீ மூலம் பெற வேண்டிய நிலை இருந்ததே அல்லாமல் வேறு மாற்று வழி இருக்கவில்லை. எனவே அல்லாஹ் நபிமார்களை அனுப்பி அவர்களுடன் வஹீ மூலம் தொடர்பு கொள்ளும் கட்டாய நிலை இருந்து வந்தது.

**தூதுத்துவ வஹீ முற்றுப் பெற்று பாதுகாக்கப்பட்டது!**

ஆனால் இறுதி நபி முஹம்மது(ஸல்) அவர்களுக்கு இறக்கியருளப் பட்ட அல்குர்ஆன் முழுமை பெற்றதாகவும், உலகம் அழியும் வரை அதுவே நேர்வழியைத் தெளிவாகக் கூறும் நெறி காட்டும் நூலாகவும், முஸ்லிம்கள் என்ற பெயரில் அதன்படி நடப்பவர்கள் மட்டுமே வெற்றி பெற முடியும் என்று கூறும் 5:3, 3:19, 85 இறைவாக்குகளைக் கொண்ட தாகவும் இருக்கிறது. அல்குர்ஆன் உடனுக்குடன் பதிந்து பாதுகாக்கப் பட்டதோடு, உலகம் அழியும் வரை அதை அல்லாஹ்வே பாதுகாப்ப தாகவும் வாக்களித்துள்ளான். (அல்ஹிஜ்ர் 15:9)

**குர்ஆன் பாதுகாக்கப்பட்டபின் நபி அவசியமில்லை!**

இந்த நிலையில் நபி(ஸல்) அவர்களுக்குப் பின் ஒரு நபி வந்து, அவர் அல்லாஹ்விடமிருந்து வஹீ பெற்று மார்க்கச் சட்டங்களைச் சொல்ல வேண்டும் என்று ஒருவன் நம்பினால், அவன் மேலே கண்ட 5:3, 3:19, 85, 15:9 அனைத்து இறைவாக்குகளையும் மறுக்கிறான்;

நிராகரிக்கிறான் என்பதே அதன் பொருளாக இருக்க முடியும். காரணம் அல்குர்ஆனில் இல்லாத ஒன்றை மார்க்கமாக்குவதாக இருந்தால்தான் புதிதாக ஒரு நபியை தேர்ந்தெடுத்து அவருக்கு வஹீ மூலம் அதை அறிவிக்க வேண்டிய கட்டாயம் ஏற்படும். எனவே நபி(ஸல்) அவர்களு க்குப்பிறகு ஒரு நபியை நம்பிக்கை கொள்வதாக இருந்தால் மேலே கண்ட5:3, 3:19, 85, 15:9 இறைவாக்குகள் கூறுபவை உண்மையல்ல. மார்க்கம் நிறைவு பெறவில்லை. அதை நிறைவு செய்ய நபி(ஸல்) அவர்களுக்குப் பிறகு ஒரு நபி வந்தே மார்க்கத்தை நிறைவு செய்ய வேண்டியுள்ளது என்றே அவன் நம்பிக்கை வைக்கிறான். அவன் உண்மையான ஒரு முஸ்லிமாக இருக்க முடியுமா? ஒருபோதும் சாத்திய மில்லை. எனவே நபி(ஸல்) அவர்களுக்குப் பிறகு ஒரு நபி வருவார் என்பது பகிரங்கமான வழிகேடேயாகும்.

## நபி வருகை பற்றி அல்லாஹ்வே அறிவிக்க வேண்டும்!

மேலும் அப்படி ஒரு நபி வருவதாக இருந்தால் அதை அல்லாஹ் தெளிவாக நேரடியாக அல்குர்ஆனில் அறிவித்திருப்பான். நபி(ஸல்) அவர்களும் தனக்குப் பின்னால் நபி வருவதை அறிவித்திருப்பார்கள். அப்படி ஓர் ஆதாரத்தையும் கூட காதியானிகள் காட்ட முடியாது. அல்குர்ஆன் வசனங்களையும், ஹதீஸ்களையும் திரித்தும் வளைத் துமே தங்களின் பொய் வாதத்தை நிலைநாட்ட மட்டுமே முடியும். உதாரணமாக ஒருவர் இறை நம்பிக்கை கொண்டு வெற்றி பெறுவதாக இருந்தால் அவரிடம் கட்டாயம் இருக்க வேண்டிய அவசியமான நம்பிக் கைகள், செயல்பாடுகள் பற்றி அல்பகரா 2:1-5 வரையுள்ள வசனங்கள் தெள்ளத் தெளிவாக நேரடியாகக் கூறுகின்றன. அவற்றில் 4வது இறைவாக்கில் "**அவர்கள் உமக்கு அருளப்பெற்றதின் மீதும், உமக்கு முன்னர் அருளப்பட்டவை மீதும் நம்பிக்கைக் கொள் வார்கள்**" **என்று கூறியிருக்கிறானே அல்லாமல்** "**உமக்குப் பின்னர் அருளப்படுவதின் மீதும் நம்பிக்கைக் கொள்வார்கள்**" என்று கூறவில்லை.

ஓர் இறை விசுவாசியின் நம்பிக்கை இப்படித்தான் இருக்க வேண்டும்; அவர்தான் நேர்வழியில் இருக்கிறார் (2:5) என்று கூறும் இந்த முக்கிய மான இடத்தில், நபி(ஸல்) அவர்களுக்குப் பிறகு ஒரு நபி வந்து அவரை நபியாக ஏற்பது முஸ்லிம்களின் கடமை என்றால், அதை நிச்சயமாக

அல்லாஹ் இந்த இடத்தில் குறிப்பிட்டிருப்பான். அதுவும் நபி(ஸல்) அவர்களுக்கு முன்னர் வந்த எண்ணற்ற நபிமார்களையும், அவர்களுக்கு அருளப்பட்டவற்றையும் நம்ப வேண்டுமே அல்லாது, அவர்களைப் பின்பற்ற வேண்டும் என்ற ஆணை இல்லை. இந்த நிலையிலேயே நபி(ஸல்) அவர்களுக்கு முன்னர் வந்த நபிமார்களையும் அவர்களுக்கு அருளப்பட்டவற்றையும் நம்பிக்கைக் கொள்வதை அறிவுறுத்தியிருக்கும் அல்லாஹ், நபி(ஸல்) அவர்களுக்குப் பிறகு ஒரு நபி வந்து அவரை நபியாக ஏற்று, அவரது போதனைகள் படி நடக்க வேண்டும் என்றால், இந்த முக்கியமான இடத்தில் அதை அறிவிக்காமல் விட்டிருப்பானா? அல்லாஹ் மறதியாளனோ, தவறிழைப்பவனோ இல்லை என்பதுதான் ஓர் உண்மை விசுவாசியின் உறுதியான நம்பிக்கையாக இருக்க முடியும். (பார்க்க 20:52)

**நபி வருகை முத்திரை இடப்பட்டு முடிவுக்கு வந்துவிட்டது!**

எனவே நபி(ஸல்) அவர்களுக்குப் பிறகு நபிமார்களின் வருகை முத்திரையிடப்பட்டு முற்றுப்பெற்றுவிட்டது என்பதுதான் குர்ஆன் கூறும் உண்மையாகும். இதை அல்குர்ஆன் அஹ்ஜாப் 33:40 தெள்ளத் தெளிவாக நேரடியாக உறுதிப்படுத்துகிறது. நபி(ஸல்) அவர்களும் தனக்குப் பின்னர் நபி அனுப்பப்படமாட்டார் என்பதைப் பல கட்டங்களில், பல சந்தர்ப்பங்களில் கூறி உறுதிப்படுத்தியிருக்கிறார்கள்.

ஆனால் இந்த குர்ஆன் வசனங்களையும், ஹதீஸ்களையும் சுய விளக்கங்கள் கொடுத்து காதியானிகள் நிராகரிக்கின்றனர். 2:4-ல் உள்ள "இன்னும் ஆகிரத்தாகிய மறுமையை உறுதியாக நம்புவார்கள்" என்ற இறுதிப்பகுதி நபி(ஸல்) அவர்களுக்குப் பிறகு வரும் நபியையே குறிக்கிறது என்று கூறி அவர்களின் ஆதரவாளர்களின் காதுகளில் பூ சுற்றுவார்கள். "33:40 இறைவாக்கு நபி(ஸல்) அவர்கள் எல்லா நபிமார்களிலும் சிறப்புக்குரியவர்கள் என்று கூறுகிறதே அல்லாமல் இறுதி நபி என்று கூறவில்லை" என்று தங்களை நம்புபவர்களை ஏமாற்றுவார்கள். நபி(ஸல்) அவர்கள் தனக்கு பின்னால் நபிமார்கள் வரமாட்டார்கள் என்று சொன்னது ஷரீஅத்துடைய நபியையே அல்லாமல், ஷரீஅத்தோ, உம்மத்தோ இல்லாத நபியைப் பற்றி அல்ல என்று சுயவிளக்கம் கொடுத்து ஏமாற்றுவார்கள்.

**மார்க்கம் அப்பன், பாட்டன் சொத்தல்ல!**

காதியானிகளுக்கும், மற்றும் சமுதாயத்தைப் பிளவுபடுத்தும் பிரிவினைவாதிகளுக்கும் மார்க்கம் ஏதோ அவர்களின் அப்பன்–பாட்டன் சொத்து என்ற நினைப்புப் போலும். மார்க்கம் முழுக்க முழுக்க அல்லாஹ்வுக்கே சொந்தம் என்று ஜுமர் 39:3 கூறுவதை எளிதில் மறந்து விடுகிறார்கள்; புறக்கணித்தும் விடுகிறார்கள். 39:3 கூறும் களங்க மற்ற–தூய மார்க்கம் அல்லாஹ்வுக்கு மட்டுமே உரியது. புரோகிதர்களின் கைபடாமல் இருந்தால்தான் அது தூய்மை யாக கலப்படம் இல்லாமல் இருக்கும்; புரோகிதர்களின் மனிதக்கரம் பட்டால் அது மார்க்கம் என்ற நிலையிலிருந்து திரிந்து மதமாக மாறிவிடும் என்பதை உறுதிப்படுத்துகிறது. அல்குர்ஆனுக்கு அல்குர்ஆனே விளக்கமாக இருக்கிறது. அதற்கு விளக்கம் கொடுப்பதாக இருந்தால், அந்த அதிகாரம் நபி(ஸல்) அவர்களுக்கு மட்டுமே உண்டு (பார்க்க 16:44,64). மனிதர்களில் யாருக்குமே சுய விளக்கம் கொடுக்கும் அதிகாரம் இல்லை என்பதை காதியானிகளும், பிரிவினை வாதிகளும் உணர வேண்டும்.

**காதியானிகளின் அறியாமைக்கு அளவில்லையா?**

காதியானிகள் எந்த அளவு மூடர்களாகவும், வழிகேடர்களாகவும் இருக்கிறார்கள் என்பதற்கு அவர்கள் அல்குர்ஆன் வசனங்களுக்கு கொடுக்கும் சுய விளக்கங்களே போதிய சான்றாகும். அல்குர்ஆன் ஸஃப் 61:6–ல்

**மர்யமின் குமாரர் ஈஸா: “இஸ்ராயீல் மக்களே!” எனக்கு முன்னுள்ள தவ்ராத்தை மெய்ப்பிப்பவனாகவும், எனக்குப் பின்னர் வரவிருக்கும் “அஹ்மது” எனும் பெயருடைய தூதரைப்பற்றி நன் மாராயம் கூறுபவனாகவும் இருக்கும் நிலையில் அல்லாஹ்வின் தூதனாக உங்களிடம் வந்துள்ளேன்”........** (61:6) என்ற இறை வாக்கில் கூறப்படும் “அஹ்மது” நபி(ஸல்) அவர்களுக்குப் பிறகு வந்த குலாம் அஹ்மதையே குறிக்கிறது என்பது காதியானிகளின் பிதற்ற லாகும். சிறிது அளவே சுய சிந்தனை இருந்தால் கூட அவர்கள் இப்படி பிதற்ற முடியாது.

ஈஸா(அலை) தனக்கு முன்னர் மூஸா(அலை) அவர்களுக்குக் கொடுக்கப்பட்ட தவ்ராத்தைக் குறிப்பிட்டு விட்டு, பின்னர் வரவிருக்கும் தூதரைப் பற்றிக் குறிப்பிடுவதாக இருந்தால், நிச்சயமாக அவர் தவ்றாத் தைப் போல் ஒரு நெறி கூறும் நூல் கொடுக்கப்படுகிறவராக மட்டுமே இருக்க முடியும். குலாம் அஹ்மதுக்கு நெறிநூலும் இல்லை; தனி உம்மத்தும் இல்லை; அவரும் குர்ஆனையே பின்பற்ற வேண்டும் என்று ஒப்புக் கொள்ளும் காதியானிகள், எந்த முகத்தோடு 61:6 இறைவாக்கு குலாம் அஹ்மதைக் குறிப்பிடுகிறது என உளறுகிறார்கள். இந்த 61:6 இறை வாக்கிலுள்ள "அஹ்மது" எனும் பெயர் குலாம் அஹ்மதைக் குறிக்கிறது என்றால் அதை யார் தெளிவு படுத்த வேண்டும்? தெளிவு படுத்த கடமைப்பட்ட நபி(ஸல்) அவர்கள்தானே தெளிவுபடுத்தி இருக்க வேண் டும். 1300 ஆண்டுகளுக்குப் பின்னர் வந்த இந்த குலாம் அஹ்மதா தெளிவு படுத்த வேண்டும்?

"அஹ்மது" என்று 61:6-ல் குறிப்பிடுவது குலாம் அஹ்மதுதான் என்று விதண்டாவாதம் செய்கிறவர்கள் எந்த அளவு அடிமுட்டாள்களாக இருக்கிறார்கள் என்பதை சிறிது அளவே சிந்திப்பவனும் விளங்க முடியும். "குலாம் அஹ்மது" என்றால் அஹ்மதின் வேலையாள்–அடிமை என்ற பொருளையே தரும். அஹ்மதின் அடிமை அஹ்மதாக முடியும் என்றால் இதைவிட மடமை இருக்க முடியுமா?

### அப்துல்லாஹ் அல்லாஹ்வாக முடியுமா?

"அப்துல்லாஹ்"– அல்லாஹ்வின் அடிமை என்ற பெயரை உடையவன், தான்தான் "அல்லாஹ்" என்று பிதற்றினால், அது எவ்வளவு பெரிய மடமையோ, வழிகேடோ, நரகில் சேர்க்கும் செயலோ, அது போன்றதொரு உளறல்தான் 61:6லுள்ள "அஹ்மது" என்ற பெயர் குலாம் அஹ்மதைக் குறிக்கும் என்ற உளறலுமாகும்.

இது போன்றதொரு இன்னொரு பிதற்றலைப் பாருங்கள். அல்லாஹ் அல்குர்ஆன் அன்னிஸா 4:157, 158 இறைவாக்குகளில் தெளிவாக நேரடியாக இவ்வாறு கூறுகிறான்.

**"........நிச்சயமாக அவர்கள், அவரை(ஈஸா) கொல்லவே இல்லை; ஆனால் அல்லாஹ் அவரைத் தன்னளவில் உயர்த்திக் கொண்டான்; இன்னும் அல்லாஹ் வல்லமை மிக்கோனாகவும் ஞானமுடையோனாகவும் இருக்கிறான். "** (4:157,158)

## காதியானிகளுக்கு அல்லாஹ்வின் வல்லமையில் சந்தேகம்!

இந்த இறைவாக்குகளைப் படிக்கும் அற்ப அறிவுடையவனும் அதில் நேரடியாக கூறப்பட்டுள்ளபடி, அல்லாஹ் தனது வல்லமையை யும், ஞானத்தையும் கொண்டு ஈஸா(அலை) அவர்களைக் கொல்லப் படாத நிலையில் தன்னளவில் உயர்த்திக் கொண்டான் என்று எளிதாகப் புரிந்து கொள்ள முடியும். இறைவனது வல்லமை-ஆற்றல், ஞானம் இவற்றில் சந்தேகமுடையவன் மட்டுமே, உயிரோடு ஈஸா (அலை) அவர்களை அல்லாஹ் தன்னளவில் எப்படி உயர்த்தி இருக்க முடியும்? அதற்கு முன்மாதிரி இருக்கிறதா? என்று கேள்விகள் எழுப்ப முடியும். அல்லாஹ் நேரடியாக, தெளிவாகக் கூறி இருப்பதை மறைத்து, ஈஸா(அலை) சிலுவையில் அறையப்பட்டு, அன்று மாலையே அதிலிருந்து இறக்கப்பட்டார். தப்பித்தோம் பிழைத்தோம் என தனது தூதுத்துவப் பணியை மறந்து காஷ்மீருக்கு ஓடிப்போனார். அங்கு 120 வருடங்கள் தனது கடமையான மார்க்கப் பணியை செய்யாமல் மறைந் திருந்ததற்காக, அவர் மரணித்த பின் அவரது பதவியை அல்லாஹ் உயர்த்தினான் என பிதற்ற முடியும். சிலுவயைலில் அறையப்பட்டு கொல்லப்பட வேண்டிய உண்மைக் குற்றவாளியை அன்று மாலையே குற்றவாளி இறக்காத நிலையில் ''சிலுவையிலிருந்து இறக்கப்பட்டார் என்று காதியானிகள் போன்ற மூடர்கள் நம்பலாம். அற்ப அறிவுள்ள வனும் ஏற்கமாட்டான்''.

பதவி பற்றி சுமார் 18 இடங்களில் கூறும் அல்லாஹ் பதவி பற்றி கூறவேண்டிய முக்கிய இடமான 4:158-ல் கூற மறந்துவிட்டான்; தவறிழைத்துவிட்டான். (நவூதுபில்லாஹ்) அதை 1300 ஆண்டுக ளுக்குப் பிறகு எங்களது போலி நபி தெளிவு படுத்தியுள்ளார். அல்லாஹ் வுக்கே மார்க்கம் கற்றுக் கொடுக்கும் ஆற்றல் பெற்றவர் எங்கள் போலி நபி (பார்க்க 49:16) என்பது காதியானிகளின் விதண்டாவாதம்; உளறல்.

இப்படி குலாம் அஹ்மதை அஹ்மத் என்றும், நபி என்றும், மஸீஹ் என்றும் நிலைநாட்ட பல குர்ஆன் வசனங்களையும், ஹதீஸ்களையும் திரித்து, வளைத்து சுய விளக்கம் கொடுக்கத் துணிந்தவர்கள் காதியானி கள். வாக்களிக்கப்பட்ட மஸீஹ் குலாம் அஹ்மதுதான் என்று நிலை நாட்ட, ஈஸா(அலை) மரணித்துவிட்டார், அவர் மீண்டும் வரமாட்டார் என்று நிலைநாட்ட ஈஸா(அலை) பற்றிய வசனங்களையும், ஹதீஸ் களையும் திரித்து, வளைத்து சுயவிளக்கம் கொடுக்க முற்படுகின்றனர் காதியானிகள். அல்லாஹ்வின் அச்சமற்றவர்கள் அவர்கள்.

**அறிவு குறைந்த மக்களை ஏமாற்றும் தந்திரம்!**

சாதாரண மக்களை மதிமயக்கும், இன்னும் இரண்டு தந்திரங்களைக் கையாள்வர் காதியானிகள். எங்கள் நபி மிர்ஸா குலாம் பொய்யராக இருந்தால் அவரை கலீஃபாவாக ஏற்று உலகளாவிய அளவில் இவ் வளவு பெரிய ஜமாஅத் உருவாக முடியுமா? இதுவே அவரை உண்மைப்படுத்த போதுமானதாகும் என்பர்; பாவம் அவர்கள்! குர்ஆன், ஹதீஸ் ஞனமோ உலக அறிவோ முறையாக இருந்தால் இப்படி அவர்கள் பீற்ற முடியாது. ஈஸா(அலை) போதித்த நேர்வழியை-சத்திய பாதையை-சாந்தி மார்க்கத்தையே நாங்கள் போதிக்கிறோம் என்று கூறி திரித்துவக் கொள்கையை நிலைநாட்டும் போப்பின் தலை மையை ஏற்று உலகளாவிய அளவில் இந்தக் காதியானிகளை விட எண்ணிக்கையில், பண பலத்தில், சேவை செய்வதில், இன்னும் பல வகைகளில் அதிமேலான நிலையில் இருக்கும் கிறிஸ்தவர்கள் நேர் வழி யில் இருப்பதாக காதியானிகள் சொல்வார்களா? இறைவனுக்கு இணை வைக்கும் வழிகேட்டில் இருப்பதாகச் சொல்வார்களா?

அல்குர்ஆன் அல்பகரா 2:200, அல்மாயிதா 5:100, ஜுக்ருஃப் 43:33-35 இந்த இறை வாக்குகளை முறையாகப் படித்து உணர்ந் திருந்தால் இந்த காதியானி கள் இப்படி உளற மாட்டார்கள்.

அடுத்து அல்ஹாக்கா 69:44-47 இறைவாக்குகளைப் படித்துக் காட்டி, குலாம் அஹ்மது பொய் நபியாக இருந்தால், அல்லாஹ் அவரைப் பலமாகப் பிடித்து அவரது நாடி நரம்பைத் தறித்திருப்பான். அப்படி ஒன்றும் நடக்கவில்லை. இதுவே அவர் நபி என்பதற்கு ஆதார மாகும் எனப் பிதற்றுவர். இங்கும் அவர்கள் இந்த வசனங்களைத் திரித்து வளைத்தே சுய விளக்கம் கொடுக்கின்றனர். இந்த இறைவாக்கு கள் இறுதி இறைத் தூதர் முஹம்மது(ஸல்) அவர்களுக்குக் கொடுக்கப் பட்ட எச்சரிக்கையே அல்லாமல், நபி(ஸல்) அவர்களுக்குப் பின்னர் தோன்றிய பொய் நபிகள் பற்றிய அறிவிப்பல்ல. இந்த உண்மையை 69:38 முதல் 52 வரையுள்ள இறைவாக்குகளை நடுநிலையோடு படித்து விளங்குகிறவர்கள் உணர முடியும். இந்த உண்மையை பனீ இஸ்ராயீல் 17:73-75 இறைவாக்குகள் மேலும் உறுதிப்படுத்தப் போதுமானதாக இருக்கிறது.

இப்படி அல்குர்ஆன் வசனங்களைத் திரித்து வளைத்து சுய விளக்கங்கள் கூறி, குலாம் அஹ்மதை நபி என்று நிலைநாட்ட பெரும் பாடு படுவார்கள்; ஈஸா(அலை) மரணித்துவிட்டார்கள்; மீண்டும் வர மாட்டார்கள் என்று நிலைநாட்ட முற்படுவார்கள். இதுபற்றி '**காதியானி களின் ஆகாசப் புளுகு**' என ஒரு நூல் வெளியிட 1988-ல் அறிவிப்புச் செய்தோம். அப்படி ஒரு நூல் வெளி வந்தால், அதை வரிக்கு வரி மறுத்து ஒரு தனி நூல் அச்சிட்டு இலவசமாக மக்களுக்குக் கொடுப் போம் என அவர்களின் சமாதான வழியில் சவால் விட்டார்கள். ஆனால் நாம் அந்த நூலை வெளியிட்டு வருடங்கள் 20 உருண்டோடிவிட்டன. எமது அந்த நூலில், அவர்களின் புளுகு வாதங்கள் எடுபடும் பகுதி களுக்கு மட்டும் சமாதான வழியில் அவர்களால் பதில் கொடுக்க முடிந் ததே அல்லாமல், அவர்கள் 1988-ல் வாக்களித்து சவால் விட்டது போல் இன்றுவரை எமது நூலை வரிக்கு வரி மறுத்து தனி நூல் அச்சடித்து மக்களுக்கு இலவசமாக விநியோகிக்கவில்லை; எனவே அவர்களின் வாக்கிலும் அவர்கள் பொய்யர்களே. இப்படி அவர்களே பொய்யர்களாக இருந்து கொண்டு அடிக்கடி "லஃனதல்லாஹி அலல்காஃதிபீன்" "பொய்யர்கள் மீது அல்லாஹ்வின் சாபம் உண்டாகட்டும்" என்று மற்றவர்களைச் சபிப்பார்கள்; திருடன் மற்றவர்களை "திருடன் திருடன்" என்று கூவிக்கொண்டே தப்பித்து ஓடுவது போல்.

**காதியானிகளும் சமுதாயத்தை பிளவு படுத்துகிறவர்களே!**

ஆக காதியானிகள் போலி நபி குலாம் அஹ்மதை, வாக்களிக்கப் பட்ட நபி அஹமது என பிதற்றுகின்றனர். அவரை நபியாக ஏற்காத வர்களுக்கு குஃப்ர் ஃபத்வா கொடுக்கின்றனர். அவர்கள் பின்னால் நின்று தொழக் கூடாது என்று ஃபத்வா கொடுக்கின்றனர். முஸ்லிம் சமுதாயத்திலிருந்து தங்களை வேறுபடுத்திக்காட்ட தங்களை "அஹ்ம தியா முஸ்லிம்கள்" என்கின்றனர். அவர்களுக்கென்று தனிப் பள்ளிகள், தனி நிர்வாகம்-ஆதிக்கம் என முஸ்லிம் சமுதாயத்தை அவர்கள் பங்கிற்குப் பிளவு படுத்திவிட்டனர். ஆக ஒன்றுபட்ட ஒரே சமுதாயம் என அல்லாஹ் 21:92, 23:52 இரண்டு இடங்களில் கட்டளை யிட்டிருக்க, அதற்கு முரணாக சமுதாயத்தைப் பிளவுபடுத்துகின்றனர். எனவே காதியானிகளும் நேர்வழியில் இல்லை; வழிகேட்டிலேயே

இருக்கின்றனர் என்பது உறுதியாக தெரிய வருகிறது. ஆயினும் கபுரு வழிபாட்டுக் காரர்களை விட இவர்கள் உயர்நிலையில் இருப்பதை மறுக்க முடியாது.

**அஹ்மதியா முஸ்லிம்கள் லாகூர் பிரிவு!**

மிர்சா குலாம் அஹ்மதின் மகன் பொறுப்பு ஏற்றுக்கொண்ட பின்னரே மிர்சா குலாம் அஹ்மது நபி என்ற வாதத்தை அவர் எழுப்பினார். அதனால் அதுவரை அஹ்மதியா முஸ்லிம்களுடன் இருந்த முஹம்மது அலீ என்பவர், குலாம் அஹ்மது நபி என்பதை மறுத்து, அஹ்மதியா முஸ்லிம்கள்–லாகூர் பிரிவு என ஆரம்பித்ததாகச் சொல்கிறார்கள். இப்படி அஹ்மதியா முஸ்லிம்களும் இரண்டாகப் பிளவுபட்டனர்.

இந்த லாகூர் பிரிவு ஈஸா(அலை) அவர்கள் இறந்து விட்டார்கள்; இனி வரமாட்டார்கள் என்ற காதியானிகளின் கருத்தில் உடன்பட்டவர் களாகவே இருக்கிறார்கள். மற்றபடி இந்த லாகூர் பிரிவும், குலாம் அஹ் மதை நபியாக ஏற்றுள்ள காதியானிகளைக் கடுமையாக விமர்சிப்பவர் களாகவே இருப்பதாகவே அறிகிறோம். ஆயினும் லாகூர் பிரிவும் உல களாவிய பேரியக்கமான "ஜமாஅத் அல்முஸ்லிமீன்"ஐ பிளவுபடுத்தும் வழிகேட்டிலேயே இருக்கிறார்கள் என்பதை மறுப்பதற்கில்லை.

## அஹ்லெ குர்ஆன் இயக்கம்!

அடுத்து "அஹ்லகுர்ஆன்" – குர்ஆன் மட்டுமே மார்க்கம்; ஹதீஸ் அவசியமே இல்லை என்று கூறும் ஒரு பிரிவினரும் முஸ்லிம்களில் இருக்கின்றனர். இவர்களின் கொள்கை பற்றி ஆராயும்போது, குர்ஆன் மட்டுமே உடனுக்குடன் பதிந்து பாதுகாக்கப்பட்டுள்ளது; ஹதீஸ்கள் பதிந்து பாதுகாக்கப்படாததால் அவற்றில் கலப்படம் ஏற்பட்டுவிட்டது. ஹதீஸின் பெயரால் இலட்சக்கணக்கான கற்பனைக் கதைகள் இட்டுக் கட்டப்பட்டுள்ளன. அதனால்தான் சமுதாயத்தில் பல பிரிவுகள் ஏற்பட்டு விட்டன. ஹதீஸ்களைப் புறக்கணித்துவிட்டு அல்குர்ஆனை மட்டும் பற்றிப் பிடித்து நடந்தால் மட்டுமே சமுதாய ஒற்றுமை ஏற்படும். அதுவே நேர்வழி என வாதிடுகின்றனர். யூதக் கைக்கூலிகள் முஸ்லிம் உம்மத்தைப் பிளவுபடுத்தும் கெட்ட நோக்கத்துடன் ஆங்கிலத்தில்

எழுதிக் குவித்த நூல்களைப் படித்து மூளை சலவைச் செய்யப்பட்ட வர்களின் வாதம் இது. ஆனால் அவர்களின் இந்தக் கூற்றுக்கே முரணாக "அஹ்லகுர்ஆன்" கூட்டத்தாரிலும் இன்று பல பிரிவுகள் ஏற்பட்டுவிட்டன. ஒவ்வொரு பிரிவாரும் தங்கள் மனம்போன போக்கில் மனோ இச்சைக்கு ஏற்றவாறெல்லாம் விதவிதமான விளக்கங்கள் குர்ஆனுக்கு கொடுக்க ஆரம்பித்து விட்டனர். ஷைத்தானும் அவற்றை அவர்களுக்கு அழகாகக் காட்டி வழிகேட்டில் இழுத்துச் செல்கிறான். இப்படி நாம் சொன்னவுடன் அபூ அப்தில்லாஹ் குர்ஆனை பின் பற்றுவது வழிகேடு என்று சொல்கிறார் என்று அவர்களின் ஆதரவாளர் களை திசை திருப்புகின்றனர்.

**அஹ்ல குர்ஆன்கள் குர்ஆனை பின்பற்றவில்லை!**

அவர்கள் குர்ஆனைப் பின்பற்றுவதாக வாயளவில் சொல்கின்ற னரே அல்லாமல், அதிலுள்ள அல்லாஹ்வின் நேரடிக் கட்டளைப்படி நடக்கவில்லை. இவர்களின் இந்தப் போக்கு ஷைத்தானைப் பின் பற்றிச் செல்வதாகவே இருக்கிறது. அல்லாஹ் ஆதமுக்கு சுஜூது செய்யுமாறு கட்டளையிட்டான். ஷைத்தான் என்ன நினைத்தான்? சுஜூது அல்லாஹ்வுக்கு மட்டுமே செய்ய வேண்டும். மனிதனுக்கு எப்படி சுஜூது செய்வது? என்று சிந்தித்தானே அல்லாமல், ஆதமுக்கு சுஜூது செய்யு மாறு கட்டளை இடுவது யார்? என்பதைச் சிந்திக்கத் தவறி விட்டான். சுஜூது செய்வது அல்லாஹ்வுக்கு மட்டுமே உரியதாக இருந்தாலும், படைத்த எஜமானனான அல்லாஹ்வே ஆதமுக்கு சுஜூது செய்யு மாறு கட்டளையிடுகிறான். அல்லாஹ்வின் கட்டளைப்படி ஆதமுக்கு சுஜூது செய்தால், அது அல்லாஹ்வுக்கு அடிபணிவதாகவே இருக்கும்; ஆதமுக்கு சுஜூது செய்ய மறுப்பது, அல்லாஹ்வுக்கு அடிபணிய மறுப்ப தாகவே ஆகி அல்லாஹ்வின் வெறுப்பையும், தண்டனையையும் பெற்றுத்தரும் என்பதை சிந்தித்து விளங்கத் தவறிவிட்டான். அதனால் சபிக்கப்பட்டான்; விரட்டப்பட்டான். சுவர்க்கம் அவனுக்கு ஹராமாக்கப் பட்டது; நரகத்தில் இருப்பிடத்தைத் தேடிக் கொண்டான்.

மலக்குகள் ஆதமுக்கு சுஜூது செய்ததை ஆதாரமாகக் காட்டி, அத்து வைதம் எனும் வழிகேட்டு தரீக்காக்களைப் பின்பற்றுகிறவர்கள், தங்கள் ஷைகுகளுக்கு சுஜூது செய்வதை நியாயப்படுத்தி வழிகேட்டில் செல் கின்றனர். நிறைவு பெற்ற இஸ்லாத்தில் மனிதனுக்கு மனிதன் சுஜூது

செய்வதை அல்லாஹ் நபி மூலம் தடுத்துள்ளான் என்பதை வசதியாக மறந்துவிட்டு ஷைத்தானின் அடிச்சுவட்டைப் பின்பற்றுகின்றனர்.

ஷைத்தான் செய்த இதே தவறைத்தான் அஹ்லகுர்ஆன் பிரிவின ரும் செய்து, அல்லாஹ்வின் கோபத்திற்கு ஆளாகி வருகின்றனர். நபி யைப் பின்பற்றக் கட்டளையிடுவது யார்? படைத்த எஜமானனான அல்லாஹ்வே கட்டளையிடுகிறான். சுமார் 10 வசனங்களில் தனக்கு அடிபணியச் சொல்லும் இடங்களில் எல்லாம் தனது தூதருக்கும் அடிபணியச் சொல்கிறான் அல்லாஹ். அந்நூர் 24:56 இறைக்கட் டளையில்.

**(நம்பிக்கையாளர்களே!) நீங்கள் கிருபை செய்யப்படும் பொருட்டு, நீங்கள் தொழுகையை நிலைநிறுத்துங்கள்; இன்னும் ஜகாத்தைக் கொடுத்து வாருங்கள்; தூதருக்குக் கீழ்ப்படியுங்கள்.**

என்று நேரடியாகவே கட்டளையிட்டுள்ளான். ஆனால் இந்த அஹ்ல குர்ஆன் இயக்கத்தினரிடம் தூதருக்குக் கீழ்ப்படிதலும் இல்லை; தொழுகையும் இல்லை; ஒரு சில பிரிவினர் தொழுதாலும் அத் தொழுகை நபி வழியில் இல்லை; அவர்களின் மனோ விருப்பப்படி தொழுது வருகிறார்கள். ஆக இந்த இறைக்கட்டளைகளை நிராகரிக்கி றார்கள். தாஹா 20:90 இறைவாக்கில் ஹாரூன் (அலை) மக்களிடம் “என்னைப் பின் பற்றுங்கள்; என் கட்டளைக்குக் கீழ்ப்படியுங்கள்”என்று கூறியது இடம் பெற்றுள்ளது; இதல்லாமல் எல்லா நபிமார்களும் தங் களைப் பின்பற்றி நடக்கும் படி கட்டளையிட்டது குர்ஆனில் சுமார் 11 இடங்களில் இடம் பெற்றுள்ளது. இந்த அஹ்லகுர்ஆன் இயக்கத்தினர் இந்த அனைத்து குர்ஆன் வசனங்களையும் நிராகரிக்கிறார்கள். இவர் கள் எப்படி குர்ஆனை பின்பற்றியவர்கள் ஆக முடியும்?

### சொல்லுக்கும் செயலுக்கும் சம்பந்தமில்லை!

அஹ்ல சுன்னத் வல் ஜமாஅத் என்று கூறுவோரிடம் எப்படி நபியின் அசலான சுன்னத்துகள் இல்லையோ, தவ்ஹீத்வாதிகள் என்று பீற்றிக் கொள்வோரிடம் எப்படி அசலான தவ்ஹீத்-ஏகத்துவம் இல்லையோ, அதேபோல் அஹ்ல குர்ஆன் என்று பீற்றுவோரிடம் அசலான குர்ஆனைப் பின்பற்றும் தன்மை இல்லை. பெரும்பாலான குர்ஆன் வசனங்களை நிராகரித்துக் கொண்டு தங்களை அஹ்ல குர்ஆன் என்கின்றனர்.

இவர்களின் வினோதமான வாதம் என்ன தெரியுமா? நபிமார்களும் இறை அறிவிப்பின்படிதான் நடந்தார்கள். நபி(ஸல்) அவர்களின் வாழ்க்கை குர்ஆனாகவே இருந்தது. எனவே குர்ஆன் மட்டும் போதும். நபியின் நடைமுறைகளைக் கூறும் ஹதீஸ்கள் தேவை இல்லை என்பதாகும்.

## அல்லாஹ்வுக்கே கற்றுக் கொடுக்கும் அஹ்லகுர்ஆன் இயக்கவாதிகள்!

அல்லாஹ் 49:16-ல் கூறுவதுபோல் இவர்கள் அல்லாஹ்வுக்கே மார்க்கம் கற்றுக்கொடுக்க முற்படுகிறார்கள். குர்ஆன் மட்டும் போதும் என்றால் நபியைப் பின்பற்றும்படி பல இடங்களில் தேவையில்லாமல் அல்லாஹ் கூறி இருக்கிறான் என்று சொல்லாமல் சொல்கிறார்கள். இன்னும் தெளிவாகச் சொல்வதாக இருந்தால், நபிமார்களை அல்லாஹ் அனுப்பி இருக்கத் தேவையில்லை. அந்த நபிமார்களுக்கு இறக்கப்பட்ட தவ்ராத், ஜபூர், இன்ஜீல், குர்ஆன் போன்ற நெறி காட்டும் நூல்களை மட்டுமே இறக்கி இருந்தால், மக்கள் அவற்றைப் பார்த்து அதன் படி நடந்திருப்பார்கள் என்று சொல்லாமல் சொல்கிறார்கள்.

அவர்கள் ஷைத்தானுக்கு அடிமையாகாமல் முறைப்படி சிந்திப்பார் களேயானால், நபிமார்களின் செயல்முறை விளக்கங்கள் (ஹதீஸ்) இல்லாமல் மக்கள் நெறி காட்டும் நூல்களை (அல்குர்ஆன்) நேரடி யாகப் பார்த்து அதன்படி நடக்கும் ஆற்றல் பெற்றவர்களாக இருந்தால், நிச்சயமாக அல்லாஹ் நபிமார்களைத் தேர்ந்தெடுத்து அனுப்பும் அவசி யமே ஏற்பட்டிருக்காது. அந்த நபிமார்கள் கடவுள்களாகவும், அவதாரங் களாகவும், கடவுள் குமாரன்களாகவும், கடவுள் தன்மையுடையவர் களாகவும் கற்பனை செய்யப்பட்டு, மக்கள் கொடிய இணை வைப்பில்-ஷிர்க்கில் மூழ்கி இருக்கும் நிலையும் ஏற்பட்டிருக்காது. இப்படிப்பட்ட நிலையிலும் அல்லாஹ் நபிமார்களை ஏன் தேர்ந்தெடுத்து, அவர்கள் மூலம் இறையறிவிப்புகளை அவர்களின் செயல்முறைகள் மூலம் தெளிவு படுத்தக் கட்டளையிட்டான், (பார்க்க 2:213, 16:44,64) என்பதைச் சிந்தித்தாலே, நபி(ஸல்) அவர்களின் செயல்முறை விளக்கங்கள் முஸ்லிம்களுக்குக் கண்டிப்பாகத் தேவை என்பதை எளிதாக உணர முடியும். எனவே ஹதீஸ்கள் தேவை இல்லை; குர்ஆன்

மட்டும் போதும் என்ற அஹ்லகுர்ஆன் இயக்கவாதிகளின் கூற்று அர்த்தமற்ற பிதற்றலே அல்லாமல் ஏற்கத்தக்க வாதம் அல்ல.

## ஹதீஸ்கள் உடனுக்குடன் பதிந்து பாதுகாக்கப்படாதது ஏன்?

இன்னொரு அர்த்தமற்ற வாதத்தையும் அஹ்ல குர்ஆன் இயக்கத்தினர் வைக்கின்றனர். அதாவது ஹதீஸ்களையும் பின்பற்றி நடப்பதாக இருந்தால், அல்லாஹ் அல்குர்ஆனை உடனுக்குடன் பதிந்து பாதுகாக்கச் செய்தது போல், ஏன் ஹதீஸ்களையும் உடனுக் குடன் பதிந்து பாதுகாக்கச் சொல்லவில்லை? எனவே ஹதீஸ்கள் தேவை இல்லை என வாதிடுகின்றனர். இதிலும் இவர்கள் அல்லாஹ் வுக்கு மார்க்கத்தைக் கற்றுக் கொடுக்க முற்படுகின்றனர். (பார்க்க 49:16) அன்றைய காலத்தில் குர்ஆனையும், நபியின் நடைமுறைகளையும் உடனுக்குடன் எழுதிப் பாதுகாத்திருந்தால், இன்று அல்குர்ஆனுக்கும், ஹதீஸ்களுக்கு முள்ள வேறுபாடு தெரியாமல் போயிருக்கும்; குர்ஆன் வசனங்களை ஹதீஸ் என்றும், ஹதீஸ்களை குர்ஆன் வசனங்கள் என்றும், இந்தப் புரோகிதர்கள் கலப்படம் செய்து மார்க்கத்தில் பெரும் குழப்பத்தை ஏற்படுத்தி இருப்பார்கள். சுமார் 10 இலட்சம் பொய் ஹதீஸ்களை இட்டுக்கட்டியவர் களுக்கு இது முடியாத ஒரு காரியம் அல்ல.

இறை வெளிப்பாடு மூலம் கொடுக்கப்பட்ட குர்ஆனுக்கும், ஹதீஸ் களுக்கும் உள்ள வேறுபாடு எவ்வித சந்தேகத்திற்கும் இடமின்றி மக்கள் எளிதாகப் புரிந்து கொள்ளவே அல்லாஹ் இந்த ஏற்பாட்டைச் செய்துள் ளான் என்று விளங்குவதே முறையாகும். மேலும் அல்லாஹ்வின் சுன்னத்திற்கும், அல்லாஹ் நீதியாளன், நேர்மை வழுவாதவன் என்ற அவனது தனித்தன்மைகளுக்கும் உகந்ததாகும். அல்குர்ஆனுக்கு முன்னுள்ள, இறையருளிய நெறி காட்டும் நூல்கள் அனைத்தும் இந்தப் புரோகிதர்களால் கலப்படம் செய்யப்பட்டு அவற்றின் தூய நிலை மாசுபட்டதை அல்குர்ஆன் மூலம் அறிகிறோம். அப்படி இருந்தும் யூத கிறிஸ்தவர்களுக்கு அல்லாஹ் இட்ட கட்டளை என்ன? மனிதக் கரம் பட்டு கலப்படமாகியுள்ள தவ்றாத்திலும், இன்ஜீலிலும் காணப்படும் உண்மையான இறையறிவிப்புகளைக் கண்டறிந்து அதன்படி நடக்க வேண்டும் என்றே கட்டளையிட்டுள்ளான். அவை கலப்படமாகிவிட்டதால் அவற்றை புறக்கணித்துவிட்டு உங்கள் மனம்போன போக்கில் செயல்

படுங்கள் என அல்லாஹ் அனுமதி அளிக்கவில்லை. அல்குர்ஆன் இறுதி வழி காட்டும் நெறி நூலாகவும், உலகம் அழியும் வரை அதுவே வழிகாட்டி நூலாக நிலைத்திருக்கும் நிலை இல்லை என்றால், அல்குர் ஆனின் நிலையும் அதுவாகவே இருந்திருக்கும். ஆனால் அதற்கு மாறாக, அதாவது முன்னைய நெறி காட்டும் நூல்கள் விஷயத்தில் கடைபிடித்த நியதிக்கு மாறாக அல்குர்ஆன் உடனுக்குடன் பதியப்பட்டு பாதுகாக்கப்பட்டது போல், நபி நடைமுறைகளும் உடனுக்குடன் பதியப் பட்டு பாதுகாக்கப்பட்டிருந்தால், இதற்கு முன்னுள்ள நபிமார்களின் சமூகங்கள் நாளை மறுமையில் அல்லாஹ்விடம் ஒரு குற்றச் சாட்டை வைக்க வாய்ப்பு ஏற்படும்.

### அல்லாஹ் அநீதியாளனா?

"யாஅல்லாஹ்! முஹம்மது நபி(ஸல்) அவர்களின் சமூகத்திற்கு உனது வழி காட்டிகள் (குர்ஆன், ஹதீஸ்) அனைத்தையும் உடனுக் குடன் பதிவு செய்து பாதுகாத்துக் கொடுத்துவிட்டாய். எனவே அவர்கள் குர்ஆனையும், ஹதீ ஸையும் நேரடியாகப் பார்த்து அதன்படி நடக்கும் வாய்ப்பு பிரகாசமாக இருக்கிறது. ஆனால் அதற்கு மாறாக எங்களுக்கு நீ அருளியவை உடனுக்குடன் பதிந்து பாதுகாக்கப்படவில்லை. அதனால் இப்புரோகிதர்கள், அதில் மனிதக் கருத்துக்களைப் புகுத்தி அதை கலங்கப்படுத்தி விட்டார்கள். அதிலுள்ள நேர்வழியை– நீ அருளி யவற்றை மட்டும் பிரித்து எடுத்து நடப்பது எங்களுக்குப் பெரும் சிரமமாகி விட்டது. அதனால் நாங்கள் வழிகேட்டில் சென்றுவிட்டோம்; அதற்காக எங்களைக் குற்றப்படுத்தாதே" என்று அவர்கள் முறையிட்டால் அது நியாயமான முறையீடாகவே இருக்க முடியும்.

அதனால்தான், நபி(ஸல்) அவர்களுக்குப் பிறகு எந்த வகை நபியும் இல்லாத காரணத்தால், அல்குர்ஆனைப் பதியவைத்து பாதுகாக்கும் கட்டாயம் ஏற்பட்டது. அதே சமயம், முன்னைய சமூகங் களுக்குக் கொடுக்கப்பட்டிருந்த சோதனையான மனிதக் கலப்படங் களிலிருந்து சத்தியத்தை–நேர்வழியை கண்டறிந்து அதன்படி நடக்கும் கட்டாயம் இருந்தது போல், பாதுகாக்கப்பட்ட இறுதி வழிகாட்டி நூல் அல்குர்ஆனைப் பெற்றுள்ள முஸ்லிம் சமூகத்திற்கு, நபி நடைமுறை யில் – ஹதீஸில் மனிதக் கலப்படங்கள் நிறைந்துள்ள நிலையில்

அவற்றி லிருந்து சத்தியத்தை– நேர்வழியைக் கண்டறிந்து அதன்படி நடக்கும் கட்டாயம், அல்லாஹ்வால் சோதனையாகக் கொடுக்கப் பட்டுள்ளது என்று கூறினால், அதில் இந்த அஹ்லகுர்ஆன் இயக்கவாதிகள் என்ன தவறைக் காண முடியும்?

(பார்க்க 33:38, 62, 35:43, 40:85, 48:23)

### அஹ்லகுர்ஆன் இயக்கவாதிகளின் மௌட்டீகம்!

அல்குர்ஆன் வழங்கப்பட்ட, அல்குர் ஆனுக்கு விளக்கம் கொடுக்க அதிகாரம் கொடுக்கப்பட்ட (2:213, 16:44,64) நபியின் விளக்கங்கள் சுமார் 1200 வருடங்களுக்கு முன்னரே பதிவு செய்யப்பட்டு ஹதீஸ் களாக இருப்பவற்றை ஏற்க முடியாது என்றும், குர்ஆன் மட்டுமே போதும் என்றும், வாதிடும் அஹ்லகுர்ஆன் இயக்கவாதிகள் அதில் உண்மையாளர்கள் இல்லை. அல்குர்ஆனுக்கு விளக்கம் கொடுக்க எவ்வித அருகதையும், அதிகாரமும் இல்லாத யூதக் கைக்கூலிகளை வழிகாட்டிகளாகவும், ரசூலாகவும் ஏற்று, அவர்களின் மூடத்தனமாக சுய விளக் கங்களை இறைவாக்காக ஏற்றுச் செயல்பட்டு வழிகேட்டில் சென்று கொண்டிருக்கின்றனர். அப்படிப்பட்டவர்களின் சுய கருத்துக் களை அப்படியே வாந்தி எடுக்கின்றனரே அல்லாமல், இவர்கள் நேரடி யாக குர்ஆனை படித்துச் சிந்தித்து விளங்குபவர்களாக இல்லை. எப்படி ஷைத்தான், இதர பிரிவினைவாதிகளுக்கு வழிகேடுகளை நேர் வழியாகக் காட்டி மயக்குகிறானோ, அப்படி அதே மயக்கத்தில் இந்த அஹ்ல குர்ஆன் வாதிகளும் சிக்கி இருக்கிறார்கள்.

தமிழ்நாட்டில் அஹ்லகுர்ஆன் வாதிகள் செழித்து வளர 1997-ல் பிரிவுகள் பற்றிய விவாதத்தில், தவ்ஹீத் மவ்லவி(?) ஹதீஸ்களில் தன் மனம்போன போக்கில் விளையாடியதும், இன்று வரை அந்த ஷைத்தானியப் போக்கு தொடர்வதும் ஒரு முக்கிய காரணமாகும்.

எனவே இந்த அஹ்லகுர்ஆன் வாதிகளும் நேர்வழியில் இல்லை; ஒன்று பட்ட ஒரே சமுதாயத்தைப் பிளவுபடுத்தும் வகையில், நரகத்திற்கு இட்டுச் செல்லும் வழிகேட்டிலேயே சென்றுகொண்டிருக்கிறார்கள் என்பதை அறிய முடிகிறது.

## ஸலஃபி இயக்கம் !

அடுத்து, இமாம் இப்னு தைமிய்யா(ரஹ்) அவர்களின் ஒரு கூற்றை ஆதாரமாகக் கொண்டு, அவர்களின் காலத்திற்குப் பிறகு "ஸலஃபிகள்" என ஒரு புதிய பிரிவு தோன்றி நடைமுறையில் உள்ளது. இமாம் அவர் களின் காலத்தில் தக்லீத் என்ற மத்ஹபுகளின் பிடி மிகவும் ஆழமாக முஸ்லிம்களிடையே வேரூன்றிப் போயிருந்தது. அன்றைய மன்னர்கள் எல்லாம் மத்ஹபு வெறியில் மூழ்கி இருந்தனர். அதனால் இமாம் அவர் கள் நீண்ட காலம் சிறையில் வாடி மரணிக்க நேர்ந்தது. அப்படிப்பட்ட காலத்தில், மக்களை மத்ஹபு பிடியிலிருந்து விடுவிப்பது கல்லில் நார் உரிப்பது போன்று மிகமிகக் கடினமாக இருந்தது. எனவே அதற்கு ஒரு மாற்றுத் திட்டமாக வழிகேடுகள் அதிகம் மலிந்துள்ள காலத்தில் வாழ்ந்த கலஃபிகளான பின்னோர்களை தக்லீது செய்வதைவிட, வழிகேடுகள் மிகமிகக் குறைவான காலத்தில் வாழ்ந்த ஸலஃபிகளான முன்னோர் களை தக்லீது செய்யுங்கள் (முகல்லிது யுகல்லிதுஸ்ஸலஃப்); அது குறைந்த அளவு பாவத்தோடு போகும் என்ற கருத்தில் உபதேசம் செய்ததை இவர்கள் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார்கள்.

அந்த அடிப்படையில் குர்ஆனையும், ஹதீஸையும் ஸலஃபுகளான முன்னோர்கள் விளங்கியது போல்தான் நாம் விளங்க வேண்டும். அவர் களின் விளக்கப்படிதான் நாம் நடக்க வேண்டும். நம்மை ஸலஃபுகள் என அழைத்துக் கொள்ள வேண்டும் எனக் கூறி, முஸ்லிம் சமுதாயத்தி லிருந்து தங்களை வேறுபடுத்திக் காட்டுகிறார்கள்.

அதன் மூலம் சமுதாயத்தைப் பிளவு படுத்துகிறார்கள். இறைக் கட்டளைகளாக 21:92, 23:52 வசனங்களில் உள்ளவற்றை நிரா கரித்துப் புறக்கணிக்கிறார்கள். இந்த இரு இறைவாக்குகளிலும் அல்லாஹ் கூறுவதுபோல் அல்லாஹ்வுக்கு அடிபணிவதற்கு பதிலாக ஸலஃபுகளுக்கு அடி பணிந்து அல்லாஹ்வுக்குமாறு செய்கிறார்கள். அல்லாஹ்விடம் தக்வா-பயபக்தி இல்லாமல் ஸலஃபுகளுக்கு வழிப் படுகிறார்கள்.

அவர்கள் கீழ்க்கண்ட குர்ஆன் வசனங்களைப் படித்து உணர்வு பெற வேண்டும்.

**"யஃகூபுக்கு மரணம் நெருங்கியபோது, நீங்கள் சாட்சியாக**

**இருந்தீர்களா?'' அப்போது அவர் தம் குமாரர்களிடம்: ''எனக்குப் பின் நீங்கள் யாருக்கு அடிபணிவீர்கள்?'' எனக் கேட்டதற்கு, ''உங் கள் இறைவனுக்கு, உங்கள் மூதாதையர் இப்றாஹீம், இஸ்மாயீல், இஸ்ஹாக் ஆகியோரின் அதே ஏக இறைவனுக்கு அடிபணிவோம். நாங்கள் முஸ்லிம்களாக மட்டுமே இருப்போம்'' எனக் கூறினர்.** (2:133)

**அந்த உம்மத்(சமூகம்) சென்றுவிட்டது; அவர்கள் சம்பாதித் தவை அவர்களுக்கே; நீங்கள் சம்பாதித்தவை உங்களுக்கே! அவர்கள் செய்து கொண்டிருந்தது பற்றி நீங்கள் கேட்கப்படமாட் டீர்கள்.** (2:134)

**''இப்றாஹீமும், இஸ்மாயீலும், இஸ்ஹாக்கும், யஃகூபும், இன்னும் அவர்களுடைய சந்ததியினர் யாவரும் நிச்சயமாக யூதர் கள் அல்லது கிறிஸ்தவர்களே'' என்று கூறுகின்றீர்களா? (நபியே!) நீர் கேட்பீராக: ''(இதைப்பற்றி) உங்களுக்கு நன்றாகத் தெரியுமா அல்லது அல்லாஹ்வுக்கா? அல்லாஹ்விடமிருந்து தன்னிடம் வந் திருக்கும் சாட்சியங்களை மறைப்பவனைவிட அநியாயக்காரன் யார்? இன்னும் அல்லாஹ் நீங்கள் செய்பவைப் பற்றிப் பாராமுக மாக இல்லை.''** (2:140)

**அந்த உம்மத்து (சமூகம்) சென்றுவிட்டது. அவர்கள் சம்பாதித் தவை அவர்களுக்கே; நீங்கள் சம்பாதித்தவை உங்களுக்கே! அவர்கள் செய்து கொண்டிருந்தது பற்றி நீங்கள் கேட்கப் படமாட்டீர்கள்.** (2:141)

### முன்னோர்களை கண்மூடிப் பின்பற்றுபவர்கள் கோணல் வழி செல்பவர்களே!

முன் சென்றவர்கள் பற்றி, அதிலும் குறிப்பாக நபிமார்களைப் பற்றியே கூறும்போது, அல்லாஹ் தெள்ளத் தெளிவாக அவர்கள் செய்து கொண்டிருந்தது பற்றி உங்களிடம் கேட்கப்படமாட்டாது என்று நெற்றிப் பொட்டில் அடிப்பது போல் கூறி இருக்கும்போது, அல்லாஹ் வின் இக்கட்டளையை நிராகரித்துவிட்டு, முன்னோர்கள், அவர்கள் கலஃபிகள்–பின்னவர்களாக இருந்தாலும், ஸலஃபிகள் – முன்னவர் களாக இருந்தாலும் அவர்கள் நேராக செயல்பட்டார்களா; இல்லையா என்ற ஆய்விலும், விமர்சனத்திலும் நாம் இறங்குவது கூடாது;

அல்லாஹ்வின் கட்டளைப்படி குர்ஆனையும், ஹதீஸையும் நேரடியாக நாம் விளங்கியே செயல்பட வேண்டும் எனத் திட்டவட்டமாக அறிவிக்கப் பட்ட நிலையில், இந்த ஸலஃபி பிரிவினர், ஸலஃபிகள் குர்ஆன், ஹதீஸை விளங்கியது போல்தான் நாம் விளங்க வேண்டும், அவர்கள் வழிகாட்டியபடியே நாம் நடக்க வேண்டும் என்று கூறினால் அது நேர்வழியா? அல்லது கோணல் வழியா? சிந்தியுங்கள். இவர்களது கூற்றை நேரடியாகச் சொல்லும் ஒரேயொரு குர்ஆன் வசனத்தை யாவது தர முடியுமா? நிச்சயமாக முடியாது. 2:170, 9:100 போன்ற இறைவாக்குகளுக்கு சுய விளக்கம் கொடுத்து தங்களின் ஸலஃபி தத்துவத்தை நியாயப்படுத்துவர்.

புரோகிதர்கள், அவர்கள் தர்கா, தரீக்கா, மத்ஹபு, தக்லீது, தவ்ஹீது என்ற பெயரில் இயக்கம், ஜாக், ததஜ, காதியானி, அஹ்லகுர்ஆன், ஸலஃபி ஆக பிரிவுகளை ஆதரிக்கும் எந்த வகைப் புரோகிதர்களாக இருந்தாலும், அல்லாஹ்வுக்கும், அடியார்களுக்கும் இடையில் ஏதாவது ஒரு நொண்டிக் காரணத்தைச் சொல்லி, தரகர்களாகப் புகுந்து கொள்ளவே முற்படுகிறார்கள். அல்லாமல், குர்ஆனை அல்லாஹ் பாமர மக்களும் விளங்கும் நிலையில் விளக்கியுள்ளான்; நபியின் நடைமுறைகளும் இரவும் பகலைப் போல் தெள்ளத் தெளிவாக இருக்கின்றன. எழுதப்படிக்கத் தெரியாத பாமரனும் காதால் கேட்ட மாத்திரத்தில் விளங்கும் அளவில் அவை மிகமிக எளிதாக இருக் கின்றன. ஒவ்வொரு ஆணும், பெண்ணும் அல்குர்ஆனையும், ஹதீ ஸையும் நேரடியாகப் படித்து விளங்கி அதன்படி நடவுங்கள். இதுவே அல்லாஹ்வின் நேரடிக் கட்டளை என்று சொல்லக்கூடிய ஒரேயொரு புரோகிதனையும் பார்க்க முடியவில்லை.

**அல்லாஹ்வுக்கும் அடியானுக்கும் இடையில் தரகர்கள்!**

புரோகிதர்கள் அல்லாஹ்வுக்கும் அடியானுக்கும் இடையில் எப்படி யும் இடைத்தரகர்களாகப் புகுந்து கொள்ள வேண்டும் என்பதிலேயே குறியாக இருக்கிறார்கள். ஆனால் அல்லாஹ்வோ அடியானின் பிடரி நரம்பை விட அவனுக்குச் சமீபமாக இருப்பதாகக் கூறுகிறான். (பார்க்க காஃப் 50:16) இந்த நிலையில் அல்லாஹ்வுக்கும் அடியானுக்கும் இடையில் தரகர்களாக–புரோகிதர்களாகப் புக முயலும் இவர்களை நாளை மறுமையில் அல்லாஹ் எந்த அளவு கடுமையாகத் தண்டிப் பான் என்பது பற்றி இந்தப் புரோகிதர்களுக்கு சிறிதும் அச்சம் இருப்ப தாகத் தெரியவில்லை.

7:3, 33:36,66,67,68 வசனங்களிலுள்ள இறைக் கட்டளைகள் தெள்ளத் தெளிவாக அல்லாஹ்வுக்கு வழிபடவேண்டும்; அல்லாஹ் வின் தூதருக்கு வழிப்பட வேண்டுமேயல்லாமல், மூன்றாவதாக ஸலஃபுகளில் யாருக்கும் வழிப்பட வேண்டும் என்பதை திட்டமாக மறுத்துக் கூறுகின்றன. எனவே ஸலஃபுகளின் இக்கூற்று பெரும் தவறாகும். குர்ஆனும், ஹதீஸும் தெளிவாக நேரடியாகக் கூறும் காரியங்களில், கலீஃபாக்களின் கூற்றுக்கோ, நபிதோழர்களின் கூற்றுக்கோ அணுவளவும் அனுமதியே இல்லை; உதாரணமாக உமர்(ரழி) ஒரே நேரத்தில் மூன்று முறை சொல்லப்படும் தலாக் கணவன் மனைவி உறவை பிரித்துவிடும் என்று நடைமுறைப் படுத்தியது, உதுமான் (ரழி) ஜும்ஆவுடைய பாங்கை இரண்டாக ஆக்கியதாகச் சொல்லப்படுவது இரண்டும் ஒருபோதும் மார்க்கமாகாது. காரணம் இந்த இரண்டு விஷயங்களிலும் நபி(ஸல்) அவர்களின் வழி காட்டல் தெள்ளத் தெளிவாக இருக்கிறது. இங்கு கலீஃபாக்களின், நபி தோழர்களின் கருத்துக்களை விட அல்லாஹ்வினதும், அவனது தூதரி னதும் வழிகாட்டல் மிகமிக மேலானது என்ற முடிவுக்கு வருவதே நேர்வழியாகும். அல்லாஹ்வும், அவனது தூதரும் காட்டிய வழியைப் புறக்கணித்துவிட்டு, வேறு யாரும் காட்டிய வழியைப் பின்பற்றினாலும் அது கோணல் வழியாகும்; வழிகேடாகும்; நரகில் கொண்டு சேர்க்கும். காரணம் இங்கு அல்லாஹ்வின் சொல்லை விட, அவனது தூதரின் சொல்லைவிட, மனிதர்களின் சொல்லுக்கு முக்கியத் துவம் கொடுப்பதால் அது வழிகேடாகிறது.

### எப்போது நபி தோழர்களின் செயல்களை பின்பற்ற வேண்டும்?

அதே சமயம் நபி(ஸல்) அவர்கள் வழிகாட்டியதில் ஒரு மயக்கம் இருக்கிறது என்று வைத்துக் கொள்வோம். உதாரணமாக நபி(ஸல்) அவர்களிடம் அபூபக்கர்(ரழி) அவர்களின் தந்தை அபூகுஹாஃபா மிகமிக வயதான காலத்தில், அவரை ஒரு கூடையில் வைத்து தூக்கிக் கொண்டு வந்தனர். அவரது தலை மயிர் தும்பைப் பூவைப் போல் வெள்ளை வெளேர் என்று இருந்தது. அந்த மயிருக்கு சாயம் பூசும்படி கட்டளை யிடும்போது "இவருக்குக் கருப்பு நிறத்தைத் தவிர்த்துக் கொள்ளுங்கள்" என்று கட்டளையிடுகிறார்கள். இங்கு மிகமிக வயதானவர்கள் மட்டுமா கருப்பு நிறத்தை தவிர்க்க வேண்டும்? அல்லது இளமையில் பித்த நரை ஏற்படுகிறவர்களும் கருப்பு நிறத்தை தவிர்க்க

வேண்டுமா? என்ற மயக்கம் ஏற்படுகிறது. இங்கு நபிதோழர்களில் சிலர் கருப்புச்சாயம் பூசிய ஆதாரம் கிடைக்கிறது.

அதேபோல் சேமித்து வைக்கப்பட்ட பொருள் ஒரு வருடம் செலவழி யாமல் இருந்தால்தான் ஜகாத் கடமையாகிறது; ஜகாத் கொடுத்த பொருளுக்கே மீண்டும் மீண்டும் வருடாவருடம் ஜகாத் கொடுக்க வேண்டும் என்று கூறும் ஹதீஸ்கள் ஆதாரபூர்வமானவை. ஆனால் இப்போது புதிதாக ஒரு நவீன இமாம்(?) தனது வறட்டு வாதங்களை எழுப்பி இவை ஹதீஸ்கள் அல்ல; அலீ(ரழி) அவர்களின் சொந்தக் கூற்று; உமர்(ரழி) அவர்களின் சொந்தக் கூற்று என்று அதிகப்பிரசங்கித் தனமாகக் கூறிக்கொண்டு, தான் கூறுவதுதான் மிகச் சரியானது என பிடிவாதம் பிடிக்கிறார். இங்கு ஒரு முக்கிய விஷயத்தை நாம் கவனத்தில் கொள்ள வேண்டும். அறிவிப்பாளர்கள் பற்றிய நிறை குறைகளில் முன்னர் ஆய்வு செய்து எழுதப்பட்டுள்ளவற்றை மட்டுமே ஆதாரமாக எடுக்க வேண்டும். இன்றைக்கு எவரும் புதிதாகக் கற்பனை செய்து நிறை குறைகளைப் பற்றிச் சொல்ல தகுதி பெறமாட்டார். இதில் தவ்ஹீது மௌலவி(?) ஆணவத்துடன் பெருந்தவறு இழைக்கிறார்.

### தவறாக விளங்கிக் கொண்ட தவ்ஹீத் மவ்லவி(?)

1985-ல் குருகுல புரோகித மதரஸாவில் ஆசிரியராகவும், மத்ஹபு பிடியில் வலுவாக சிக்கியவராகவும் இருக்கும் நிலையில், நாம் கூறிய இரண்டு கருத்துக்களை மிகமிகத் தவறாக அவர் விளங்கியதால் இப்படிப்பட்ட தவறான வாதங்களை வைக்கிறார். சமாதி சடங்குகள் செய்யும் முஸ்லிம்களை முஸ்லிம்கள் இல்லை; காஃபிர்கள் என்கிறார்; அவர்கள் பின்னால் நின்று தொழக்கூடாது என்கிறார். மார்க்கம் என்றால் அது குர்ஆன், ஹதீஸ் மட்டுமே; குர்ஆன், ஹதீஸில் இல்லாதது ஒரு போதும் மார்க்கமாகாது. எந்த ஒரு விஷயமென்றாலும் குர்ஆனில் பாருங்கள்; ஹதீஸில் பாருங்கள். அவற்றில் இல்லை என்றால் அதை தூக்கி எறியுங்கள் என்று நாம் சொன்னதைத் தவறாக விளங்கிக் கொண்டார். குர்ஆனுக்கும், ஹதீஸுக்கும் முன்னோர்கள் கொடுத்த விளக்கங்களை தூக்கி எறிந்துவிட்டு, இப்போது நாமாக புதுப்புது விளக்கங்கள் கொடுக்க வேண்டும் என்று தவறாக விளங்கிக் கொண்டார். அந்த தவறான விளக்கத்தால், அல்குர்ஆனுக்கு தஃப்ஸீர்- விளக்கம் எழுதுவதாகக் கூறி, சில இடங்களில் மூடத்தனமான

விளக்கங்களையும், சில இடங்களில் குஃப்ரையும், ஷிர்க்கையும் ஏற்படுத்தும் விளக்கங்களையும் கொடுத்து அவரை நம்பியுள் ளவர்களைப் பெரும் வழிகேட்டில் இழுத்துச் சென்றுள்ளார்.

**முஹ்க்கமாத் வசனங்களுக்கு தரும் சுய விளக்கம் ஒரு வழிகேடு!**

அன்று நாம் கூறியது, அல்குர்ஆனில், அதிலும் குறிப்பாக "முஹ்க்கமாத்" வசனங்களுக்கு நேரடியாகக் கூறப்படும் கருத்து ஒன்றே ஒன்றுதான்; அவற்றில் இரண்டாவது கருத்துக்கு இடமே இல்லை; அப்படியே மேல் விளக்கம் கொடுப்பதாக இருந்தாலும் அந்த அதிகாரம் நபி(ஸல்) அவர்களுக்கு மட்டும்தான் (2:213, 16:44,64) உண்டு. மற்றபடி அன்றுள்ளவர்களும் சரி, இன்றுள்ளவர்களும் சரி "முஹ்க்கமாத்" வசனங்களுக்கு சுய விளக்கம் கொடுக்கும் அதிகாரம் இல்லை என்பதே.

இதேபோல் இன்னொரு கருத்தையும் தவறாக விளங்கிக் கொண் டார்; குறைஷ் காஃபிர்களை விட இன்றைய சமாதி வழிபாடு செய்யும் முஸ்லிம்கள் கேடுகெட்டவர்களாக இருக்கிறார்கள்; குறைஷ் காஃபிர்கள் நபிமார்களையும், உண்மையான நல்லடியார்களையும் மட்டுமே, அல்லாஹ்வுக்கும் தங்களுக்கும் இடையில் தரகர்களாகக் கொண்டு அவர்களை வழிபட்டு வந்தனர். ஆனால் இன்றைய முஸ்லிம்களோ குடிகாரர்களையும், கஞ்சா மஸ்தான்களையும், பயித்தியக்காரர்களை யும், பீங்காட்டு அப்பாக்களையும், அதற்கு மேலேயும் போய் கழுதை களையும், கட்டைகளையும் புதைத்து வைத்துக் கொண்டு தர்கா என்ற பெயரால் அவற்றிற்கு வழிபாடு செய்து வருகிறார்கள் என்று கூறி வருகிறோம். இதைத் தவறாகப் புரிந்து கொண்டு சமாதி வழிபாட்டுக் காரர்கள் எல்லாம் முஷ்ரிக்குகள், காஃபிர்கள் என்று இவ்வுலகிலேயே தீர்ப்பளிக்க முற்பட்டுள்ளார். தீர்ப்பளிக்கும் அதிகாரம் பெற்ற அல்லா ஹ்வே, அந்த தீர்ப்பை மறுமைக்கென்று ஒத்திவைத்திருக்கும் நிலை யில், இவரோ அல்லாஹ்வின் அந்த தனி அதிகாரத்தைத் தன் கையில் எடுத்துக் கொண்டு, இவ்வுலகிலேயே தீர்ப்பளிக்கத் துணிந்துள்ளார். அவர்கள் பின்னால் தொழக்கூடாது என தீர்ப்பளித்து தனது ஆதர வாளர்களைத் தூண்டி போட்டியாக தனிப் பள்ளிகள் கட்ட ஏற்பாடு செய்து வருகிறார்.

**அவர் கவனிக்கத் தவறியது!**

இங்கே அவர் கவனிக்கத் தவறிய மிக முக்கிய விஷயம், குறைஷ் காஃபிர்கள் இறுதி நபியையும், இறுதி வழிகாட்டும் நூல் அல்குர்ஆனை யும் ஏற்கமாட்டோம் என பகிரங்கமாக மறுத்தார்கள். ஆனால் இன்றைய முஸ்லிம்களோ இறுதி நபியையும், இறுதி வழிகாட்டும் நுலையும் மனப் பூர்வமாக ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். இந்த மாபெரும் வித்தியாசத் தைக் கவனிக்க தவறிவிட்டார். அன்று நபியையும், அல்குர்ஆனையும் மனப்பூர்வமாக ஒப்புக் கொள்ளாமல் உதட்டளவில் சொல்லிக் கொண்டு, குறைஷ் காஃபிர்களுடன் இணைந்து ஷிர்க், குஃப்ரில் மூழ்கி இருந்த நயவஞ்சகர்களையே முஷ்ரிக், காஃபிர் என முடிவு கட்டி, அவர் களை முஸ்லிம் சமுதாயத்திலிருந்து வெளியேற்ற நபி(ஸல்) துணிய வில்லை. அவர்களின் இணைவைப்புச் செயல்களை நபியும், நபி தோழர்களும் தங்கள் கண்ணால் பார்த்துக் கொண்டிருந்தும், அல்லா ஹ்வே அவர்கள் முடிவு நரகம் என்று தெளிவாக அறிவித்த பின்னரும் அவர்களை முஸ்லிம் சமுதாயத்திலிருந்து வெளியேற்றவோ, அல்லது தன்னை அவர்களிலிருந்து வேறுபடுத்திக் காட்ட முஸ்லிம் அல்லாத ஒரு பெயரைச் சூட்டிக் கொள்ளவோ நபி(ஸல்) துணியவில்லை. அந்த அதிகாரம் அல்லாஹ்வுக்கு மட்டுமே உண்டு; தனக்கு அந்த அதிகாரம் இல்லவே இல்லை என்பதை நபி(ஸல்) தெளிவாக அறிந்திருந்தார்கள்.

ஆக இஸ்லாத்தை ஒப்புக்கொள்ளாத குறைஷ் காஃபிர்களுக்கும், இஸ்லாத்தை ஒப்புக் கொண்டுவிட்டு, சமாதி வழிபாடுகளில் மூழ்கி இருக்கும் முஸ்லிம்களுக்குமுள்ள மாபெரும் வேறுபாட்டை அறியத் தவறியதால், நாம் அன்று சொன்னதைத் தவறாகப் புரிந்துகொண்டு ஷிர்க், குஃப்ர் ஃபத்வா கொடுக்கிறார். அவர்கள் பின்னால் நின்று தொழக்கூடாது என ஃபத்வா கொடுத்து, நபி(ஸல்) அவர்களது அந் தஸ்தை விட தனது அந்தஸ்து உயர்வானது என இறுமாப்புக் கொள் கிறார். இவ்வாறு தான் இப்னுல் அரபி போன்ற சில சூஃபிகள் வழி கெட்டுச் சென்றார்கள். அதே வழிகேட்டில் இன்று இவரும் செல்கிறார்.

ஆக இவரின் இந்த தவறான வாதப்படி, ஜகாத் வருடாவருடம் கொடுத்த பொருளுக்கே மீண்டும், மீண்டும் கொடுக்க வேண்டும் என்று கூறும் ஹதீஸ்களில் சில கோளாறுகள் இருப்பதாகவே வாதத்திற்காக ஒப்புக்கொள்வோம். ஆயினும் அவை அலீ(ரழி), உமர்(ரழி), இருவரின்

சொந்தக் கூற்று என்றே வாதிடுகிறார். இப்போது நாம் சிந்திப்போம். ஒரு வருடம் பூர்த்தியான பின்னர்தான் ஜகாத் கடமையாகிறது. கொடுத்த பொருளுக்கே மீண்டும் மீண்டும் வருடா வருடம் ஜகாத் கடமை என்பது அலீ(ரழி), உமர்(ரழி), இருவரின் சுய கருத்து என்றே வைத்துக் கொள்வோம். இப்போது இவர் கூறும் கொடுத்த பொருளுக்கு மீண்டும் மீண்டும் ஜகாத் கொடுக்க வேண்டியதில்லை என்று குர்ஆனிலும் இல்லை; ஹதீஸிலும் இல்லை; இது இவரின் சுய கருத்துதான்; ஜகாத் கொடுங்கள் என்பதை இப்படித்தான் விளங்க வேண்டும் என்பதுதான் இவரின் வாதம்.

**கலீஃபாக்களை விட ஆற்றல் மிக்கவரா?**

இந்த இடத்தில் இவரின் வாதம் என்னவென்றால் உமர்(ரழி) விளங்கியதைவிட, அலீ(ரழி) விளங்கியதைவிட நான்தான் சரியாக விளங்குகிறேன். நான்தான் அவர்களைவிட ஆற்றல்மிக்கவன் என்று சொல்லாமல் சொல்கிறார். இது அடிமுட்டாள்த்தனமான அகந்தை-ஆணவம் நிறைந்த வாதமாகும். உமர்(ரழி) அவர்களும், அலீ(ரழி) அவர்களும் நபி(ஸல்) அவர்களுடன் மிக நீண்ட காலம் வாழ்ந்திருந்தும், பழகி இருந்தும், ஜகாத்தை நடைமுறைப்படுத்தியதை நேரடியாகப் பார்த்துக் கொண்டிருந்தும், அவர்கள் ஜகாத் கொடுக்கும் முறையை சரியாக விளங்கவில்லை. ஆனால் 1400 ஆண்டுகளுக்குப் பின்னர் வாழும் தான் நபி(ஸல்) அவர்களுடன் வாழவோ, பழகவோ வாய்ப்பு கடுகளவும் இல்லாத நிலையிலும், ஜகாத்தை எப்படி நடைமுறைப் படுத்தினார்கள் என்பதை தான்தான் சரியாகப் புரிந்து விளக்குவதாகக் கூறுகிறார் என்றால் இது எந்த அளவு ஆணவமிக்க, ஷைத்தானிய வாதம் என்பதை சுய அறிவைப் புரோகிதர்களிடம் அடகு வைக்காமல், சிறிது சிந்தித்தாலே விளங்க முடியும்.

ஆனால் இங்கும் ஸலஃபி பிரிவினர் விளங்க வேண்டியது, இந்த இடத்திலும் ஸலஃபிகளைப் பின்பற்ற வேண்டும் என்ற கொள்கைக்கு இடம் இல்லை; இஸ்லாத்தில் ஒரு விஷயத்தை விளங்குவது சம்பந்தமாக, குர்ஆன், ஹதீஸில் நேரடியாகச் சொல்லப்படவில்லை என்ற தடுமாற்றம் ஏற்பட்டால், அதில் நபி(ஸல்) அவர்களுடன் பழகி, அவர்களின் நடை முறையை நேரடியாகப் பார்த்துக் கொண்டிருந்த நபிதோழர்களின் நடைமுறை ஆதாராகக் கிடைத்தால், நமது அறிவுக்கு

பட்டதைவிட அவர்களின் நடைமுறையை ஏற்று நடப்பதே நேர்வழி யாகும். இது அவர்களை தக்லீது செய்வதாகாது; எனவே ஸலஃபி பிரிவுக்கு அவசியமே இல்லை.

எனவே ஸலஃபிகள் எனக் கூறிக் கொள்வோரும் தங்களை முஸ்லிம் சமுதாயத்திலிருந்து வேறுபடுத்தி, பிளவு படுத்திக் காட்டும் நோக்கத்துடன் 21:92, 23:52லிலுள்ள இறைக் கட்டளைகளை நிராகரிப்பதால் அவர்களும் நேர்வழியில் இல்லை; கோணல் வழியிலேயே செல்கின்றனர். ஆக இப்படி முஸ்லிம்களிடையேயுள்ள அனைத்துப் பிரிவினர்களையும் முழுமையாக குர்ஆன், ஹதீஸ் வெளிச்சத்தில் ஆராய்ந்து, இந்த அனைத்து வகைப் பிரிவுகளும் நபி(ஸல்) அவர்கள் காட்டித்தராத பிரிவுகளே. அவற்றில் எதுவுமே நேர்வழியில் இல்லை; கோணல் வழிகளே என முடிவு செய்தோம். இந்த இடத்தில் அன்ஆம் 6:153ல் உள்ள இறைக் கட்டளை எமக்கு நேர்வழி காட்டிற்று. அது வருமாறு.

**நிச்சயமாக இதுவே என்னுடைய நேரான வழியாகும்; ஆகவே இதனையே பின்பற்றுங்கள். இதர வழிகளை நீங்கள் பின்பற்ற வேண்டாம். அவை உங்களை அவனுடைய வழியைவிட்டுப் பிரித்து விடும்; நீங்கள் (ஒரே நேர்வழியைப் பின்பற்றி) பயபக்தி உடையவர்களாக இருப்பதற்கு இவ்வாறு அவன் உங்களுக்குப் போதிக்கிறான்.** (6:153)

இந்த இறைவாக்கை நபி(ஸல்) மிக அழகாக விளக்கியுள்ளார்கள். நாங்கள் நபி(ஸல்) அவர்களோடு இருந்தோம். அவர்கள் தரையில் ஒரு நேர்கோடு வரைந்தார்கள்; அதன் வலது பக்கம் இரண்டு கோடுகளையும், இடது பக்கம் இரண்டு கோடுகளையும் வரைந்தனர். பின்னர் நடுவிலுள்ள நேர் கோட்டில் கையை வைத்துக் கொண்டு ''இதுவே அல்லாஹ்வின் நேர்வழியாகும்'' என்று கூறி பின்னர் மேலேயுள்ள இறைவாக்கை ஓதிக் காட்டினார்கள். இப்னு மஸ்வூத்(ரழி) திர்மிதீ.

இவை அனைத்தையும் நோக்கும்போது, நேர்வழி ஒன்றே; பிரிவு களுக்கு மார்க்கத்தில் கடுகளவும் அனுமதி இல்லை. அல்லாஹ் நமக்கு சூட்டிய பெயர் "முஸ்லிமீன்-முஸ்லிம்கள்". இது அல்லாத பிரிதொரு பெயர் நமக்கு இல்லை; நபிமார்கள் செய்த பணிகள் அனைத்தையும்

செய்பவர்கள் தங்களை “முஸ்லிம்கள்” என்றே விளம்பரப்படுத்த வேண்டும்; வேறு பெயர்கள் கூடாது. 21:92, 23:52-ல் உறுதியாக நமது சமுதாயம் ஒன்றுபட்ட ஒரே சமுதாயம்; வேற்றுமைக்கோ, பிரிவினைக்கோ இடமே இல்லை எனக் கடுமையாக எச்சரித்துள்ளான். 21:92-ல் அல்லாஹ் தனக்கே அடிபணிய வேண்டும்; வேறு யாருக்கும் அடிபணியக் கூடாது என கட்டளை இடுகிறான். 23:52-ல் அல்லாஹ் தன்னிடம் மட்டுமே பயபக்தி கொள்ளுமாறு கட்டளையிடுகிறான். வேறு யாரிடமும் பயபக்தி கொள்ளலாகாது என்கிறான். முஸ்லிம் உம்மத்-சமுதாயம் ஒரே ஜமாஅத்தாகத்தான் இயங்க முடியும். நபி(ஸல்) அதை “ஜமாஅத் அல் முஸ்லிமீன்” என அடையாளம் காட்டியுள்ளனர் என்பதை எளிதாக விளங்கமுடிகிறது.

## தோழர் அப்துல் ஹமீது காதிரின் பிரசுரம் :

இந்தத் தெளிவான ஆதாரபூர்வமான ஹதீஸையும் தோழர் அப்துல் ஹமீது காதிர் மறுத்து “புரியாத மர்மம் அல்ல இஸ்லாம்” என்ற தலைப்பில் நான்கு பக்க பிரசுரம் ஒன்று வெளியிட்டுள்ளார். இந்த அவரது பிரசுரமே அவர் இன்னும் இஸ்லாத்தைச் சரியாகப் புரியாத ஒருவராகவே இருக்கிறார் என்பதை ஊர்ஜிதப்படுத்துகிறது. அந்தப் பிரசுரம் கூறுவதை விரிவாகப் பார்ப்போம்.

யூதக் கைக்கூலிகளில் சிலர் இஸ்லாத்தை களங்கப் படுத்தி முஸ்லிம்களிடையே பிளவை ஏற்படுத்தும் கெட்ட நோக்கத்துடன் இஸ்லாத்தை விளக்கப் போவதாகக் கிளம்பி ஆங்கிலத்தில் பல நூல்களை எழுதியுள்ளனர். அவர்களின் விஷமத்தனத்தைப் புரிந்து கொள்ளாமல் அந்நூல்களைப் படித்து மூளைச் சலவை செய்யப் பட்டவர்களில் ஒரு கூட்டம் ஹதீஸ்கள் தேவை இல்லை; குர்ஆன் மட்டும் போதும் என்று கூறி ஆதாரபூர்வமான ஹதீஸ்களையும் நிராகரித்து விட்டு, அல்குர்ஆன் வசனங்களுக்கு மனம்போன போக்கில் சுய விளக்கம் கொடுத்த சிலரின் வழிகெட்டக் கொள்கையை ஏற்று வழிகெட்டுச் செல்வதை முன்னர் விரிவாகப் பார்த்தோம்.

அதே வரிசையில் பிரிதொரு சாரார் அதுபோன்ற ஆங்கில நூல்களைப் படித்துவிட்டு, அவற்றால் மூளைச் சலவை செய்யப்பட்டு ஒரு பக்கம் ஹதீஸை ஏற்றும், மறு பக்கம் ஹதீஸை நிராகரித்தும் இரண்டும் கெட்டான் நிலையில் இரட்டை வேடமிடுபவர்களாக

இருக்கிறார்கள். அப்படிப்பட்டவர்களில் ஒருவரான இத் தோழர் “புரியாத மர்மம் அல்ல இஸ்லாம்” என்ற இந்தத் தலைப்பில் ஒரு பிரசுரம் வெளியிட்டு, அவரது புரியாத நிலையை வெளிச்சம் போட்டுக் காட்டியுள்ளார்.

சுன்னாவுக்கு “செயல்பாடுகளை தாங்கி வரும் செய்திகள்” என்றும் ஹதீஸ்களுக்கு “சொற்களை தாங்கி வரும் செய்திகள்” என்றும் பிரசுரம் வெளியிட்டு தானும் குழம்பி மக்களையும் குழப்பியுள்ளார். வழமை போல் இந்த இரண்டு அரபி பதங்களுக்கும் அல்குர்ஆன் என்ன பொருள் தருகிறது என்று பார்ப்போம்.

**சுன்னா இடம் பெறும் வசனங்கள் :**

8:38, 15:13, 17:77, 18:55, 33:38,62, 35:43, 40:85, 48:23

இந்த இறைவாக்குகளை படித்துப் பார்ப்பவர்கள் இந்த சுன்னா என்ற அரபி பதம் வழிமுறை, செயல்முறை, நடைமுறை போன்ற பொருட்களில் பயன்படுத்தப்பட்டுள்ளதை அறியலாம். செய்தி என்பதற்கு இங்கு இடமே இல்லை.

**ஹதீஸ் இடம் பெறும் வசனங்கள் :**

4:42, 78,87,140, 6:68, 7:185, 12:111, 18:6, 20:9, 31:6, 33:53, 39:23, 45:6, 51:24, 52:34, 53:59, 56:81, 66:3, 68:44, 77:50, 79:15, 85:17, 88:1.

இந்த இறைவாக்குகளில் ஹதீஸ் என்ற அரபி பதம் விஷயம், செய்தி, பேச்சு, வரலாறு, சொல் போன்ற பொருள்களில் பயன்படுத்தப் பட்டுள்ளதை அவற்றைப் படித்துப் பார்ப்பவர்கள் அறிய முடியும்.

**இஸ்லாமிய நடைமுறை!**

இஸ்லாமிய வழக்கில் பெரும்பாலும் சுன்னா நபி(ஸல்) அவர்களின் நடைமுறைகளையும், ஹதீஸ் அந்த சுன்னா என்ற நடைமுறைகளை செய்தியாக நமக்கு அறியத் தருவதையும் குறிக்கிறது. மற்றபடி மேற்படி பிரசுரத்தை வெளியிட்ட சகோதரர் சொல்வது போல் சுன்னா– “செயல் பாடுகளை தாங்கிவரும் செய்திகள்” என்றும், ஹதீஸ்–சொற்களைத் தாங்கி வரும் செய்திகள் என்று எழுதி இருப்பது மிகவும் தவறாகும். அல்குர்ஆனைப் படித்து சிந்திக்காமல், ஆங்கில நூல்களை மட்டும் உருப்போட்டிருப்பதால் ஏற்படும் மோசமான விளைவாகும் இது.

ஹதீஸ் எனும்போது நபி(ஸல்) அவர்களின் சொல், செயல், அங்கீகாரம் என்ற மூன்று வழிமுறைகளை–செயல்முறைகளை–நடைமுறைகளை 1429 ஆண்டுகளுக்குப் பிறகும் நமக்கு அறியத்தருவதாகும். நபி(ஸல்) அவர்களின் சுன்னாவான சொல், செயல், அங்கீகாரத்தை அன்று நபி தோழர்கள் தங்கள் கண்களால் கண்டு, காதுகளால் கேட்டு நேரடியாக அறிந்து கொண்டது போல், நபி(ஸல்) அவர்களின் மறைவுக்குப்பிறகு உலகம் அழியும் வரை வாழும் மனிதர்கள் அவற்றை நேரடியாகக் கண்களால் கண்டு, காதுகளால் கேட்டு அறியும் வாய்ப்பு நிச்சயமாகக் கிடையாது.

இன்று நாம் நபி(ஸல்) அவர்களின் சுன்னாவான சொல், செயல், அங்கீகாரம் மூன்றையும் ஏடுகளில் ஹதீஸ்களாகப் பதியப்பட்டுள்ளதை நேரடியாகப் படித்தோ, பிறர் படிப்பதைக் கேட்டோதான் அறிய முடியும். எனவே சகோதரர் சுன்னாவுக்கும், ஹதீஸுக்கும் கொண்டிருக்கும் பொருள் தவறு என்பதை அறிய முடியும்.

ஆனால் அல்குர்ஆன் வசனங்கள் உடனுக்குடன் பதியப்பட்டு பாதுகாக்கப்பட்டது போல், நபி(ஸல்) அவர்களின் சுன்னா உடனுக்குடன் செய்தி யாக–ஹதீஸாக பதியப்பட்டு பாதுகாக்கப்படவில்லை. எனவே தூய **மார்க்கத்தைக்** கலப்படம் செய்து **மதமாக்கி** அதைப் பயன்படுத்தி வயிறு வளர்க்கும் யூதக் கைக்கூலிகளான புரோகிதக் கும்பல் லட்சக்கணக்கான பொய் ஹதீஸ்களை இட்டுக்கட்டி மக்களிடையே பரப்பியுள்ளனர்; பரப்பி வருகின்றனர். யூசுஃப் 12:111–ல் “இது இட்டுக் கட்டப்பட்ட செய்தி இல்லை'' என்று வருகிறது. ஆக புரோகிதர்கள் இட்டுக்கட்டிய செய்திகள் எல்லாம் ஹதீஸ்கள் என்ற பெயரில் மக்களிடையே வலம் வருகின்றன. ஆதாரபூர்வமான ஹதீஸ்கள் ஆறாயிரத்தைத் தாண்டாது என்றால், இட்டுக்கட்டப்பட்ட, பலவீனமான செய்திகள்–ஹதீஸ்கள் பத்து இலட்சத்தைத் தாண்டுகின்றன. இதிலிருந்தே இந்தப் புரோகிதர்களின் கோணல் புத்தியும், கைவரிசையும் தெரிய வரும்.

### நேர்வழி நடப்பவர்கள்!

ஆக இட்டுக்கட்டப்பட்ட, பலவீனமான ஹதீஸ்களிலிருந்து ஆதாரபூர்வமான ஹதீஸ்களைப் பிரித்தெடுத்து அதன்படி நடப்பது நேர்வழி

நடக்கும் முஸ்லிம்களின் கட்டாயக் கடமையாகும். மற்றபடி ஹதீஸ் களை முற்றிலுமாகப் புறக்கணிப்பவர்களும் கோணல் வழிகளில் செல்கிறார்கள்; சுன்னாவைத்தான் பின்பற்றி நடக்க வேண்டும்; ஹதீஸ் களைப் புறக்கணிக்க வேண்டும் என்று கூறும் சகோதரர்களைப் போன்ற வர்களும், இட்டுக்கட்டப்பட்ட ஹதீஸ், பலவீனமான ஹதீஸ், ஆதார பூர்வமான ஹதீஸ் என பிரித்து அறியாமல், அனைத்தையும் ஹதீஸ் கள்தான் – நபியின் நடைமுறைகளைக் கூறுபவைதான் என அவற்றை பின்பற்றுபவர்களும், கோணல் வழிகளில் சென்று கொண்டிருக் கிறார்கள் என்பதை மறுக்க முடியாது. இட்டுக்கட்டப்பட்ட ஹதீஸ்களைத் தான் பின்பற்றக் கூடாது; பலவீனமான ஹதீஸ்களை பின்பற்றலாம் என்பவர்களும் பனீ இஸ்ராயீல் 17:36 இறைக் கட்டளைக்கு முரணாகச் செயல்பட்டு கோணல் வழிகளில் செல்பவர்களே!

**சகோதரரின் பிரசுரம் கூறுவது என்ன?!**

இந்த அடிப்படையில் “புரியாத மர்மம் அல்ல இஸ்லாம்” என்ற பிரசுரத்தில் உள்ள கருத்துக்களை ஆராய்வோம். பிரசுரம் கூறுவது போல் “சலபி” என்ற பிரிவுப்பெயர் குர்ஆன், ஹதீஸுக்கு முரணானது என்பதை முன்னரே விளக்கியுள்ளோம். ஆனால் தொழுகையில் தொழுபவர்களுக்கு முன்னால் மனிதர்களோ, பிராணிகளோ செல்வது தொழுகைக்கு இடையூறாக இருப்பதைத் தடுப்பதற்கு “சுத்ரா” என்ற தடுப்பு அவசியம். இதை புகாரீ முதல் பாகம் ஹதீஸ் எண் 493லிருந்து 510 வரை படித்து விளங்குகிறவர்கள் அறிய முடியும்.

அடுத்து இறைவன் எங்கிருக்கிறான் என்பதை அல்குர்ஆன் பல இடங்களில் கூறுகிறது. அவையாவன.

7:54, 9:129, 10:3, 13:2, 17:42, 20:5, 21:22, 23:86, 116, 25:59, 27:26, 32:4, 39:75, 40:7, 15, 43:82, 57:4, 69:17, 81:20, 85:15.

இந்த இறைவாக்குகளைப் படித்துப் பார்ப்பவர்கள் அல்லாஹ் எங்கே இருக்கிறான் என்பதை விளங்க முடியும். இங்கு “இறைவன் ஆகாயத்தில்தான் இருக்கிறான் என்றும் இன்னும் இது போன்ற 1500 ஆண்டுகளுக்கு முன்பிருந்த மனித அறிவின் வெளிப்பாட்டை இன்னும்

ஹதீஸ் என்ற பெயரில் தங்களது அறியாமையை வெளியிட்டு வருகின் றனர்" என்று சகோதரர் கூறி இருப்பதில் குஃப்ருக்கு இட்டுச் செல்லும் ஒரு தவறை இழைத்துள்ளார். புரோகிதர்களால் அக்காலத்தில் இட்டுக்கட்டப்பட்ட ஹதீஸ்களில் அவர் கூறும் அறியாமையும், மூடத் தனமும் வெளிப்படலாம். ஆனால் அல்லாஹ்வின் நேரடிக் கண் காணிப்பில் (பார்க்க அத்தூர் 52:48) இடம் பெற்ற நபி(ஸல்)யின் சொல், செயல், அங்கீகாரத்தைக் கூறும் ஆதாரபூர்வமான ஹதீஸ்களிலும் மூடத்தனமோ, அறியாமையோ, மூட நம்பிக்கையோ ஒருபோதும் இருக்க முடியாது. அப்படி நம்புகிறவர்கள் நபி(ஸல்) அவர்களின் தூதுத் துவ பணியை (ரிஸாலத்தை) மறுக்கும் நிராகரிப்பாளர்களின் பட்டியலில் மட்டுமே இடம் பெற முடியும் என்பதை சகோதரர் அறிவாராக.

**இப்போது சுன்னாவை நேரடியாக பார்க்க முடியாது!**

சகோதரர் கூறுவது போல் தலையாய இஸ்லாமிய கடமைகளான ஈமான், தொழுகை, நோன்பு, ஜகாத், ஹஜ் இவற்றை சுன்னா மூலம் இப்போது அறிய முடியாது; அதாவது நபி(ஸல்) அவர்களின் மறைவுக்குப் பிறகு நேரடியாக பார்க்கும், கேட்கும் வாய்ப்பு யாருக்கும் இல்லை என்பதை முன்னரே விளக்கியுள்ளோம். அதற்கு மாறாக அவற்றின் செயல்முறை விளக்கத்தை (சுன்னாவை) ஆதாரபூர்வமான ஹதீஸ்கள் மூலமே இன்று அறிகிறோம். புரோகிதர்கள் கற்பனை செய்து இட்டுக்கட்டிய எண்ணற்ற பொய் ஹதீஸ்கள் உண்டு. இந்த ஹதீஸ்களைக் கூறி, ஒன்றுபட்ட ஒரே சமுதாயத்தை பிளவுபடுத்தி அற்ப உலக ஆதாயம் அடைந்து வருகிறார் கள் இப்புரோகிதர்கள்.

"உதாரணமாக தொழுகையில் தக்பீர் கூறி கைகளை கட்டுவது பற்றி சகோதரர் இவ்வாறு கூறுகிறார்.

ஒருவர் நெஞ்சில் கட்டுவார், இரண்டாமவர் வயிற்றில் கட்டுவார், மூன்றாமவர் இடுப்புக்குக்கீழ் கட்டுவார், நான்காமவர் கையைக் கட்டுவதே இல்லை. இந்த நிலை ஏற்பட காரணம் என்ன? மூலத்தை ஆய்ந்து அறிவு பெற பெரும் பாலான முஸ்லிம்களுக்கு நேரம் கிடைப்பதில்லை, அல்லது அவர் ஏற்றுக் கொண்ட இமாம் அல்லது மவ்லவி அப்படித்தான் சொல்லித் தந்தார். ஆகவேதான் சிந்தித்து செயல்படத் தெரியாத முஸ்லிம்கள் வழி தவறி செயல்பட துணிவு ஏற்பட்டது." மேற்படி பிரசுரம்.

இங்கு முஸ்லிம்கள் விதவிதமாகக் கைகளைக் கட்டுவது உண்மை தான். இதற்கு முக்கிய காரணம் சகோதரர் கூறுவதுபோல் நேரம் கிடைப் பதில்லை என்பது உண்மையல்ல; மார்க்கம் நமக்கு விளங்காது; அதைக் கற்ற மவ்லவிகள், இமாம்கள்தான் அதுபற்றிக் கூற வேண்டும் என்ற மூட நம்பிக்கையே பிரதான காரணமாகும். அப்படிப்பட்ட மூட நம்பிக் கையை இந்த மவ்லவி புரோகிதர்கள் தங்களின் அற்ப உலக ஆதாயம் கருதி முஸ்லிம்களின் நெஞ்சங்களில் ஆழப் பதித்துள்ளனர். அதனால் இந்தப் புரோகித மவ்லவிகள்–இவ்வுலகில் தங்களின் தேவை களையே ஹலாலாக உழைத்துப் பெற வக்கற்ற இந்தப் புரோகிதர்கள்– தாங்கள்தான் மார்க்கம் கற்ற மேதைகள், பொது மக்கள் மார்க்கம் தெரியாத அவாம்கள் – ஆடு, மாடுகளைப் போன்றவர்கள் என ஆண வத்துடன் பேசும் இப்புரோகிதர்கள்–கேவலம் தங்களைவிட கீழ் நிலை யிலுள்ளவர்கள் என்று சொல்லிக் கொண்டே, தங்களுடைய இவ்வுலக தேவைகளுக்காக அவாம்களிடம் கையேந்தி யாசகம் கேட்கும் இந்தப் புரோகிதர்கள், நாளை மறுமைக்காக தங்களுக்கு உதவி செய்ய முடியுமா? நேர்வழியைக் காட்ட முடியுமா? என்று சிந்தித்தாலே போதும்; இவர்களின் கையாலாகாத்தனம் வெளிப்பட்டு விடும்.

அது மட்டுமல்ல; மார்க்கத்தைப் பிழைப்பாகக் கொண்டிருக்கும் இப் புரோகிதர்களுக்கு மார்க்கம் பற்றி பேச அணுவளவு கூட அதிகாரம் இல்லை என்பதையும் அல்குர்ஆன் யாஸீன் 36:21 இறைவாக்கை படித்துப் பார்ப்பதன் மூலம் அறிந்து கொள்ள முடியும். இப்படி சுய சிந்தனையற்ற மக்களே இந்தப் புரோகித மவ்லவிகள் பின்னால் சென்று கொண்டிருக்கிறார்கள்.

### ஏனிந்த முரண்பாடுகள் ?

நெஞ்சில் கட்டுவது, வயிற்றில் கட்டுவது, இடுப்புக்குக் கீழ் கட்டுவது, கட்டாமல் விடுவது இவை பற்றிக் கூறும் ஹதீஸ்களை ஆராய்ந்தால் இவை அனைத்திலும் கோளாறுகளும், சந்தேகத்திற்குரியவைகளும் இருப்பதை அறிய முடியும். பனீஇஸ்ராயீல் 17:36 இறைக் கட்டளைப்படி இவற்றில் எதுவுமே நபி வழியில்லை. ஹன்பலி மத்ஹபினர், ஸலஃபி கள், தவ்ஹீத்வாதிகள் என பீற்றுவோர் அனைவரும் ஏற்று செயல் படுத்தும் நெஞ்சில் கைகட்டும் ஹதீஸும் சந்தேகத்திற்கு அப்பாற்பட்ட தல்ல. அந்த ஹதீஸை செயல்படுத்துவதன் மூலம் சிலர் கிறிஸ்தவர்

கள் போல் நெஞ்சில் கைகளைக் கொண்டு சிலுவை அடையாளமிட்ட வர்களாகத் தொழுவதையும் பார்க்க முடியும். அவர்களின் முழங் கைகள் இருபுறமும் வெளியே நீட்டிக் கொண்டிருப்பதால், நபி(ஸல்) அவர்களின் நேரடியான கட்டளைக்கு முரணாக, ஷைத்தான்கள் இடைவெளியில் நிற்கும் வகையில் வரிசையில் இடைவெளி இருக்கிறது. வரிசையில் இடைவெளி இல்லாமல் நெருங்கி நிற்க இவர்கள் நெஞ்சில் கைகட்டுவது தடையாக இருக்கிறது. மக்காவில், மதீனாவில் கூட இந்த அலங்கோலத்தைப் பார்க்கலாம்.

### தொழுகையில் கைகளை எங்கே எப்படி வைப்பது?

ஆனால் புகாரீ(ர.அ.) முதல் பாகம் 740 எண் ஸஹ்ல் பின் ஸஃது(ரழி) அறிவிக்கும் ஹதீஸ், கைகளை எங்கே எப்படி வைப்பது என்பதைத் தெளிவு படுத்துகிறது. அதில் வலது கையை இடது கொடு ங்கை-முழங்கையில் வைப்பதற்கு நாங்கள் கட்டளையிடப்பட்டோம் என்று அந்த நபி தோழர் கூறுவதாகப் பதிவு செய்யப்பட் டுள்ளது. இந்த ஹதீஸின்படி வலது கை இடது கொடுங்கையின் மேலும் இடது கை வலது கொடுங் கையின் கீழும் இருக்கும்படி நேராக கைகளை வைக்கும்போது இயற்கையாக கைகள் எந்த இடத்தில் வருமோ அங்கே வைத்துக் கொள்வதே முறையாகும்.

இப்படி வைக்கும்போது ஷைத்தானுக்கு இடம் கொடாமல் தோளோடு தோள், காலோடு கால் இணைந்து இடைவெளியில்லாமல் அணி (ஸஃப்) அமைகிறது.

சாதாரணமாக உலக வழக்கில் சில பகுதிகளில் தங்களின் எஜமான ர்களுக்கு முன்னால் வேலையாள்கள் கைகட்டி நிற்பதைப் பார்க்கிறோம். அப்படி கட்டும் முறையே பணிவை வெளிப்படுத்துகிறது. எஜமானர் களுக்கெல்லாம் மிகப்பெரிய எஜமானன் அல்லாஹ்வுக்கு முன்னால் கைகட்டி நிற்கும்போது எந்த அளவு பணிவு வெளிப்பட வேண்டும் என்பதைச் சொல்லித் தெரிய வேண்டியதில்லை.

இந்த ஹதீஸில் இடம்பெறும் "திராஅ" என்ற அரபி பதம் முழங் கையை அதாவது கொடுங்கையை குறிப்பதோடு "முழம்" என்ற பொருளையும் தருகிறது. முழம் என்றால் கொடுங்கையிலிருந்து கை நுனி வரையாகும். அந்த அடிப்படையில் தொழுகையில் கைகட்டும் போது மணிக்கட்டிலும் கட்டலாம்; மணிக்கட்டுக்கும் கொடுங்கைக்கும்

இடையிலும் கட்டலாம் என வேறுபட்ட கருத்துக்களை கற்பனை செய்துள்ளனர். குர்ஆன் வசனங்களுக்கோ, ஹதீஸ்களுக்கோ சுய விளக்கங்கள் கொடுக்க முற்படும்போதுதான் இந்த தடுமாற்றங்களும், கருத்து வேறுபாடுகளும் முளைக்கின்றன. ஹதீஸில் உள்ளதை உள்ளபடி புரிந்து பின்பற்ற முன் வந்தால் கருத்து வேறுபாடு களுக்கோ, பிளவுக்கோ, பிரிவினைக்கோ இடமே இல்லாமல் போய் விடுகிறது. ஆனால் சமுதாயத்தைப் பிளவுபடுத்தி ஆதாயம் அடைந்து வரும் புரோகித வர்க்கம் இதற்கு ஒருபோதும் இணங்க மாட்டார்கள்.

### எது பித்னா ஹதீஸ்?

முஸ்லிம் சமுதாயத்தைப் பிளவுபடுத்தும் தீய நோக்கத்துடன் யூதக் கைகூலிகளால், ஆங்கிலத்தில் கற்பனை செய்யப்பட்ட நூல்களை அப்படியே நம்பி ஏற்று, மிகமிக ஆதாரபூர்வமான "ஜமாஅத் அல்முஸ் லிமீன்" ஹதீஸை இட்டுக்கட்டப்பட்ட ஹதீஸ் என்றும் பித்னா ஹதீஸ் என்றும் சரடு விட்டிருக்கிறார் சகோதரர். சுன்னாவை செயல்பாடுகளை தாங்கி வரும் செய்திகள் என்றும் ஹதீஸ்களை சொற்களைத் தாங்கி வரும் செய்திகள் என்றும் யூதக் கைககூலிகள் கற்பனை செய்துள் ளதை அப்படியே வாந்தி எடுத்திருக்கும் தோழரின் நிலை மிகப் பரிதாபத்திற்குரியதே!

### குறைபாடுகள் இருந்தால் விட்டு வைத்திருப்பாரா?

உண்மையில் இந்த ஹதீஸில் குறைபாடுகள் இருக்குமானால், தவ்ஹீத் மவ்லவி(?) அதை அக்கு வேறு ஆணி வேறாக ஆக்கி இருப்பார். ஜகாத் சம்பந்தப்பட்ட ஹதீஸ்களை நுணுக்கமாக ஆய்ந்து தவிர்க்க வேண்டிய குறைபாடுகளை பெரிது படுத்தி அந்த ஹதீஸ்கள் பலவீன மானவை என பிதற்றிய அவருக்கு, இந்த ஹதீஸில் அப்படிப்பட்ட குறைபாடுகள் ஏதேனும் தென்பட்டாலும் அதை ஹிமாலயத் தவறாக விளம்பரப்படுத்த முற்பட்டிருப்பார். 1986லிருந்தே இந்த ஹதீஸ் அவருக்கு ஒரு பெரிய தலை இடியாக இருக்கிறது. 1997 டிசம்பர் 17, 18, 19, 20 நான்கு நாட்கள் இடம் பெற்ற விவாத அரங்கில் அவர் தடுமாறிய தடுமாற்றம் இதை உண்மைப்படுத்தும். இந்த ஹதீஸில் அப்படிப்பட்ட எந்தக் குறைபாடுகளும் இல்லாத காரணத்தால் தான் "முஸ்லிமீனை" தமிழில் மொழி பெயர்க்க வேண்டும்; "ஜமாஅத் அல் முஸ்லிமீனை" தமிழில் மொழி பெயர்க்க வேண்டும்; அதுவும் பிரிவுப் பெயர்தான் என பிதற்றி தனது ஆதரவாளர்களைத் தக்க வைத்துக் கொண்டிருக்கிறார்.

முஸ்லிம் சமுதாயத்தை அல்லாஹ்வின் 21:92, 23:52ல் காணப்படும் கட்டளைக்கு முரணாக பிளவுபடுத்தியே தீரவேண்டும் என யூதக் கைக்கூலிகள் படாதபாடு படுகிறார்கள். கோடிக்கணக்கில் செலவிடுகின்றனர். அற்ப உலக ஆதாயத்தைக் குறியாகக் கொண்ட புரோகிதர்களும் அதற்குத் துணை போகிறார்கள். இதில் ஆச்சரியப்பட ஒன்றுமில்லை. ஆனால் மார்க்கத்தைப் பிழைப்பாகக் கொள்ளாத, பல கோடிகளுக்கு அதிபதியான இந்தச் சகோதரருக்கு ஏற்பட்ட மனக் கோளாறு என்ன? முஸ்லிம்கள் தங்கள் புத்தியை இமாம் அல்லது மவ்லவியிடம் அடகு வைத்து விட்டு, சிந்தித்துச் செயல்பட தெரியாது வழி தவறிச் செல்கின்றனர் என்று கூறும் இவர், தனது புத்தியை யூதக் கைக்கூலிகளிடம் கடன் கொடுத்துவிட்டு, சுய சிந்தனையற்று இப்படி வழி தவறிச் செல்கிறாரே! இது சரியா?

**குர்ஆனை நிராகரிக்கும் தோழர் !**

அல்குர்ஆன் அல்ஹஜ் 22:78 இறைவாக்கில் இந்த சமுதாயத் திற்கு "முஸ்லிமீன்" என்றும் இதற்கு முன்னரும் அல்லாஹ்வே பெயர் சூட்டியதாக தெள்ளத் தெளிவாக அறிவித்துள்ளான். மனிதன் படைக்கப்பட்டதிலிருந்து இந்த உம்மத்துக்கு "முஸ்லிம்கள்" என்று தான் பெயர் என உறுதிப்படுத்தியுள்ளான். நபிமார்கள் செய்த சத்திய அழைப்புப் பணியையே செய்தாலும், அவர்களும் தங்களை முஸ்லிம்களில் ஒருவன் என்றுதான் கூற வேண்டும்; அதற்காக முஸ்லிம் அல்லாத பிறிதொரு பெயரைத் தேர்ந்தெடுக்கக் கூடாது, விளம்பரப்படுத்தக் கூடாது என்பது 41:33 மூலம் விளங்குகிறது. முஸ்லிம்கள் ஒரே உம்மத்-சமுதாயம் என்றும் 21:92, 23:52 இரண்டு இடங்களில் வலியுறுத்திக் கூறி, மனித சமுதாயத்தின் இறைவனாகிய அவனுக்கு மட் டுமே அஞ்சி, அடிபணிய வேண்டும் என்று அல்லாஹ் கட்டளையிடுகிறான். குறைபாடுள்ள மனித அறிவுக்கு முக்கியத்துவம் கொடுக்கக் கூடாது என்பது இதிலிருந்து வெட்ட வெளிச்சமாகிறது.

பெயர் முஸ்லிமீன்-முஸ்லிம்கள், ஒரே ஜமாஅத்-சமுதாயம்-கூட்ட மைப்பு; அப்படியானால் அதன் பெயர் "ஜமாஅத் அல் முஸ்லிமீன்" என்றுதானே இருக்க முடியும். இதைப்போய் பித்னா ஹதீஸ் என்பவர் எந்த அளவு யூதக் கைக் கூலிகளின் ஆங்கில நூல்களுக்கு அடிமைப் பட்டு வழிதவறி செல்கிறார் என்பது புரிய வில்லையா? அல்லாஹ்

உம்மத்தன் வாஹிதா–ஒரே சமுதாயம் என அறுதியிட்டுக் கூறும் இந்த முஸ்லிம் சமுதாயத்தை, முஸ்லிம் அல்லாத பிரிதொரு பெயரில் ஒன்றிணைக்க முடியும் என்று கற்பனை செய்யும் புரோகிதர்களும், இவரும் எந்த அளவு வழிகேட்டில் செல்கிறார்கள் என்பதை விளங்க முடியவில்லையா?

அவரது எழுத்தே அவர் அந்நஜாத்தை சுய சிந்தனையுடன் ஆழ்ந்து படிக்கவில்லை; வழிகெட்ட ஆங்கில நூல்களில் படித்தவற்றை உள்ளத்தில் இருத்திக் கொண்டு, நுனிப்புல் மேய்ந்துள்ளார் என்பதை உறுதிப்படுத்துகிறது. இல்லை என்றால்

> தனது முஸ்லீம் ஜமாத் என்ற அமைப்புக்கு ஆதரவு தேட தோழர் அபூ அப்துல்லா பல வருடங்களாக முயற்சி செய்து வருவதை நீங்கள் அறியலாம்; முஸ்லிம் ஜமாஅத் என்ற அவரது அமைப்பு வளர்வதற்கு பதிலாக தேய்ந்து கொண்டே போவதை நாம் பார்க்கிறோம்! காரணம் அந்த செய்தி முஹம்மத சல்அம் அவர்கள் பெயரால் சொல்லப்படும் ஒரு அப்பட்டமான "பித்னா–ஹதிஸ்!" இந்த "பித்னா–ஹதிஸ்" "புகாரி" "முஸ்லிம்" போன்ற நூல்களிலும் இருக்கிறது. அதன் காரணங்களால் முஸ்லீம்கள் இந்த "பித்னா–ஹதிஸின்" தராதாரத்தை எண்ணிப் பார்க்க–சிந்திக்கத் தவறிவிட்டார்கள். இதேபோன்று பல நூற்றுக்கணக்கான "ஹதீஸ்கள்" தமிழ் முஸ்லிம்களிடையே வழக்கத்தில் உள்ளதை பார்க்கலாம் என்று பிதற்றி இருப்பாரா? மேற்படி பிரசுரம்.

அவர் எழுதியுள்ளதை எவ்வித மாற்றமும் இல்லாமல் அப்படியே எடுத்து எழுதியுள்ளோம். தோழர் அவர்கள் எந்த அளவு வழிகெட்ட ஆங்கில நூல்களின் மயக்கத்தில் இருக்கிறார் என்பது புரிகிறதா? பெரும்பாலான ஆதாரபூர்வமான ஹதீஸ்களையே நிராகரிக்கும் வழிகேட்டில் இருக்கிறார்.

### நாமும் ஒரு வழிகேட்டுப் பிரிவை அமைத்திருந்தால் !

"முஸ்லிம் ஜமாஅத்" என்ற ஓர் அமைப்பை நாம் அமைத்தோமா? அதற்கு சட்டதிட்டங்கள் தயாரித்து வெளியிட்டோமா? அதை அரசு அலுவலகத்தில் பதிவு செய்தோமா? அந்த ஜமாஅத்திற்கு நாமே அமீர் என்று பிரகடனப்படுத்தினோமா? நாம் மட்டுமே நேர்வழியில் இருக்கி

றோம் என்று பீற்றினோமா? எமது ஜமாஅத்தில் முஸ்லிம்கள் அனைவரும் வந்து இணைந்து கொள்ளுங்கள் என்று அழைப்பு விடுத்தோமா? இவற்றில் எதையுமே நாம் செய்யாத நிலையில், நாம் புதிதாக "முஸ்லிம் ஜமாஅத்" என்று உருவாக்கி ஆதரவு தேடுகிறோம் என்று கூறி இருக்கிறாரே! இது அப்பட்டமான பொய் இல்லையா?

**அவ்வாறு நாம் செய்திருந்தால்!**

அவர் சொல்வது போல் நாம் செய்திருந்தால், அதாவது அவர் எழுதி இருப்பது போல் கேரளா மற்றும் இலங்கையில் அரபு நாட்டின் உதவியுடன் பெரும் பொருளாதாரத்தைப் பெற்றிருக்கும் அமைப்புகளைச் சுட்டிக் காட்டிய சிலரின் கோரிக்கையை ஏற்று, ஸலஃபி அடிப்படையில் ஒரு அமைப்பை உருவாக்கி, அரசு அலுவலகத்தில் பதிவு செய்து, வெளிநாட்டு உதவிகளை ஏற்றிருந்தால், அந்த அமைப்பு ஆகா, ஓகோ என்று வளர்ந்திருக்கும். பெருங்கூட் டமும் சேர்ந்திருக்கும். உலக ஆதாயங்களையே குறியாகக் கொண்ட இப் புரோகிதர்களும் அந்த அமைப்பை விட்டு வெளியேறி இருக்கமாட்டார் கள். அப்படி ஒரு புதிய அமைப்பை–ஜமாஅத்தை உருவாக்கி அரசு அலுவலகத்தில் பதிவு செய்ய நாம் இணங்காததால்தான் அக்கூட்டம் நம்மைவிட்டு வெளியேறினர். **ஜாக்** அமைப்பு கண்டார்கள். அப்போது இந்தத் தோழ ரும் அந்த ஜமாஅத்தோடுதான் இருந்தார். அப்படி சேர்த்த பல கோடி சொத்துக்களை, அந்த அமைப்பை விட்டு வெளியேறிய தவ்ஹீத் மவ்லவி(?) கோவை வெடிகுண்டு வழக்கில் அரசு தரப்பு சாட்சியாகி, தன்னால் தூண்டிவிடப்பட்டவர்களையே காட்டிக் கொடுத்து அளித்த வாக்குமூலத்தில் பட்டியலிட்டுள்ளார். எந்தெந்த ஊரில் என்ன என்ன சொத்துக்கள் என்ற விபரத்துடன் பல கோடிகளுக்குப் பட்டியலிட்டுள்ளார்.

**ஜாக்**கை விட்டு வெளியேறி இன்னொரு அமைப்பு தமுமுக அதிலிருந்தும் வெளியேறி இன்னொரு புதிய அமைப்பு **ததஜ** இப்படி அற்ப உலக ஆதாயத்திற்காக புதிய புதிய அமைப்புகள் அவரால் முளைத்துக் கொண்டே இருக்கின்றன. ஒவ்வொரு அமைப்பிலும் கோடிக்கணக்கில் சொத்துக்களும் இருக்கின்றன; ஆயிரக்கணக்கில் ஆதரவாளர்களும் இருக்கின்றனர்.

**உலக வசதி வாய்ப்புகள் நரகிற்குரியவர்களுக்கே!**

தோழர் அவர்கள் அல்பகரா 2:200-202, அல்மாயிதா 5:100 மற்றும் அஜ்ஜுக்ருஃப் 43:33, 34, 35 இறைவாக்குகளை முறையாகப் படித்து உணர்ந்திருந்தால் இந்த மயக்கம் அவருக்கு ஏற்பட்டிருக்காது. பல நபி மார்கள் தன்னந்தனியாக சுவர்க்கம் போவார்கள்; சுமார் 950 வருடங் கள் பிரசார பணி புரிந்தும் நபி நூஹ்(அலை) அவர்களுக்கு முழுசாக ஒரு நூறு பேரை திரட்ட முடியவில்லை; அவரது மனைவியையும், மகனையும் கூட நேர்வழிக்குக் கொண்டு வர முடியவில்லை என்ற விபரங்களை எல்லாம் அல்குர்ஆன் மூலம் தோழர் அறிந்திருந்தால், கூட்ட மயக்கம் அவருக்கு ஏற்பட்டிருக்காது. எந்த அளவு வழிகேட்டை மக்களுக்குப் போதிக்கிறோமோ அந்த அளவு மக்கள் கூட்டமும் சேரும். கோடிக்கணக்கில் பணமும் சேரும். சத்தியத்தை-உண்மையை-நேர் வழியை உள்ளது உள்ளபடி எடுத்துச் சொல்லும்போது அது மக்களுக்கு ஷைத்தானின் ஆசை வார்த்தை களால் வேம்பாகக் கசக்கும்; வெருண்டோடு வார்கள் என்ற உண்மை யைத் தோழர் அறியாதிருக்கிறார்.

**பெரும்பான்மையினர் செல்வது வழிகேடே!**

முத்துக் குளிப்பவர் கடலிலிருந்து வெளியே எடுத்துப் போட்டு-அம்பாரமாகக் குவிக்கும் லட்சக் கணக்கான சிப்பிகள் எல்லாவற் றிலும் முத்து இருக்கும் என்று ஒருபோதும் தப்புக் கணக்குப் போட மாட்டார். அந்த அம்பாரத்திலிருந்து நாளைந்து முத்துக்கள் கிடைத்தால் அவர் பெரிய அதிர்ஷ்டக்காரர். ஒரேயொரு முத்துக் கூட கிடைக்காமல் போகும் சாத்தியம் உண்டே அல்லாமல், பெரும்பாலான வற்றில் முத்துக்கள் இருப்பது சாத்தியமே இல்லை. அம்பாரமாகக் குவிக்கப்படும் வெற்றுச் சிப்பிகள் நெருப்புக்கு இரையாகும் என்பதை அறிவாளி அறிவான். அன்று நபிமார்கள் செய்ததும், இன்று முஸ்லிமான ஒவ்வொரு ஆணும் பெண்ணும் செய்ய வேண்டியதும் ஆகிய பிரச்சாரப் பணி கல்லில் நார் உரிப்பது போன்ற கடினமான பணி; அல்லாஹ் மீதும், மறுமைமீதும் உறுதியான நம்பிக்கை வைத்துள்ள உண்மை யான நம்பிக்கையாளர்கள் மட்டுமே மறுமையில் கூலியை எதிர்பார்த்து அல்லாஹ்வுக்காக அப்பணியைச் செய்வார்கள்; அற்ப உலக

ஆதாயத்தை அடைய விரும்புகிறவர்கள் மட்டுமே குர்ஆன், ஹதீஸ் என்று சொல்லிக் கொண்டே தங்களின் சொந்த கருத்துக்களை யும், யூகங்களையும் சொல்லி மக்களை மயக்கி உலக ஆதாயம் அடைவதோடு, தங்களை நம்பியுள்ளவர்களை வழிகேட்டில் இட்டுச் செல்வார்கள். அவர்கள் பின்னால்தான் கசாப்புக் கடைக்காரர் பின்னால் செல்லும் ஆட்டு மந்தை போல், மக்கள் மந்தை செல்லும் என்று பலமுறை நாம் தெளிவுபடுத்தியுள்ளோம். எனவே கூட்டங்கண்டு தோழர் போன்றோர் மயங்கலாம்; அந்த மயக்கத்தை விட்டும் கிருபையுள்ள ரஹ்மான் அல்லாஹ் எமக்கு எப்போதோ தெளிவைத் தந்துவிட்டான். அவனுக்கே புகழ் அனைத்தும்.

தோழர் இந்த ஹதீஸை பித்னா ஹதீஸ் என்று சொன்னாலும் சொல்லலாம். ஆயினும் அந்நஜாத் 1986 ஏப்ரல் முதல் இதழில் இடம் பெற்ற அந்த ஆதாரபூர்வமான ஹதீஸை அறியத் தருகிறோம்.

“**இஸ்லாம் அனாதரவாகத்தான் தோன்றியது; அனாதரவான நிலையைத்தான் மீண்டும் அது அடையும். (அதற்கு ஆதரவு தந்து அரவணைத்து வாழ்வின் அனைத்துத் துறைகளிலும் அதனை நிலை நிறுத்திட முயலும்) அனாதரவாளர்களுக்கே என்றும் (எனது) வாழ்த்துக்கள்** ” (முஸ்லிம் 232, திர்மிதி, அபூஹுரைரா(ரழி) அபூ தாவூது இப்னு உமர்(ரழி) ) என்று நபி(ஸல்) முன்மொழிந்துள்ளதை தோழர் சிந்தித்துணர்வாராக.

நபி(ஸல்) அவர்களின் மறைவுக்குப் பிறகு முஸ்லிம்களிடையே ஏற்பட்ட சண்டை சச்சரவு குழப்பங்கள் இவற்றை நீக்கி முஸ்லிம்களை ஒன்றிணைக்க இந்த ஹதீஸ் கற்பனை செய்யப்பட்டது என்பது தோழரின் கற்பனையே. முஸ்லிம்கள் ஒன்றுபட்டுவிடக் கூடாது என்பதில் குறியாக இருக்கும் யூதக் கைக்கூலிகளின் கற்பனையில் உருவா னதை, அவர்கள் ஆங்கிலத்தில் எழுதி வைத்துள்ளதை, எவ்வித சுய சிந்தனையுமில்லாமல் தோழர் எடுத்து எழுதியுள்ளார். பல ஹதீஸ் நூல்களில் காணப்படும் இந்த “ஜமாஅத்அல் முஸ்லிமீன்” பற்றிய ஹதீஸ் கற்பனை ஹதீஸோ, பித்னா ஹதீஸோ அல்ல. நபி(ஸல்)

அவர்கள் முன்னறிவிப்புச் செய்த மிகமிக ஆதாரபூர்வமான ஹதீஸ். முஸ்லிம்கள் என்ற நிலையிலல்லாது, நபி(ஸல்)அவர்களின் மறை வுக்குப் பிறகு மனிதர்களால் கற்பனை செய்யப்பட்ட எந்தப் பிரிவுப் பெயரின் பேராலும், எந்த ஜமாஅத்தின் பேராலும் முஸ்லிம்களை ஒன்றிணைக்க முடியாது என்பதை தோழரும், பிரிவுப் பெயர் ஆதரவாளர்களும் உணர்வார்களாக.

**உலகளாவிய பேரியக்கம்!**

தோழரும், தவ்ஹீத் மவ்லவியும்(?) கூறித்திரிவது போல் "ஜமாஅத் அல் முஸ்லிமீன்" பித்னா ஹதீஸும் அல்ல; பிரிவுப் பெயரும் அல்ல; அபூ அப்தில்லாஹ்வின் பிரிவு ஜமாஅத்தும் அல்ல; அது அல்லாஹ் வால் பெயரிடப்பட்டு, நபி(ஸல்) அவர்களால் நடைமுறைப் படுத்தப்பட்ட முஸ்லிம்களின் உலகளாவிய பேரியக்கமாகும். அதன் அமீர் பதவிக்கு அபூ அப்தில்லாஹ் என்றுமே உரிமை கொண்டாடவில்லை. இதற்குப் பின்னரும் உரிமை கொண்டாடமாட்டார்.

நாம் மார்க்கத்தை புரிந்துக் கொள்ள வேண்டுமென்றால் சிந்தித்துச் செயல்பட வேண்டும்; அல்லது உங்களது பித்னாவை குறைத்துக் கொள்ள வேண்டும் என்று பிறருக்கு – உபதேசம் செய்யும் தோழர், தான் ஏன் சுயமாகச் சிந்தித்துச் செயபல்பட மறந்தார்? ஏன் இப்படிப்பட்ட ஃபித்னாக்களை பரப்பிக் கொண்டிருக்கிறார்? அவரை அல்குர்ஆன் அல் பகரா ஆரம்ப 20 இறைவாக்குகளைப் படித்து உணர்வு பெற அன்புடன் வேண்டுகிறோம்.

## ஜிஹாத் இயக்கம்!

குஜராத் மற்றும் இந்தியாவின் சில பகுதிகளில் இடம் பெறும் முஸ்லிம்களுக்கு எதிரான வன்முறைச் செயல்களைக் காரணம் காட்டி, அது போன்ற நிலை தமிழ்நாட்டிலும் ஏற்படாது என்பது என்ன நிச்சயம்? எனவே அதற்கு முன்னேற்பாடாக நாம் நம்மைத் தயார்படுத்திக் கொள்ள வேண்டும் என்று கூறி இளைஞர்களை, குறிப்பாக கல்லூரி களில் படிக்கும் "டீன்ஏஜ்" என்று சொல்லக் கூடிய இளம் வாலிபர்களை மூளைச் சலவை செய்து, அவர்களின் இன உணர்வைத் தூண்டி

இரகசிய பைஅத், இரகசிய பயிற்சி என கூட்டம் சேர்த்து வருகின்றனர் சில அமைப்பினர்.

அவர்கள் அல்குர்ஆன் அத்தவ்பா அத்தியாயத்தின் சில வசனங்களை படித்துக் காட்டி அவர்களுக்குப் போர் வெறியைத் தூண்டுகின்றனர். அதில் ஒரு வசனம் வருமாறு:

**(நபியே!) நீர் கூறும்: உங்களுடைய தந்தைமார்களும், உங்களுடைய பிள்ளைகளும், உங்களுடைய சகோதரர்களும், உங்களுடைய மனைவிமார்களும், உங்களுடைய குடும்பத்தார்களும், நீங்கள் திரட்டிய செல்வங்களும், நஷ்டம் ஏற்பட்டு விடுமோ என்று நீங்கள் அஞ்சுகின்ற வியாபாரமும், நீங்கள் விருப்பத்துடன் வசிக்கும் வீடுகளும், அல்லாஹ்வையும், அவன் தூதரையும், அவனுடைய வழியில் அறப்போர் புரிவதையும் விட உங்களுக்கு பிரியமானவையாக இருக்குமானால், அல்லாஹ் அவனுடைய கட்டளையை(வேதனையை)க் கொண்டு வருவதை எதிர்பார்த்து இருங்கள்; அல்லாஹ் பாவிகளை நேர்வழியில் செலுத்துவதில்லை.** (அத் தவ்பா 9:24)

மேலும் 9:16, 38,39,41,44,45,52 போன்ற வசனங்களையும் படித்துக் காட்டி தங்களின் "ஜிஹாத்" கொள்கைக்கு வலு சேர்ப்பார்கள்.

ஆனால் இவர்களின் அசல் நோக்கம் உலக ஆதாயம் தான். தமிழ் நாட்டில் இந்த தப்பான சிந்தனைக்கு வழி வகுத்துக் கொடுத்தவர் தவ்ஹீத் மவ்லவியே(?) ! 1995 அல்லது 96-ல் 38 மவ்லவிகளுக்கு முன்னால், இவர் தனது கட்சியை எடுத்து வைத்த போது, அவரே தனது வாயால் கொடுத்த வாக்குமூலம்.

**தவ்ஹீது மவ்லவியின்(?) ஒப்புதல் வாக்கு மூலம் !**

"நாம் பெரும் சிரமப்பட்டு வாலிபர்களை தயார் செய்கிறோம். ஆனால் நாஸர் மதானியும், பழனி பாபாவும் எளிதாக அவர்களைக் கவர்ந்து தங்கள்பால் ஈர்த்து விடுகிறார்கள். அந்த வாலிபர்களை நம்மிடம் தக்க வைக்க வேண்டுமென்றால் நாமும் அவர்கள் போக்கிலேயே போக வேண்டும்" என்று கூறியது டேப்பில் பதிவாகி இருக்கிறது. இந்த அடிப்படையில் வாலிபர்களுக்கு இன உணர்வைத் தூண்டி ஜிஹாத் என்ற பெயரால் அவர்களை உருவாக்கினார்.

அதன் விளைவு கோவை, சென்னை, நாகூர், மேலப்பாளையும் போன்ற நகரங்களில் கொலைகள் நடந்தேறின. **R.S.S.** அலுவலகத் தில் வெடிகுண்டு வைக்கப்பட்டது. சாலியமங்களத்தில் வெடிகுண்டு தயாரித்த இடத்திலேயே வெடிகுண்டு வெடித்து உயிப்ப்பலி ஏற்பட்டது. வாலிபர்கள் சிலர் ஒரு காவலரை கோவையில் கொன்றனர். அதன் விளைவு கோவை பற்றி எரிந்தது. முஸ்லிம்களுக்கு உயிர் நஷ்டம், பொருள் நஷ்டம் ஏற்பட்டது. காவலர்களும், காவிகளும் இணைந்தே இந்த அராஜகத்தை நிகழ்த்தினர். அரசு எந்த உரிய நடவடிக்கையும் எடுக்கவில்லை.

ஆனால் அதற்கு பழிதீர்க்கும் எண்ணத்தில் முஸ்லிம் இளைஞர் களைத் தூண்டி கோவையில் சில இடங்களில் வெடிகுண்டுகள் வைக்கப்பட்டு பல உயிர்ப்பலிகள் ஏற்பட்டன. அரசு இதில் கடும் நட வடிக்கை எடுத்து 168 முஸ்லிம் வாலிபர்களை கைது செய்தது. தவ்ஹீத் மவ்லவி(?)யும் கைதாகும் நிலை ஏற்பட்டது. தன்னால் தூண்டிவிடப் பட்டவர்களையே அரசுக்குக் காட்டிக் கொடுத்துவிட்டு அவர் தப்பிக் கொண்டார்.

தவ்ஹீத் மவ்லவி(?)யின் இந்தத் தவறான பிரசார ஆரம்பத் திலேயே, இந்தத் தவறான போக்கைக் கண்டித்து அந்நஜாத்தில் எழுதினோம்; அப்போது அபூ அப்தில்லாஹ்வுக்கு மக்கா வாழ்க்கை மட்டுமே தெரிகிறது; மதீனா வாழ்க்கை அவருக்குத் தெரியவில்லை என்று தன்னை நம்பியுள்ள இளைஞர்களுக்கு வெறியேற்றி தமிழக மெங்கும் அதை பரப்பச் செய்தார். ஆனால் தனக்கு ஆபத்து, தான் சிறை செல்ல நேரிடும் என்று நிலை ஏற்பட்டவுடன், பிளேட்டை மாற்றி ஆட்சியாளர்கள் மட்டுமே “ஜிஹாத்” செய்ய முடியும், தனித்தனி அமைப் புகள் ஜிஹாதில் ஈடுபட முடியாது என்று புதிய ஃபத்வா-தீர்ப்பு(?) கொடுத்தார். ஆனால் “ஜிஹாத்” என்ற பெயரால் வெறியேற்றப்பட்ட இளைஞர்கள் தங்கள் வெறியைத் தனிக்க முடியாமல் திணறினர்.

**உலக ஆதாய நோக்கமே இயக்கங்கள் தோன்ற காரணம் !**

இதை இன்னொரு அமைப்பு, உன்னிப்பாகக் கவனித்துக் கொண் டிருந்தது. “ஜிஹாத்” என்ற பெயரால் இளம் வாலிபர்களை எளிதாக

இன உணர்வுக்கு ஆளாக்கி அவர்களை வசப்படுத்த முடியும்; முஸ்லிம்களிலும் பெரும்பாலோர் இன உணர்வுக்கு ஆளாகி இதற்காக தங்கள் செல்வங்களைக் கொண்டு வந்து கொட்டுவார்கள் என்பதை தெரிந்து கொண்டு, "ஜிஹாத்" கொள்கையை கையில் எடுத்துக் கொண்டுள்ளனர். தவ்ஹீத் மவ்லவி(?)யால் இப்படித் தூண்டப்பட்ட வாலிபர்களில் பலரும் இந்த இயக்கத்தில் போய் ஐக்கியமாயினர். இது வருவாய்க்கு ஒரு நல்ல வழி எனக் கண்டு அந்த அமைப்பும் அதில் தீவிரமாக இறங்கியது.

உலக ஆதாயம் என்று வரும்போது அதில் போட்டி பொறாமை, மோதல் என ஏற்படுவது சகஜம்தானே. இப்போது அந்த அமைப்பும் இரண்டாக உடைந்துவிட்டது. ஆயினும் இரு சாராரும் "ஜிஹாத்" கொள்கையில் உறுதியாக இருந்து கொண்டு போட்டி போட்டு இளம் வாலிபர்களுக்கு வலை விரித்து வருகிறார்கள்.

**இவர்கள் சொல்லும் ஜிஹாத் மார்க்கமா?**

இப்போது இந்த "ஜிஹாத்" கொள்கை எந்த அளவு குர்ஆன், ஹதீஸுக்கு ஒத்து வருகிறது என்று பார்ப்போம். அத்தவ்பா 9வது அத்தியாயத்தில் இடம் பெற்றுள்ள வசனங்கள் கூறுவது அனைத்தும் உண்மைதான். ஆனால் நபி(ஸல்) அவர்களுக்கு ஆட்சி அதிகாரம் அல்லாஹ் வழங்கிய பின்னர் இறங்கிய வசனங்களா? ஆட்சி அதிகாரம் இல்லாத நிலையில் மக்காவில் இருக்கும்போது இறங்கிய வசனங்களா? என்பதை சிந்தித்து விளங்க வேண்டும்.

இன்று இந்தியாவில் முஸ்லிம்கள் அனுபவிக்கும் கொடுமைகளை விட ஆயிரம் மடங்கு கொடுமைகளை முஸ்லிம்கள் அன்று மக்காவில் அனுபவித்து வந்தனர். அது மட்டுமல்ல; இன்றைய முஸ்லிம்களில் மிகப் பெரும்பான்மையினர் ஈமான்– நம்பிக்கை என்றால் என்ன என்று தெரியாமல் பெயர் அளவில் முஸ்லிம்களாக இருக்கிறார்கள். அன்று மக்காவிலுள்ள முஸ்லிம்கள் அனைவரும் புடம்போட்ட தங்கங்களாக முழுமையான முஸ்லிம்களாக இருந்தனர். அப்படிப்பட்ட அந்த சமயத்தில் மேலே குறிப்பிட்ட வசனங்களை அல்லாஹ் இறக்கவில்லை.

நபி(ஸல்) அவர்களும் அப்படிப்பட்ட எந்த போதனையையும் தரவில்லை; இரகசிய பயிற்சி, இரகசிய தாக்குதல் என நபி தோழர்களுக்கு எதையும் ஏவவில்லை. மக்காவிலிருந்து நிர்ப்பந்தமாக வெளியேற்றப்பட்டு, ஹிஜ்ரத் செய்து–புலம் பெயர்ந்து–மதீனா வந்த பின்னர், நபி(ஸல்) தலைமையில் ஓர் ஆட்சி அமைந்த பின்னரே அநீதிகளைத் தட்டிக் கேட்கும் பொறுப்பு அவர்களுக்கு வந்தது. அப்போதுதான் அநீதியாளர்களை எதிர்த்துத் தற்காப்புப் போர்களில் ஈடுபட்டார்கள். ஆட்சி அதிகாரம் பெறும் நோக்கத்தில் நாடு பிடிக்கும் ஆசையிலோ, நாடுகளைப் பிடித்து அந்த நாட்டிலுள்ளவர்களைப் பலவந்தமாக முஸ்லிம்களாக ஆக்க வேண்டும் என்ற எண்ணத்திலோ நபி(ஸல்) ஒரு போரைக் கூட நடத்தவில்லை. முஸ்லிம்களைத் தாக்க முன்னேற்பாடு செய்கிறார்கள் என்ற நம்பகமான தகவல்கள் வந்தால் மட்டுமே, தங்களை தற்காத்துக் கொள்ளும் எண்ணத்தில் போரில் ஈடுபட்டுள்ளார்கள். அப்படிப்பட்ட சமயங்களில் இறங்கிய வசனங்கள் தான் மேலே எடுத்து எழுதப்பட்டவை.

பொதுவாக ஒரு நாட்டு மன்னர் மற்ற நாடுகள் மீது போர் தொடுத்து, அந்த மக்களை தனது முழுக்கட்டுப்பாட்டில் கொண்டுவர முயன்றது போல் நபி(ஸல்) அவர்கள் ஒரு முயற்சியும் மேற்கொண்டதில்லை. நடு நிலையோடு ஆய்வு செய்பவர்களுக்குக் கிடைக்கும் ஆதாரபூர்வ மான செய்தியாகும் இது.

**மறைமுக தற்கொலை தாக்குதல் ஜிஹாதாகுமா?**

இந்த நிலையில் ஒரு நாட்டின் ஆட்சி அதிகாரத்திற்குக் கீழ், அந்த ஆட்சிக்குக் கட்டுப்பட்டு இருந்து கொண்டு, அந்த ஆட்சிக்குத் தெரியா மல் மறைமுகமாக, இரகசியமாக “ஜிஹாத்” என்ற பெயரால் போர்ப் பயிற்சி, கொரில்லா தாக்குதல் என்ற மறைமுகத் தாக்குதல், தற் கொலைப்படை, மனித வெடிகுண்டு என்றெல்லாம் செயல்படுவது குர்ஆன், ஹதீஸ் வழியாகுமா? ஆட்சி அதிகாரம் இல்லாத நிலையில் புடம்போட்ட தங்கங்களான முழுமையான முஸ்லிம்களாக இருந்த நபி தோழர்களுக்கே அல்லாஹ் இப்படிப்பட்ட மறைமுகத் தாக்குதல் களையும், தற்கொலைப் படையையும் அனுமதிக்கவில்லை. அவர்

களைக் கைது செய்து விசாரித்துத் தண்டிக்கும் ஓர் ஆட்சியும் அன்று இருக்கவில்லை. எனவே ஆட்சியாளர்களுக்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டிய கட்டாயமும் அன்று இல்லை. அப்படியானால் இஸ்லாத்தை முழுமையாக விளங்காத இந்த அரைகுறை முஸ்லிம்களுக்கு, அதுவும் ஓர் ஆட்சிக்குக் கட்டுப்பட்டு அதன் கீழ் இருக்கும் அரைகுறை முஸ்லிம் களுக்கு இப்படிப்பட்ட மறைமுகத் தாக்குதல்களுக்கு, தற்கொலை படைகளுக்கு, மனித வெடிகுண்டுகளுக்கு அல்லாஹ் அனுமதி கொடுப்பானா?

**குர்ஆன் ஹதீஸுக்கு முரண்பட்ட ஃபத்வா !**

இவர்கள் ஆதாரமாக எடுத்துத் தரும் அத்தவ்பா 9வது அத்தியாயத் தில் காணப்படும் அனைத்து வசனங்களும் பட்டவர்த்தனமாக, பகிரங் கமாக எடுக்கப்பட்ட தற்காப்பு போர் நடவடிக்கைகள் குறித்துக் கூறுகின்றனவா? அல்லது இவர்கள் இன்று "ஜிஹாத்" என்ற பெயரால் செய்து வரும் இரகசிய பைஅத், இரகசிய பயிற்சி, கொரில்லா-மறை முகத் தாக்குதல், மறைமுக தற்கொலைப்படை, மனித வெடிகுண்டு போன்றவற்றைக் கூறுகின்றனவா? ஒருவன் எவ்வளவு உயரிய நோக்கத்திற்காக, முழு சமுதாயத்தையே காப்பாற்றும் எண்ணத்துடனே கூட, தற்கொலைதான் செய்கிறோம் என்று அறிந்த நிலையில் தற் கொலை செய்து கொள்வானேயானால் அவனுக்கு நிரந்தர நரகமே! உலகில் வாழப் பிடிக்காமல், அல்லது கஷ்டங்களை, சிரமங்களை சகித்துக் கொள்ள பிடிக்காமல் ஒருவன் தற்கொலை செய்து கொண் டால்தான் அவனுக்கு நிரந்தர நரகம்; ஆனால் இஸ்லாத்தையும், முஸ்லிம்களையும் காப்பாற்றும் எண்ணத்துடன் ஒருவன் தற்கொலை செய்து கொண்டால் அது தற்கொலை ஆகாது; அவன் "ஷஹீத்" அந்தஸ்தை அடைவான் என சில புரோகித மவ்லவிகள் ஃபத்வா கொடுக்கின்றனர். இப்படி நபி(ஸல்) சொல்லியுள்ள ஆதாரத்தை இந்த புரோகித மவ்லவிகள் காட்ட முடியுமா? அல்லாஹ்வோ, அவனது தூதரோ விதிக்காத ஒன்றை இவர்கள் ஃபத்வாவாக கொடுப்பதற்கு இவர்களுக்கு என்ன அருகதை இருக்கிறது? என்ன தகுதி இருக்கிறது? அல்குர்ஆன் 42:21, 49:16யிலுள்ள இறை எச்சரிக்கைகள்படி

அல்லாஹ்வுக்கு இணைவைக்கும் பெருங்குற்றத்தை தாங்கள் செய் வதை அவர்கள் உணரவில்லை.

**தற்கொலைப்படை, மனித வெடிகுண்டை நியாயப் படுத்தலாமா?**

இன்று இவர்கள் கடைபிடிக்கும் மறைமுகத்தாக்குதல், தற்கொலைப் படை, மனித வெடிகுண்டு இவற்றை இந்தப் புரோகிதர்கள் எவ்வாறு நியாயப்படுத்துகிறார்கள் தெரியுமா?

முஸ்லிம்களின் எதிரிகளிடம் நவீன ஆயுதங்கள், மற்றும் தாக்கு தலுக்குக் தேவையான போர் தளவாடங்கள், அதி நவீன கருவிகள் அனைத்தும் நிறைவாக இருக்கின்றனவாம். முஸ்லிம்களிடம் அப்படிப் பட்ட அதி நவீன கருவிகள் எதுவும் இல்லையாம். அதனால் நிர்ப்பந்த நிலையில் மறைமுகத் தாக்குதல், தற்கொலைப்படை, மனித வெடி குண்டு என முஸ்லிம்கள் செயல்படும் கட்டாயத்தில் இருக்கிறார்களாம்.

இந்த புரோகித முல்லாக்கள் எந்த அளவு கல்நெஞ்சத்தோடு முஸ்லிம்களை ஏமாற்றி வழிகெடுக்கிறார்கள் என்பதை அறியும்போது நெஞ்சு வெடித்துவிடும் போல் இருக்கிறது. ஆரம்பத்தில் முஸ்லிம்கள் குர்ஆனோடு நேரடித் தொடர்புடன் இருந்த கால கட்டத்தில், விஞ்ஞானத்துறையிலும், மருத்துவத்துறையிலும், மற்றும் அனைத்து துறைகளிலும், கடல் கடந்த வாணிபத்திலும் முஸ்லிம்கள் தானே உலகின் முன்னோடிகளாகவும், வழிகாட்டிகளாகவும் இருந்தார்கள்.

அதே நிலை நீடித்திருந்தால் இன்று முஸ்லிம்களின் அதி உன்னத நிலை சொல்லித் தெரிய வேண்டிய ஒன்றா? முழு உலகையும் முஸ்லிம்கள் தங்கள் கட்டுப்பாட்டில் வைத்து, இறையாட்சியை வழிநாட்டும் வலிமை பெற்றிருப்பார்கள். அதி உன்னத நிலையிலி ருந்த முஸ்லிம்களை அதலபாதாளத்தில் வீழ்த்தியது யார்? இந்த சண்டாள புரோகித முல்லாக்கள்தானே? கேவலம் அற்ப இவ்வுலக ஆதாயத்திற்காக, முஸ்லிம்களை சுரண்டி வாழ்வதற்காக, அல்குர் ஆனுடன் நேரடித் தொடர்புடன் இருந்த முஸ்லிம்களை, குர்ஆன் உங்க ளுக்கு விளங்காது; ஆலிம்களாகிய எங்களுக்கே விளங்கும் என்று

நயவஞ்சகமாகக் கூறி, முஸ்லிம்களை அல்குர்ஆனிலிருந்து தூரப்படுத்தியதுதான். ஹிட்லரின் மந்திரி கொயபல்ஸைப் போல், அதையே மீண்டும் மீண்டும் முஸ்லிம்களிடம் சொல்லி, அந்தப் பொய்க் கூற்றை முஸ்லிம்களின் ஆழ் மனதில் பதிய வைத்து விட்டார்கள்.

முஸ்லிம்களும் இந்த நயவஞ்சகப் புரோகிதர்களை நம்பி அல்குர் ஆனை அவர்களிடம் ஒப்படைத்துவிட்டு, அல்குர்ஆனுக்கு இந்தப் புரோகிதர்கள் நயவஞ்சக எண்ணத்துடன் கொடுக்கும் சுய விளக்கங் களையே, இறைவாக்காக ஏற்று செயல்படுத்தி வருகின்றனர். அதனால் வீழ்ச்சியின் அதலபாதாளத்தில் வீழ்ந்து கிடக்கிறார்கள்.

முஸ்லிம்கள், இந்த வீழ்ச்சியின் காரணமாக, தங்களின் வெறுப்பை இந்தப் புரோகிதர்கள் பக்கம் திருப்பி விடக் கூடாது என்ற பயத்தில், இந்த மறைமுகத்தாக்குதல், தற்கொலைப்படை, மனித வெடி குண்டு என, இன உணர்வுடன் வீழ்ந்து கிடக்கும் முஸ்லிம்களை மேலும் வழிகேட்டில் இட்டுச் செல்கிறார்கள் இந்த நயவஞ்சகப் புரோகிதர்கள்.

## முஸ்லிம்களே முஸ்லிம்களை கொன்று குவிக்கும் அவலம்!

நயவஞ்சகப் புரோகிதர்களின் குர்ஆனுக்கும், ஹதீஸுக்கும் முரண் பட்ட இந்த ஃபத்வா–தீர்ப்பால், பல முஸ்லிம் நாடுகளில் இடம் பெறும் பயங்கர வாதம், தீவிர வாதம், வன்முறைச் செயல்கள், மனித வெடிகுண்டு என முஸ்லிம்களே முஸ்லிம்களைக் கொன்று குவித்து, நரகத்திற்குப் போகும் கூட்டத்தில் தங்களையும் ஆக்கிக் கொள்கிறார் கள். முஸ்லிம்களின் எதிரிகளைத் தாக்க என இந்த நயவஞ்சக புரோகிதர்கள் கொடுத்த ஃபத்வா–தீர்ப்பு இன்று முஸ்லிம்களே முஸ்லிம்களைக் கொன்று குவிக்கப் பயன் படுகிறது.

## நெஞ்சம் கல்லாய்ப் போன புரோகிதர்கள்!

முஸ்லிம் நாடுகளிலேயே இப்படிப்பட்ட அராஜகச் செயல்கள், வேறு எந்த நாடுகளிலும் இடம் பெறாத அளவுக்கு நடந்து கொண்டிருந்தும், முஸ்லிம்களே முஸ்லிம்களை அழித்துக் கொண்டிருந்தும், அதைப் பார்க்கும் இந்தப் புரோகித முல்லாக்களுக்கு முஸ்லிம் மக்களைப்

பற்றிய அக்கறை-கவலை ஏற்பட்டிருக்கிறதா? அதுதான் இல்லை. புரோகிதத் தொழிலால் அவர்களின் உள்ளங்கள் இறுகிக் கல்லாகப் போய் விட்டனவே. பின் எப்படி இறை உணர்வு பெறப் போகிறார்கள்?

(பார்க்க 2:74, 5:13)

இன்று உலகளாவிய அளவில் பயங்கரவாதம், தீவிரவாதம், வன்முறைச் செயல்கள், தற்கொலைப் படைத்தாக்குதல், மனித வெடிகுண்டு தாக்குதல் என முஸ்லிம்கள், முஸ்லிம் அல்லாதவர்கள், வயதானவர்கள், நோயாளிகள், பெண்கள், சிறுகுழந்தைகள், இவர்களின் கோரிக்கைக்களுக்கு நேரடியாகவோ, மறைமுகமாகவோ எந்த வகையிலும் சம்பந்தமில்லா அப்பாவிகள் என கொன்று குவிக்கப்படுவதற்கும், முஸ்லிம் நாடுகளில் மட்டுமே இப்படிப்பட்ட அராஜக செயல்கள் மலிந்து காணப்படுவதற்கும் முக்கிய காரணம், இந்த மூட முல்லா புரோகிதர்கள் சுய நலத்துடன் அளிக்கும் மூடத்தனமான ஃபத்வாக்கள் – தீர்ப்புகள் என்றால் அது மிகையாகாது.

புரோகித முல்லாக்களின் துர்போதனையை-வழிகேட்டுப் போதனையை இறைவாக்காக ஏற்று, முஸ்லிம்கள் அல்குர்ஆனுடன் தங்களுக்கிருந்த நேரடித் தொடர்பை கைவிட்டு, அல்குர்ஆனை இந்த நயவஞ்சக புரோகிதர்களிடம் ஒப்படைத்ததால் இவ்வுலகிலும் மறு உலகிலும் மாபெரும் இழப்புக்கு ஆளானார்கள்; ஆளாவார்கள்.

### அல்குர்ஆனை ஆராயும் யூதர்கள்!

ஆனால் இஸ்லாத்தை ஒழித்துக்கட்ட கங்கணம் கட்டிக்கொண்டு குர்ஆனில் குறை கண்டுபிடிக்கும் நோக்கத்துடன் குர்ஆனை வரி விடாமல் ஆராயும் யூதர்கள், அதிலுள்ள விஞ்ஞான நுட்பங்களைக் கண்டறிந்து செயற்கரிய செயல்கள் செய்து வருகிறார்கள். உலகில் சுமார் ஒரு கோடி யூதர்கள் மட்டுமே உள்ள நிலையில், அவர்களிள் நூற்றுக் கணக்கானோர் மருத்துவ, அறிவியல் துறைகளில் நோபல் பரிசை வென்றுள்ளார்கள்.

விஞ்ஞான தொழில் நுட்பத்துறைகளையும், ஊடகங்களையும் அவர்களது கரங்களில் சிக்கவைத்து உலகையே ஆட்டிப்படைக்கிறார்கள். இஸ்லாத்திற்கு விரோதமான செய்திகளையும், அவதூறுகளையும் ஒளியை விட வேகமாகப் பரப்பி வருகிறார்கள்.

அவர்களை விட நூற்றி இருபத்தைந்து மடங்குக்கு மேல் இருக்கும்

முஸ்லிம்களில் நோபல் பரிசு பெற்றவர்கள் ஐவரோ, அறுவரோ மட்டுமே. அதுவும் விஞ்ஞான, மருத்துவ, தொழில் நுட்பத்துறைகளில் அல்ல. ஆக மொத்தத்தில் ஆட்சி இழந்து, அனைத்தையும் இழந்து, அமைதி இழந்து இன்று முஸ்லிம்கள் அல்லல்பட்டுக் கொண்டிருக்க அடிப்படைக் காரணம், முஸ்லிம்கள் குர்ஆனையும், ஹதீஸையும் இந்த கேடுகெட்ட புரோகித முல்லாக்கள் கைகளில் ஒப்படைத்து விட்டதே!

அப்படிப்பட்ட ஒரு கேடுகெட்ட கொடிய நிலையை உருவாக்கியதே இந்தப் புரோகித முல்லாக்கள் தான்.

**அல்லாஹ்வின் அச்சமற்றவர்கள்!**

நபி(ஸல்) அவர்களின் மறைவுக்குப் பிறகு மார்க்கத்தில் இந்தப் புரோகித மவ்லவிகள் ஆளாளுக்கு சுய விளக்கம் கொடுத்து புதிய, புதிய சட்டங்களை இயற்றும் அதிகாரம் அணுவளவும் இவர்களுக்கு இல்லை என்பதை அல்குர்ஆன் 7:3, 33:36,66,67,68, 59:7 வசனங்களி லுள்ள இறை எச்சரிக்கைகள் உணர்த்துவதை உணர முடியவில் லையா? அற்ப இவ்வுலக ஆதாயங்கள்தானே இவர்களை இப்படி எல் லாம் கோணல் வழிகளில் இட்டுச் செல்ல வழி வகுக்கின்றன. இவர்கள் அல்லாஹ்வை பயந்து கொள்ள மாட்டார்களா? எவ்வித சுய விளக்கம் இல்லாமல், அவர்களின் இப்படிப்பட்ட செயல்பாடுகளுக்கு குர்ஆன், ஹதீஸ் ஆதாரம் தரக் கடமைப்பட்டிருக்கிறார்கள். எனவே இந்த “ஜிஹாத்” அமைப்பினரும் கோணல் வழிகளில் செல்கிறார்களே அல்லாமல் நேர்வழியில் இல்லை என்பதை அறிய முடிகிறது.

## “கிலாஃபத் இயக்கம்”

கிலாஃபத் என்ற ஆட்சி அதிகாரம் இருந்தால் மட்டுமே முஸ்லி ம்களை ஒன்றிணைக்க முடியும். ஒற்றுமை ஏற்படுத்த முடியும் என்று கூறிக் கொண்டு கிலாஃபத் அமைப்பை ஏற்படுத்தப் போகிறோம் என்று கூறிக் கொண்டு சிலர் சில முயற்சிகளை ஆப்கானிஸ்தான், எகிப்து போன்ற நாடுகளில் செய்து வருகின்றனர். இதையும் தமிழ்நாட்டில் இறக்குமதி செய்தவர் தவ்ஹீத் மவ்லவி(?) யே!

ஆட்சி அதிகாரம் உள்ள அமீருக்கு மட்டுமே கட்டுப்பட்டு அடிபணிந்து நடக்க வேண்டும். அந்த கிலாஃபத் அமைப்பைத்தான் பிளவுபடுத்தக் கூடாது. அதுவே தண்டனைக்குரிய குற்றம் என்று 1999-ல் அல்முபீனில் ஒரு பெரிய(?) அபத்த ஆய்வுக் கட்டுரை வெளியிட்டார். அந்த அடிப்படையில் “இஸ்லாம் அல்லாத இயக்கம் எங்களுக்கில்லை; நாங்கள் புரோகிதர்களை சப்ளை செய்வதில்லை” என்று பகிரங்கமாக 1986-ல் அந்நஜாத்தில் ஆசிரியர் பொறுப்பில் இருந்து கொண்டு அறிவித்தவர், அதற்கு நேர் முரணாக, மத்ஹபுகளை விட்டு வெளியேறி குர்ஆன், ஹதீஸ் மட்டுமே மார்க்கம் என்ற உறுதியுடன் ஓரணியில் ஒன்றிணைந்தவர்களை பிளவுபடுத்தி பல பிரிவுகளில் ஆக்கிய பெருமை அவருக்கே உண்டு.

இந்த தவ்ஹீத் மவ்லவி(?)யின் துர்போதனையில் தயாரான ஒரு சிலர் இப்போது கிலாஃபத் இயக்கம் அமைக்கப் பாடுபடுகிறோம் என கிளம்பி இருக்கிறார்கள். அதாவது அல்லாஹ் முஸ்லிம்களின் தகுதியைப் பார்த்து அவன் கொடுப்பதாக வாக்களித்துள்ள ஆட்சி அதிகாரத்தை-கிலாஃபத்தை இவர்களாக அல்லாஹ்விடமிருந்து தட்டிப் பறித்து விடலாம் என கனவு காண்கின்றனர் இந்த இயக்கத்தினர். இதில் தீவிரமாக ஈடுபட்டிருப்பவர்களில் சிலர், தங்களின் இவ்வுலக நியாய தேவைகளைக் கூட தங்களின் சொந்த உழைப்பைக் கொண்டு நிறை வேற்றிக் கொள்ள வழி தெரியாமல் புரோகிதர்கள் போல் பிறரின் தயவை எதிர்பார்த்து இருப்பவர்களே!

**அர்த்தமற்ற உளறல்கள்!**

இவர்களின் இந்த நிலை தடுமாற்றத்திற்கும் தவ்ஹீத் மவ்லவி(?)யின் தவறான விளக்கமே காரணம். 1999 மார்ச் அல்முபீன் மாத இதழில் “அமீருக்குக் கட்டுப்படுதல் ஓர் ஆய்வு” என்ற தலைப்பில் இதழ் முழுக்க அர்த்தமற்ற உளறல்கள் கொண்டு நிரப்பி இருந்தார். அந்த உளறல்கள் பற்றிய அலசல் அந்நஜாத் 2008 மே இதழில் இடம் பெற்று ள்ளது; பார்வையிடவும். 1999 மார்ச் அல்முபீன் இதழில் ரிஸாலத் என்ற தூதுத்துவ பணியில் ஸியாஸத் என்ற அரசியல்

தலைமையும் அடங்கும் என உளறி இருந்தார். சுருங்கச் சொல்லின் நபிமார்கள் அனைவரும் அரசியல் தலைவர்களாகவும் இருந்தார்கள் என்று கூறி இருந்தார். நபிமார்களில் சிலரைத் தவிர மற்றவர்கள் ஆட்சித் தலைவர்களாக இருந்ததில்லை. ஆனால் அன்று அவருக்கு, ஒன்றுபட்டு செயல்பட்ட ஜமாஅத்தை பிளவு படுத்திய குற்றத்தை மறைக்க ஒரு நொண்டிச் சாக்கு தேவைப்பட்டது. அதற்கு முன்னர் 1986-ல் "இஸ்லாம் அல்லாத இயக்கம் எங்களுக்கில்லை" என்று பகிரங்கமாக அந்நஜாத்தில் அறிவித்துவிட்டு, தமிழகமெங்கும் பிரசார பணி செய்ததை எல்லாம் இருட்டடிப்புச் செய்துவிட்டு, 1987-ல் ஒன்றுபட்டி ருந்த "ஜமாஅத் அல்முஸ்லிமீன்" என்ற பேரியக்கமான முஸ்லிம் ஜமாஅத்தின் ஆரம்ப நிலையிலேயே அதைப் பிளவுபடுத்தி "ஜாக்" புதிய அமைப்பு கண்டபோது, அதை நியாயப்படுத்தி சொன்ன பொய்யான வாதம் "நான் அபூ அப்தில்லாஹ்வை அமீராக ஏற்றிருக்கவில்லை. இதோ இருக்கிறாரே S.கமாலுத்தீன் மதனி அவரையே அமீராக ஏற்றிருக்கிறேன்" என்று பம்பாய் முதல் பல இடங்களிலும் சொல்லித் திரிந்த தோடு, பத்திரிகையில் எழுதவும் செய்தார்.

**சந்தர்ப்பவாதி !**

பின்னர் 1998-ல் தன்னுடைய சொந்த அற்ப உலக ஆதாயங்களுக் காக இரண்டாவதாக அமைத்த "**ஜாக்**"(JAQH) புதிய அமைப்பையும் பிளவு படுத்தும் கட்டாயம் அவருக்கு ஏற்பட்டது. இங்கு முன்னர் அபூ அப்தில் லாஹ்வை அமீராக நான் ஏற்றுக் கொண்டதில்லை என்று பொய் சொன்னது போல், S.கமாலுத்தீன் மதனியை நான் அமீராக ஏற்றுக் கொண்டதில்லை என்று பொய் சொல்ல முடியாமல் போய் விட்டது. காரணம் அவரை அமீராக ஏற்றதை பல இடங்களில் உறுதிப்படுத்தியுள்ளார். எனவே அந்த ஜமாஅத்தைப் பிளவுபடுத்தப் புதிய காரணம் சொல்லும் நிர்ப்பந்தத்திற்கு ஆளானார். அப்போது அவரது கற்பனையில் உதித்ததுதான் ஆட்சி அதிகாரம் உள்ள ஜமாஅத்தைத்தான் பிளவு படுத்தக்கூடாது. கமாலுத்தீன் மதனி ஆட்சி அதிகாரம் உள்ள அமீர் அல்ல; எனவே **ஜாக்** ஜமாஅத்தைப் பிளவு படுத்தலாம் என்பதை நிலை நாட்டவே அல்முபீனில் "அமீருக்குக் கட்டுப்படுதல் ஓர் ஆய்வு" என்ற பெயரில் உளறல் கட்டுரை வெளியிட

வேண்டியதாயிற்று. அதன் ஆரம் பத்தில் ஆட்சியாளர்கள் பற்றிய இரண்டு ஹதீஸ்களை எடுத்து எழுதி அவற்றிற்கு சுய விளக்கம் கொடுத்து ரிஸாலத் என்பதில் ஸியாஸத் (அரசியல் தலைமை)யும் அடங்கும் என பிதற்றி இருந்தார். அதாவது நபிமார்கள் அனைவரும் ஆட்சியாளர்கள் என உளறி இருந்தார்.

**தவ்ஹீத் மவ்லவிக்கு(?) மார்க்கம் குடும்பச் சொத்து போலும்!**

அதேபோல் **ஜாக்**கை பிளவுபடுத்தி மூன்றாவதாக அமைத்த தமுமுகவை பிளவு படுத்தி நான்காவதாக அமைத்த **ததஜ**வை நியாயப்படுத்தி அதற்கொரு புது விளக்கம் கொடுத்தார். அதாவது மார்க்கம் என்பது அவரது குடும்பச் சொத்து என்ற நினைப்பில் அவரது மூளையில் உதிப்பதை எல்லாம் மார்க்கம் என்று சொல்லி, தன்னை நம்பியுள்ள அப்பாவிகளை ஏமாற்றி வழிகெடுத்து வருகிறார். தவ்ஹீத் மவ்லவி(?) இத்தனை அந்தர்பல்டிகள் அடித்தும் அவர் பின்னால் செல்பவர்கள் சுதாரிக்கவில்லையே! அவரது சூன்ய பேச்சில் கட்டுண்டு கிடப்பதுதான் பெரிய ஆச்சரியம்!

**அந்தர் பல்ட்டி !**

அன்று 1999-ல் தவ்ஹீத் மவ்லவி(?) யின் இந்த ஆராய்ச்சி(?) கட்டு ரையை ஆகா ஓகோ என பாராட்டி அதற்கு உங்களால் மறுப்புக் கொடுக்க முடியுமா? என சொல்லித் திரிந்தவர்கள்தான் இன்று இந்த “கிலாஃபத்” இயக்கத்தின் முன்னோடிகளாக இருக்கிறார்கள். இப்போது அந்த “கிலாஃபத்” இயக்கம் வளர்ந்து வருவதைக் கண்டு அஞ்சிய தவ்ஹீத் மவ்லவி(?) ஏகத்துவம் 2008 பிப்ரவரி இதழில் “நபிமார்கள் அனைவரும் ஆட்சியாளர்கள் அல்லர்” என்று, அன்று அவரே சொன்ன வாதத்தை மறுத்துப் புது வாதம் வைத்துள்ளார்.

அவருக்குத் தேவைப்பட்டால் புதியதொரு வாதத்தைக் கற்பனை செய்து எடுத்து வைப்பார்; பின்னர் அதுவே அவருக்கு எதிராக அமையும் போது அதை மறுத்து இன்னொரு புதியதொரு வாதம் வைப்பார். அவருக்குத் தேவைப்படும் போது ஒரு ஹதீஸை மிகமிக ஆதாரபூர்வமானது என்பார்; அதே ஹதீஸ் அவரது சுயநலத்திற்கு முரணாக அமையும்போது அந்த ஹதீஸ் பலவீனமானது என்று

சிறிதும் கூச்சமின்றி எடுத்துரைப்பார். இப்படி அந்தர்பல்ட்டிகள் பல அடித்தும், அவரது ஆதரவாளர்கள் அவற்றை உணராது, அவர் பின்னால் கண்மூடிச் செல்வது மிகவும் வேதனைக்குரியதே!

### கிலாஃபத் இயக்கம் குர்ஆன், ஹதீஸுக்கு உட்பட்டதா?

இப்போது முஸ்லிம்களை "கிலாஃபத்" ஆட்சியின்கீழ் கொண்டு வந்து விட்டால் அவர்களிடையே ஒற்றுமை ஏற்படும்; முஸ்லிம்களின் நிலை உயர்ந்து விடும்; முஸ்லிம்களின் இன்னல்கள் அனைத்திற்கும் தீர்வு ஏற்பட்டுவிடும் என்று கூறும் "கிலாஃபத்" அமைப்பினரின் வாதம் குர்ஆன் ஹதீஸுக்கு உட்பட்டு இருக்கிறதா? என்று பார்ப்போம்.

**நபியே! நீர் கூறுவீராக: அல்லாஹ்வே! ஆட்சிகளுக்கெல்லாம் அதிபதியே! நீ யாரை விரும்புகிறாயோ அவருக்கு ஆட்சியைக் கொடுக்கிறாய்; இன்னும் ஆட்சியை நீ விரும்புவோரிடமிருந்து அகற்றியும் விடுகிறாய்; நீ நாடியோரை கண்ணியப்படுத்துகிறாய்; நீ நாடியோரை இழிவு படுத்தவும் செய்கிறாய். நன்மைகள் யாவும் உன் கைவசமேயுள்ளன; அனைத்துப் பொருட்கள் மீதும் நிச்சய மாக நீ ஆற்றலுடையவனாக இருக்கிறாய்.** (ஆல இம்ரான் 3:26)

**உங்களில் எவர் நம்பிக்கை கொண்டு நற்செயல்கள் புரிகிறார் களோ அவர்களை, அவர்களுக்கு முன்னிருந்தோரை ஆட்சி யாளர்களாக்கியது போல், பூமிக்கு நிச்சயமாக ஆட்சியாளர் களாக்கி வைப்பதாகவும், இன்னும் அவன் அவர்களுக்காக பொருந்திக் கொண்ட மார்க்கத்தில் அவர்களை நிச்சயமாக நிலைப்படுத்துவதாகவும், அவர்களுடைய அச்சத்தைத் திட்டமாக அமைதியைக் கொண்டு மாற்றி விடுவதாகவும், அல்லாஹ் வாக்களித்திருக்கிறான். "அவர்கள் என்னோடு (எதையும், எவரை யும்) இணை வைக்காது, எனக்கு மட்டுமே அடி பணிவார்கள்". இதன் பின்னர் எவர் மாறு செய்கிறாரோ அவர்கள் பாவிகள்தாம்.**
(அந்நூர் 24:55)

இந்த இரண்டு இறைவாக்குகளையும் இறையச்சத்தோடு, நடுநிலை யோடு, சுய சிந்தனையோடு படித்து உணர்கிறவர்கள், ஆட்சி அதிகாரம் –கிலாஃபத் மனிதர்களுடைய முயற்சியால் கிடைக்கும் ஒரு அதிகாரம்

அல்ல; அல்லாஹ்வுக்கு எந்த நிலையிலும், எப்படிப்பட்ட சூழ்நிலை யிலும், யாரையும், அவர்கள் உயிரோடு இருந்தாலும், மரணித்திருந் தாலும் அவர்களை இணையாக்காமல், அல்லாஹ்வின் கட்டளை களுக்கு எவ்வித சுயவிளக்கமும் இல்லாமல் அப்படியே ஏற்று, அவனுக்கு முற்றிலுமாக அடிபணிவது கொண்டே, மனிதனுக்குத் தேவைப்படும், அல்லாஹ் பொருந்திக் கொண்ட நேர்வழியான மார்க்கம், அமைதி, சுபீட்சம், மேன்மை, ஆட்சி அதிகாரம் அனைத்தும் அல்லாஹ்வால் அருளப்படும் என்பதை விளங்கலாம்.

இங்கு இப்றாஹீம் (அலை) இறைவனது கட்டளைக்கு முழுமையாக அடிபணிந்து அன்பு மனைவியையும், ஆசை மகனையும் வனாந் தரத்தில் கொண்டு விட்டது, அதே ஆசை மகனை அறுத்துப் பலியிடத் துணிந்தது, அல்லாஹ்வின் கட்டளைகளுக்கு எப்படி முழுமையாக அடிபணிவது என்பதை பிசகர உணர்த்துவதை முஸ்லிம்கள் படிப்பி னையாகக் கொள்ளவேண்டும். (அல்குர்ஆன் 37:102-113)

### கிலாஃபத் அமைக்க பாடுபடுகிறவர்கள் நேர்வழியில் இல்லை!

இதை விட்டு "கிலாஃபத்" - ஆட்சி அதிகாரத்தை முயற்சித்து அது கிடைத்துவிட்டால், மேலேயுள்ள அனைத்தும் கிடைத்துவிடும் என்ற நப்பாசையில் கிலாஃபத்தை அடைய முயற்சிப்பவர்கள் 24:55 கூறுவது போல் அல்லாஹ்வுக்கு மாறு செய்யும் பாவிகளாக மட்டுமே இருக்க முடியும். "அல்லாஹ் மனிதனுக்குக் கொடுக்கும் வாழ்வாதாரங் களை (ரிஜ்க்) அவன் முயற்சித்துத்தானே பெற வேண்டியுள்ளது; அதுபோல் அல்லாஹ் கொடுக்கும் ஆட்சி அதிகாரத்தைப் பெற முயற்சிப்பதும் தவறில்லையே" என்று வாதம் வைக்கலாம். வாழ்வா தாரங்களை முயற்சித்துப் பெறுமாறு அல்ஜும்ஆ 62:10-ல் அல்லாஹ் நேரடியாகக் கட்டளையிடுகிறான். ஆட்சி அதிகாரத்தை குறுக்கு வழியில், சொந்த முயற்சியில் பெறுமாறு அல்லாஹ் அல்குர்ஆனில் நேரடியாகக் கட்டளையிட்டிருக்கிறானா? என்று பார்த்தால் அப்படி ஒரு ஆதாரத்தையும் பார்க்க முடியவில்லை.

### கோணல் வழி செல்வோரின் தந்திரம் !

பொதுவாக அல்லாஹ் அருளிய நேர்வழியை விட்டு ஷைத்தானின் கோணல் வழிகளில் மக்களை இழுத்துச் செல்ல புரோகித முல்லாக் களும், அற்ப உலக ஆதாயங்களை நாடும் தலைவர்களும் அல்குர்

ஆனில் இடத்திற்கேற்றவாறு பொருள் கொள்ள வேண்டிய இடங்களில், அவர்களின் தவறான வழிகெட்டக் கொள்கையை நிலை நாட்ட குறிப்பிட்ட ஒரே பொருளை மட்டும் அழுத்தமாகக் கூறி பிடிவாதம் பிடிப்பார்கள். உதாரணமாக ருஃயத், அரா, தரா போன்ற பதங்களுக்கு கண்ணால், தகவலால், அறிவால், ஆய்வால், கணிப்பீட்டால், கணக்கீட்டால் பார்ப்பது போன்ற பல பொருள்கள் இருக்க, கண்ணால் பார்ப்பது மட்டுமே என அடம்பிடிப்பார்கள். தலைப்பிறையை கண்ணால் மட்டுமே பார்த்து முடிவு செய்ய வேண்டும் என அடம்பிடிப்பார்கள். தஃவீல் என்ற பதத்திற்கு விளக்கம், முடிவு என பொருள்கள் இருக்க 3:7-ல் வரும் தஃவீல் பதத்திற்கு முடிவு என பொருள் கொள்ளாமல், விளக்கம் என பொருள் கொண்டு, விளங்க முடியாத வசனங்களை அல்லாஹ் அல்குர்ஆனில் இடம்பெறச் செய்திருப்பானா? என இவர்களாகக் கற்பனை செய்து கொண்டு “முத்தஷாபிஹாத்” வசனங்களின் விளக்கங்களை அல்லாஹ்வும், அறிவில் சிறந்தவர் களும் அறிவார்கள் என இறைவனுக்கு இணை வைக்கும் நிலையில் பொருள் கொண்டு வழிகேட்டில் செல்வார்கள். லைலத் என்ற பதத்திற்கு இரவு என்றும் நாள் என்றும் இரு பொருள்கள் இருக்க, இரவு என்று மட்டுமே பொருள் கொண்டு 2:51, 7:142, 44:3, 97:1-3 போன்ற இடங்களில் நாள் என்பதற்கு இரவு என்று அடம்பிடித்து கோணல் வழி செல்வது, புரோகிதர்களின் வாடிக்கை.

அதேபோல் இந்த “கிலாஃபத்” இயக்கத்தினர் பனீ இஸ்ராயீல் 17:80-ல் காணப்படும்.

**“என் இறைவனே! என்னை உண்மையுடன் நுழையச் செய்வாயாக! மேலும் உண்மையுடன் என்னை வெளிப்படுத்து வாயாக! மேலும் உன் புறத்திலிருந்து எனக்கு உதவி செய்யும் ஒரு சக்தியை அருள்வாயாக என்று கூறுவீராக”.** (17:80)

என்ற இறைவாக்கை ஆதாரமாகக் காட்டி கிலாஃபத்திற்காக-அதை அடைவதற்காக முயற்சிகள் எடுக்கலாம் என்ற வாதத்தை வைக்கின் றனர். இந்த இறைவாக்கின் இறுதியில் வரும் “சுல்த்தான்” என்ற பதம் கிலாஃபத்தையே குறிக்கிறது என்பது அவர்களின் வாதம். அல்குர் ஆனில் இந்த “சுல்த்தான்” என்ற பதம் சுமார் 37 இடங்களில்

வருகிறது. அவை அனைத்திலும் ஆதாரம், அத்தாட்சி, சான்று, அனுமதி, அதிகாரம், வெற்றி, சக்தி போன்ற பொருள்களில் பயன்படுத் தப்பட்டுள்ளது. தவ்ஹீத் மவ்லவி(?) அமீர் என்ற பதத்திற்கு அதிகாரம் பெற்றவர் என்றிருப்பதை ஆட்சி அதிகாரம் பெற்றவர் என்று சுயவிளக்கம் கொடுப்பதுபோல், இங்கு கிலாஃபத் இயக்கத்தினர் சுல்த்தான் என்ற பதத்திற்கு ஆட்சி அதிகாரம் - கிலாஃபத் என சுய விளக்கம் கொடுக்கின்றனர்.

**சுல்தான் என்றால் ஆட்சி அதிகாரம் மட்டுமா?**

அமீர், சுல்த்தான் போன்ற பதங்கள் ஆட்சி அதிகாரம் பெற்றவர் களையும் குறிக்கும் என்று பொருள் கொள்ள முடியுமே அல்லாமல், ஆட்சி அதிகாரம் பெற்றவர்களை மட்டுமே குறிக்கும் என்று பொருள் கொள்வது மிகவும் தவறாகும். தவ்ஹீத் மவ்லவி(?)யும், கிலாஃபத் இயக்கத்தினரும் இப்படி தவறானபொருள் கொண்டதாலேயே நேர்வழி விட்டு கோணல்வழிகளில் செல்ல நேரிட்டுள்ளது.

மேலும் இந்த 17:80 இறைவாக்கு, அல்லாஹ்விடம் ஒரு அதிகா ரத்தை, ஒரு சக்தியை, ஒரு ஆற்றலை அளித்தருள பிரார்த்திக்க வழி காட்டுகிறதே அல்லாமல், கிலாஃபத்தை அடையப் பெற்றால்தான் சமுதாயம் ஒன்றுபடும், உயர்வடையும், அதனைப் பீடித்துள்ள இழி நிலைகள் அனைத்தும் அகலும் என்பதற்கு எவ்வித ஆதாரமும் இல்லை. அதற்கு மாறாக 3:103, 7:3, 33:36 இறைக் கட்டளைகள் படி முஸ்லிம்கள் அல்லாஹ்வுக்கும் தங்களுக்குமிடையில் இடைத்தரகர் களாக-புரோகிதர்களாக யாரையும் எடுத்துக் கொள்ளாமல், நேரடியாக தன்னம்பிக்கையுடன், சுய சிந்தனையுடன் குர்ஆன், ஆதாரபூர்வமான ஹதீஸ் இவற்றைப்படித்து, உள்வாங்கி அவற்றின் “முஹ்க்மாத்”- குறிப்பாக ஒரே பொருளை மட்டும் தரும், இறைவாக்குகளில் உள்ளது உள்ளபடி எவ்வித சுய விளக்கமும் இல்லாமல் எடுத்து நடப்பது கொண்டு மட்டுமே ஈடேற்றம் பெற முடியும், ஒன்றுபட முடியும். அல்லாஹ் 24:55-ல் வாக்களித்துள்ள அனைத்தும் கிடைப்பதுடன், ஆட்சி அதிகாரமும்-கிலாஃபத்தும் நிச்சயமாகக் கிடைக்கும். இது அல்லாஹ்வின் உறுதியான வாக்காகும்.

எனவே கிலாஃபத் இயக்கத்தினரும் அல்லாஹ்வின் நேரடிக்

கட்டளைகளைப் புறக்கணித் துவிட்டு– நிராகரித்து விட்டு, அவர்களைப் போன்ற மனிதர்களின் சுய விளக்கப்படி, முயற்சித்து கிலாஃபத்தை அடைந்து விட்டால் முஸ்லிம்களின் அனைத்துப் பிரச்சினைகளும் தீர்ந்து விடும் என்ற மூட நம்பிக்கையில் நேர்வழி விட்டு கோணல் வழிகளில் செல்கிறார்கள் என்பதை நடுநிலையுடன் சிந்திப்பவர்கள் விளங்க முடியும்.

## இன உணர்வுடன் ஒன்று படுவதால் சாதிக்க முடியுமா?

முஸ்லிம்களிடையே காணப்படும் பிரிவுகள் பிளவுகள் எத்தனை இருந்தாலும், குறைந்த பட்சம் இவ்வுலக ஆதாயம் கருதியாவது அரசியல் ரீதியாக ஒன்றுபட்டு விட்டால், மாநிலங்களிலும், மத்தியிலும் கணிசமான **M.L.A.**க்கள், **M.P.**க்களை பெற முடியும். சட்ட மன்றங்களிலும், மக்கள் மன்றத்திலும் முஸ்லிம்களின் குரல் ஓங்கி ஒலிக்கும். முஸ்லிம்கள் தங்களது நியாயமான உரிமைகளைப் பெற்றுக் கொள்ள வாய்ப்புகள் நிறையவே கிடைக்கும். அது மட்டுமல்ல; மற்ற கட்சிகளும் ஆட்சியைப் பிடிக்க முஸ்லிம்களின் ஆதரவைப் பெறும் ஆசையில் முஸ்லிம்களின் கோரிக்கைகளை நிறைவேற்றித்தர முன் வருவார்கள். இது நல்ல பலனை முஸ்லிம்களுக்குப் பெற்றுத் தரும் என சிலர் எண்ணுகிறார் கள்; எழுதுகிறார்கள். அதற்காகப் பெரும் பொருளாதாரம் செலவிட்டு கடுமையான முயற்சிகளிலும் ஈடுபடுகிறார்கள். இது கேட்பதற்கு இனிமையாக இருக்கிறது. சரியாகவும் படுகிறது.

முஸ்லிம்கள் ஈமானுடைய உணர்வை இழந்து, இன உணர்வுடையவர்களாகவும், மறுமையை விட இவ்வுலகை அதிகமாக விரும்புகிறவர்களாகவும் இருக்கும் வரை இந்த நோக்கம் நிறைவேறாது. அப்படியே இன உணர்வின் அடிப்படையில் முஸ்லிம்கள் ஓர் அரசியல் தலைவர் பின்னால் அணி வகுத்தாலும், அதனால் முஸ்லிம்களுக்கு உரிய நல்ல பலன்கள் இவ்வுலகிலும் கிடைக்கப் போவதில்லை. நாளை மறுமையிலும் கிடைக்கப் போவதில்லை.

1947-ல் நமது இந்திய நாடு சுதந்திரம் அடையுமுன்னர், பிளவு படாதிருந்த இந்திய நாட்டில், தெற்கே கன்னியாகுமரியிலிருந்து

வடக்கே காஷ்மீர் வரை முஸ்லிம்கள் காலஞ் சென்ற பெரும் சட்ட அறிஞர் ஜின்னாவின் தலைமையில் ஒன்றுபட்டிருந்தனர். முஸ்லிம் லீகில் இருந்தனர். காங்கிரஸில் மிகமிக சொற்பமான முஸ்லிம்களே அங்கம் வகித்தனர். பெரும்பான்மை முஸ்லிம்களால், காங்கிரஸிலுள்ள முஸ்லிம்கள், முஸ்லிம்களாகக் கருதப்படவில்லை. அவர்களில் யாரும் இறந்துவிட்டால், அவர்களை முஸ்லிம்களின் மையவாடியில் அடக்கம் செய்யவிடாமல் பெரும்பான்மை முஸ்லிம்கள் தடுத்த வரலாறுகளும் உண்டு.

மார்க்கத்தை முறையாக அறியாத ஒரு முஸ்லிமின் தலைமையில் இந்திய முஸ்லிம்கள் அனைவரும் ஓரணியில் ஒன்று திரண்டிருந்தும், முஸ்லிம்கள் கண்ட பலன் என்ன? ஒன்றுபட்டிருந்த இந்தியா, இந்தியா, பாகிஸ்தான் என இரண்டானது. பாகிஸ்தான் என்ற முஸ்லிம் நாடு கிடைத்து விட்டது என இன உணர்வுமிக்க முஸ்லிம்கள் பெருமிதம் கொண்டார்கள். அதனால் முஸ்லிம்களின் இவ்வுலக வாழ்வாவது உயர்ந்ததா? முஸ்லிம்களுக்காக முஸ்லிம் நாடு உதயமாகிவிட்டது. இஸ்லாமிய ஆட்சியை–இறையாட்சியை அங்கு நிறுவி விடலாம் என்ற ஆசையில் அங்கு குடியேறிய அறிஞர் மௌதூதி அவர்களின் கனவு நனவாகியதா?

தேர்தலில் இறையாட்சியை நிலைநாட்டும் நல்ல நோக்கத்துடன், அதையே தேர்தல் பிரகடனமாகக் கொண்டு போட்டியிட்ட அவரது கட்சி வெற்றி பெற்றதா? இல்லையே! அதற்கு மாறாக இஸ்லாமிய ஆட்சியை நிறுவும் நன் நோக்கத்துடன் தேர்தலில் போட்டியிட்ட அவரது கட்சி படு தோல்வியுற்றது. யூதர்களின் கையில் சிக்கியுள்ள ஊடகங்கள் அனைத்தும் முஸ்லிம்களே இஸ்லாமிய ஆட்சியை–இறையாட்சியை விரும்பாமல், வெறுத்து ஒதுக்கி விட்டார்கள் என உலகம் முழுவதிலும் செய்தி பரப்பி குதுகலித்தார்கள்.

இதற்கு அடிப்படைக் காரணம் என்ன? புரோகிதர்களின் கரங்களில் வலுவாகச் சிக்கி ஈமான்–இறை நம்பிக்கையை இழந்து இன உணர்வில் சிக்கியுள்ள முஸ்லிம்களில் குறிப்பிட்ட ஒரு சிலரையாவது, இந்தப் புரோகிதர்களின் பிடியிலிருந்து விடுவித்து, இறையுணர்வு மிக்கவர்களாக்கி, இறையுணர்வு மிக்க ஒருவரின் தலைமையில் ஒன்று கூட்டினால் மட்டுமே உரிய பலன் கிடைக்கும். அதற்கு மாறாக இன உணர்வு அடிப்படையில் ஒன்றுபட்டு பாகிஸ்தானைப் பெற்ற முஸ்லிம்

கள் இன்று அங்கு எப்படி வாழ்ந்து கொண்டிருக்கிறார்கள்? நாடு பிரிந்து போனதிலிருந்து அங்கு இடம் பெறும் நிகழ்வுகள் அனைவரும் அறிந்ததே. இன உணர்வு மேலீட்டால் பிரிந்தவர்கள், பின்னர் மொழி உணர்வால் உந்தப்பட்டு மீண்டு இரண்டாகப் பிளவுபட்டார்கள். பங்களா தேஷ் உருவானது.

பிரிந்து சென்ற இரண்டு முஸ்லிம் நாடுகளிலும் இஸ்லாமிய ஆட்சி–இறையாட்சியும் இல்லை. நிம்மதியான வாழ்வும் இல்லை; முஸ்லிம் களே பல பிரிவினர்களாகி மாறி மாறி ஒருவரை ஒருவர் கொன்று குவிப்பதே வாடிக்கையாகிவிட்டது. அவர்களது கோரிக்கைகளுக்கு எந்த வித சம்பந்தமும் இல்லாத அப்பாவிகளை எல்லாம் குழந்தைகள், முதியவர்கள், பெண்கள் என எவ்வித பாகுபாடும் இல்லாமல் குண்டு மூலமும், தற்கொலைப் படைகள் மூலமும், மனித வெடிகுண்டு மூலமும் கொன்று குவிக்கும் அராஜக வன்முறைச் செயல்கள் எல்லாம் அந்த முஸ்லிம் நாடுகளில்தான் அதிகமாக இடம் பெறுகின்றன. இதிலிருந்தே அங்குள்ள முஸ்லிம்கள் இறை உணர்வின் அடிப்படையில் செயல்படவில்லை. இன, மொழி, இதர உலகியல் உணர்வுகளில் சிக்கி சீரழிந்து வருகிறார்கள் என்பது உறுதியாகத் தெரிகிறது.

முஸ்லிம்கள் இன உணர்வின் அடிப்படையில் ஒன்றுபட்டு ஓரணி யில் ஒரே தலைமையில் அணி வகுத்து சாதித்தவை இவைதான். இவ் வுலகிலும் அமைதியற்ற, நிம்மதியற்ற இழிவு வாழ்க்கை; மறுமையிலும் பேரிழப்பு.

## முஸ்லிம்களுக்கு இந்தியாவிலுள்ள நிம்மதி முஸ்லிம் நாடுகளில் இல்லை!

இன்று இந்தியாவில் வாழும் முஸ்லிம்களுக்கு ஹிந்து வெறியர் களால் பலவிதமான இடையூறுகளும் துன்பங்களும் ஏற்பட்டாலும், அதற்கு இன உணர்வு மிக்க முஸ்லிம்களும் ஒரு வகையில் காரண மாக இருக்கிறார்கள். அல்குர்ஆனின் அழகிய உபதேசங்களை ஏற்று அதன்படி இறையுணர்வு மிக்க முஸ்லிம்களாக வாழ்ந்தால், இவர் களின் வாழ்க்கை முறையைப் பார்த்து, ஹிந்து வெறியர்களில் சிலராவது மனம் மாற வாய்ப்பு உண்டு. ஹிந்துப் புரோகிதர்களின் கரங்களில் சிக்கி ஹிந்துக்கள் இன உணர்வுக்கு ஆளாவதுபோல், முஸ்லிம் புரோகிதர்களின் கரங்களில் சிக்கி முஸ்லிம்கள் இன உணர்

வுக்கு ஆளாகி இருப்பதால், அரமும் அரமும் மோதினால் கின்னரம் என்று சொல்வது போல் வன்முறைச் செயல்கள் பெருகி வருகின்றன.

ஆயினும் இந்தியாவில் இருக்கும் முஸ்லிம்கள் சுவாசிக்கும் சுதந்திரக்காற்றை உலகின் எந்த முஸ்லிம் நாட்டிலும் முஸ்லிம்கள் சுவாசிக்க முடியாது. காரணம் அனைத்து முஸ்லிம் நாடுகளும் வஞ்சக புரோகிதர்களின் உடும்புப் பிடியில் வலுவாகச் சிக்கியுள்ளன. எல்லா முஸ்லிம் நாடுகளிலும், சவூதி அரேபியா உட்பட்ட புரோகிதர்களின் ஆதிக்கமே நிறைந்து காணப்படுகிறது. குர்ஆன், ஹதீஸில் உள்ளதை உள்ளபடி அந்த நாடுகளில் எங்குமே பேசவோ, எழுதவோ முடியாது.

**அந்நஜாத் ஒரு முஸ்லிம் நாட்டில் ஆரம்பிக்கப்பட்டிருந்தால்!**

நாம் அந்நஜாத்தை ஏதாவதொரு முஸ்லிம் நாட்டில் ஆரம்பித்திருந்தால், அதன் குரல்வளையை நெறித்துக் கொன்றிருப்பார்கள். எம்மையும் தூக்கு மரத்தில் ஏற்றி இருப்பார்கள்; அல்லது வெஞ்சிறையில் அடைத்து சித்திரவதை செய்வார்கள். இந்தியா மதச் சார்பற்ற நாடு என்பதால், இங்கு ஹிந்து மத வெறியர்களும், முஸ்லிம் புரோகிதர்களின் கரங்களில் சிக்கி இன உணர்வுக்கு ஆளாகியுள்ள முஸ்லிம்களும் நிறைந்திருந்தாலும், குர்ஆன், ஹதீஸை உள்ளது உள்ளபடி சொல்லும் சுதந்திரம் எமக்கிருக்கிறது. அல்லாஹ்வுக்கே எல்லாப் புகழும். அவனே அவனது தூய மார்க்கத்தை நிலைநாட்ட உதவி செய்பவனாக இருக்கிறான்.

எனவே இன உணர்வுமிக்க முஸ்லிம்களை, புரோகிதர்களின் உடும்புப் பிடியிலிருந்து விடுவித்து, அவர்களை அல்லாஹ்வின் 3:103 கட்டளைப்படி அல்குர்ஆனைப் பற்றிப் பிடிக்கச் செய்து, அவர்களை இறை உணர்வு மிக்கவர்களாக ஆக்கினால் மட்டுமே அவர்கள் ஓரணியில் ஒரே தலைமையில் ஒன்றுபட முடியும். இன்றைய முஸ்லிம்கள் அனைவருமே அப்படி ஒன்றுபட வேண்டும் என்ற நிலையும் இல்லை. கணிசமான ஒரு தொகையினர், தகுதியான இறை உணர்வு(தக்வா) மிக்க ஒரு தலைவரைத் தேர்ந்தெடுத்து அவரின் தலைமையில் அணிவகுத்தால் போதும்; அல்லாஹ் 24:55-ல் வாக்களித்துள்ள அனைத்தும் கிடைத்து விடும். 3:139-ல் அல்லாஹ் வாக்களித்துள்ளபடி தைரியம் நிறைந்த, கவலையே இல்லாத உன்னத சமுதாயமாக மாறி விடுவோம். இன்ஷா அல்லாஹ்.

எனவே இன்றைய இன உணர்வு மிக்க முஸ்லிம்களை அதே நிலையில் இறை உணர்வு இல்லாத தலைமையில் ஓரணியில் ஒன்று கூட்டினாலும், முஸ்லிம்களுக்கு விடிவு காலம் ஏற்படப் போவதில்லை. பாகிஸ்தான், பங்களாதேஷ் முஸ்லிம்கள் இன்று அனுபவிப்பதுபோல் பெரும் இன்னல்களையும், துன்பங்களையும் அனுபவிப்பதோடு, அமைதியற்ற, நிம்மதியற்ற ஒரு வாழ்வுதான் அமையும். அல்லாஹ் பாதுகாப்பானாக.

எனவே 1940களில் நிகழ்ந்தது போல், முஸ்லிம்களில் ஒரு சிலரை யாவது வஞ்சக புரோகிதர்களின் உடும்புப் பிடியிலிருந்து விடுவிக் காமல், இறையுணர்வு கொள்ளாமல், அதே இன உணர்வு நிறைந்த நிலையில், முஸ்லிம்கள் அனைவரையும் ஒரே தலைமையில் ஓரணியில் ஒன்று திரட்டினாலும், அது முஸ்லிம் சமுதாயத்திற்கு ஒரு போதும் இவ்வுலகிலும் லாபத்தைத் தராது; மறுமையிலும் லாபத்தைத் தராது; காரணம் இன உணர்வின் அடிப்படையில் செய்யப்படும் எந்த வித முயற்சிக்கும் அல்லாஹ்வின் உதவி நிச்சயமாகக் கிடைக்காது என்பதை குர்ஆனை நேரடியாகப் படித்து உணர்கிறவர்கள் விளங்க முடியும். அதற்கு மாறாக அல்லாஹ்வின் வெறுப்புக்கு ஆளாகி நரகம் புக நேரிடும் என்பதையே அல்குர்ஆனின் பல வசனங்கள் உறுதிப் படுத்துகின்றன. 1940களின் அனுபவமும் இதையே உணர்த்துகிறது. எனவே இத்தகைய சிந்தனை உடையவர்கள் படிப்பினை பெறுவார் களாக. அல்லாஹ் அருள் புரிவானாக.

### தனித்தனி அமைப்புகள் , இயக்கங்கள் ஏன்?

அல்குர்ஆனும், ஆதாரபூர்வமான ஹதீஸ்களும் குன்றிலிட்ட தீபம்போல், இரவும் பகலைப் போல் வெள்ளை வெளேர் என்றிருக்க, புரோகிதர்களும், தலைவர்களும் ஆளுக்கொரு கருத்தைச் சொல்லி, அல்குர்ஆனிலும், ஹதீஸிலும் உள்ளதை உள்ளபடிச் சொல்லாமல், இவர்களின் சுய விளக்கங்களைக் கொடுத்து முஸ்லிம்களை ஒரே நேர்வழியை விட்டு, பல கோணல் வழிகளில், வழிகேட்டில் ஏன் இழுத்துச் செல்கிறார்கள் என்று ஆழ்ந்து சிந்தித்தால், உண்மை புரியும். அவர்களின் நோக்கம் முஸ்லிம்களின் இவ்வுலக, மறு உலக வெற்றியோ-ஈடேற்றமோ, அல்லாஹ்வின் பொருத்தமோ- சுவர்க்கமோ அல்ல; மாறாக ஷைத்தானின் துணையுடன் மக்களை வழிகெடுத்து, கோணல் வழிகளில் இட்டுச் சென்று அதன் மூலம் இவ்வுலகில் பேரும்

புகழுடன், பட்டம் பதவிகளுடன், ஆள் அம்புகளுடன் சொகுசு வாழ்கை வாழ வேண்டும், தொப்பையை நரக நெருப்பால் நிரப்ப வேண்டும் என்பதே அவர்களின் நோக்கம்.

**பெரும்பான்மையினர் ஆதரவை பெற!**

மிகப்பெரும்பான்மையினரை நரகிற்கென்றே படைத்துள்ளதாக அல்லாஹ் அல்குர்ஆனில் பல இடங்களில் கூறியுள்ளான். அந்தப் பெருங் கூட்டங்களைக் கொண்டே உலகில் ஆதாயம் அடைய முடியும். நேர்வழி நடக்கும் மிகச் சொற்பமானவர்களைக் கொண்டு இப்புரோகிதர் களுக்கும், தலைவர்களுக்கும் இவ்வுலக வசதி வாய்ப்புகள், பேரும் புகழும் கிடைக்கும் வாய்ப்பு நிச்சயமாக இல்லை; எனவே இவ்வுலகைக் குறிக்கோளாகக் கொண்ட புரோகிதர்கள், தலைவர்கள் பெரும்பாலான மக்களை திருப்திப்படுத்தி அவர்களைத் தங்கள் பக்கம் ஈர்த்தெடுக்க, வழிகேடுகளையே நேர்வழியாகப் போதிக்கும் கட்டாயத்தில் இருக்கிறார்கள். ஷைத்தானும் அவனது சபதப்படி அவர்களுக்கு உறு துணையாக இருக்கிறான்.

## இலங்கையிலுள்ள ஜமாஅத் அல் முஸ்லிமீன் !

அடுத்து, பாக்கிஸ்தானிலும், இலங்கையிலும் “ஜமாஅத்அல் முஸ்லிமீன்” என்று நபி (ஸல்) காட்டித் தந்த பெயரில் செயல்படும் ஒரு ஜமாஅத் பற்றி ஆராய்ந்தோம். இவர்களிடம் பெயர் நபி (ஸல்) அவர்கள் காட்டித்தந்த பெயராக இருந்தாலும், “உம்மத்தன் வாகிதா”– ஒரே சமு தாயம் என்று நபி(ஸல்) அவர்கள் காட்டித் தந்ததற்கு முரணாக சமு தாயத்தைப் பிளவு படுத்துகிறவர்களாகவே இவர்களும் இருக்கிறார்கள். அவர்களது சட்டத்தில் அந்த ஜமாஅத்தின் அமீரிடம் “பைஅத்” செய்த வர்கள் மட்டுமே முஸ்லிம்கள்; பைஅத் செய்யாதவர்கள் காஃபிர்கள்– நிராகரிப்பவர்கள்; அப்படிப்பட்ட முஸ்லிம்களின் பின்னால் நின்று தொழக் கூடாது என்பது அவர்களின் நிலைபாடாக இருக்கிறது.

இதற்கு அவர்கள் கொடுக்கும் சுய விளக்கம், அன்று நபி(ஸல்) அவர்களை ஏற்று அவர்களிடம் பைஅத் செய்தவர்கள் மட்டுமே முஸ்லிம்களாக ஏற்றுக் கொள்ளப்பட்டனர். அதே போன்று இன்று “ஜமாஅத்அல் முஸ்லிமீன்” அமீரிடம் பைஅத் செய்தவர்கள் மட்டுமே முஸ்லிம்கள். அவரை அமீராக ஏற்காத அனைவரும் காஃபிர்கள் என்று

விநோதமாகக் கூறி வருகின்றனர். அதாவது தற்கால இந்த அமீரை நபிமார்களின் நிலையில், குறிப்பாக இறுதி நபியின் நிலையில் கற்பனை செய்கின்றனர். இதுவும் ஒரு பகிரங்கமான வழிகேடு; இறைவனால் நிராகரிக்கப்படும் ஒரு பிரிவு என்பதே குர்ஆன், ஹதீஸ் விளக்கத்தில் நாம் அறிந்து கொள்வதாகும்.

**நபி போன்றவர் அல்ல கலீஃபா!**

நபி(ஸல்) அவர்களின் மறைவிற்குப் பிறகு முஸ்லிம் சமுதாயத்தின் அமீராகத் தெரிவு செய்யப்பட்ட அபூபக்கர் சித்தீக்(ரழி) அவர்களிடம் நபி (ஸல்) அவர்களின் குடும்பத்தினராகிய ஃபாத்திமா, அலீ, அப்பாஸ்(ரழி–ம்) போன்றவர்கள் பைஅத் செய்து அவர்களை அமீராக ஏற்றுக் கொள்ளவில்லை. இந்த நிலை ஃபாத்திமா(ரழி) அவர்களின் மரணம் வரை நீடித்தது. அமீரும், கலீஃபாவுமாகிய அபூபக்கர் சித்தீக்(ரழி) அவர்கள் தன்னிடம் பைஅத் செய்து அமீராக ஏற்றுக் கொள்ளாதவர்களுக்கு காஃபிர் ஃபத்வா கொடுத்த ஆதாரம் உண்டா? நிச்சயமாக இல்லை.

நபிமார்களை, நபி(ஸல்) அவர்களை அல்லாஹ்வின் தூதராக ஏற்று, அவர்களுக்கு அருளப்பட்ட நெறிநூல் அல்குர்ஆனையும் ஏற்றவர்கள், அவர்கள் உளப்பூர்வமாக ஏற்றாலும், நாவளவில் ஏற்றாலும் அவர்கள் அனைவரும் அன்று நபி (ஸல்) காலத்தில் முஸ்லிம்களாகவே ஏற்றுக் கொள்ளப்பட்டனர் என்பதற்கு எண்ணற்ற ஆதாரங்களைப் பார்க்கலாம். அதற்கு மாறாக இறுதித் தூதரையும், இறுதி வழிகாட்டல் நூல் அல்குர்ஆனையும் ஏற்றவர்கள், அக்கால அமீரை ஏற்காவிட்டால் அவர்கள் முஸ்லிம்கள் இல்லை; காஃபிர்கள் என்பதற்கு குர்ஆன், ஹதீஸில் ஒரேயொரு ஆதாரத்தையும் பார்க்க முடியாது. அப்படி இருந்தால் அபூ பக்கர்(ரழி) அவர்கள் அதைப் பயன்படுத்தி இருப்பார்கள். குறைந்தபட்சம் எச்சரித்திருப்பார்கள். "நபிமார்கள் விட்டுச் செல்லும் சொத்து அவர்களுடைய வாரிசுகளுக்குரியதல்ல; அது அரசுக்குச் சொந்தம்" என்ற நபி(ஸல்) அவர்களின் அறிவுரைப்படி, நபி (ஸல்) அவர்கள் விட்டுச் சென்ற சொத்தை ஃபாத்திமா(ரழி) அவர்கள் வற்புறுத்திக் கேட்டும், அதற்காக அவர்கள் தன்னோடு பெருத்த வருத்தமுடையவர்களாக இருந்தும், அவற்றைப் பொருட்படுத்தாது நபி(ஸல்) அவர்களின் அறிவுரைப்படி நடந்தவர்கள், இந்த காஃபிர் ஃபத்வா விஷயத்தில் நபி(ஸல்) அவர்கள் வழிகாட்டி இருந்தால் அதை நிச்சயம் புறக்கணித்திருக்க மாட்டார்கள். எனவே அல்லாஹ்வையும், அவனது

தூதரையும், அல்குர்ஆனையும் ஏற்று, அன்றைய அமீரை ஏற்காதவர்களுக்கு "காஃபிர்" ஃபத்வா கொடுத்து ஒரே சமுதாயத்தை-உம்மத்தன் வாகிதாவை பிளவுபடுத்துவதற்கு மார்க்கத்தில் அனுமதியே இல்லை. ஆயினும் அவர்கள் நாளை மறுமையில் மிகக் கடுமையான வேதனைக்கு உட்படுவார்கள் என்பதில் ஐயமில்லை.

**பெயர் சரி ! செயல் தவறு !!**

எனவே இவர்கள் நபி(ஸல்) அவர்கள் காட்டித் தந்தபடி, "ஜமாஅத்அல் முஸ்லிமீன்" என்ற பெயரிலேயே இயங்கினாலும், பெரும்பாலான விஷயங்களில் குர்ஆன், ஹதீஸ்படி நடந்தாலும் தங்கள் ஜமாஅத்தின் அமீரை, அமீராக ஏற்றுக் கொள்ளாதவர்களுக்கு காஃபிர் ஃபத்வா கொடுத்து, அவர்கள் பின்னால் நின்று தொழுவதை மறுப்பவர்கள் சமுதாயத்தைப் பிளவுபடுத்தும் குற்றவாளிகளே. சமுதாய பிரிவுகளை மறுக்கும் பல குர்ஆன் வசனங்களை நிராகரிப்பவர்களே! எனவே "ஜமாஅத்அல் முஸ்லிமீன்" என்ற சரியான பெயரை உடைய இவர்களும், தங்களின் செயல்பாட்டின் மூலம் அல்லாஹ் அனுமதிக்காத-வழிகெட்ட பிரிவுப் பெயர்களைச் சார்ந்தவர்களே!.

**மனிதன் அமைத்த இயக்கங்கள் அனைத்தும் வழிகேடே!**

இப்படி இன்று முஸ்லிம் சமுதாயத்தில் இயங்கிக் கொண்டிருக்கும் எல்லா இயக்கங்களையும் தீர அலசி ஆராய்ந்து, நபி(ஸல்) அவர்கள் விட்டுச் சென்ற "ஜமாஅத்அல் முஸ்லிமீன்" என்ற முஸ்லிம் சமுதாயத்திலுள்ள அனைத்துப் பிரிவினரையும் இவ்வுலகில் முஸ்லிம்களாக ஏற்று முஸ்லிம் சமுதாயத்தை அரவணைத்துச் செல்லும் ஒரே இஸ்லாமிய பேரியக்கம் இன்று நடைமுறையில் இல்லை. புரோகிதர்கள் அதை இல்லாமலாக்கிவிட்டார்கள் என்பதை விளங்கிக் கொண்டோம். இது ஒன்றும் ஏற்றுக் கொள்ள முடியாத - சாத்தியமில்லாத கூற்று அல்ல; ஆதம்(அலை) அவர்கள் காலத்திலிருந்து இறுதி நபி(ஸல்) அவர்களின் காலம் வரை அல்குர்ஆன் கூறும் உலக நடப்பை ஆராய்ந்தால், இந்த உண்மை பளிச்சென்று தெரிய வரும். அல்பகரா 2:213 இறைவாக்கை படித்துப் பார்த்தால் ஆரம்பத்தில் ஒரே சமுதாயமாக-உம்மத்தன் வாகிதாவாக இருந்த மக்களைத்தான், புரோகித வர்க்கம் தங்களின் அற்ப இவ்வுலக வாழ்க்கைக்காகப் பல பிரிவுகளாகச் சிதறடித்தார்கள். இப்படி இந்தப் புரோகிதர்கள் சமுதாயத்தைச்

சிதறடித்ததனால், அல்லாஹ் காலத்திற்குக் காலம் நபிமார்களை அனுப்பி, அவர்களுக்கு நெறி காட்டும் நூல்களையும் கொடுத்து, பிரிவுக்குக் காரணமான கருத்து வேறுபாடுகளைக் களைந்து சமுதா யத்தை ஒன்று படுத்தும் முயற்சிகளை செய்ய வைத்தான். சிதறிய மக்கள் கூட்டத்தில் ஒரு சிறு தொகையினரே ஒவ்வொரு நபியின் அறிவுரையைக் கேட்டு அந்த நபியின் தலைமையில் ஓரணியில் ஒன்றுபட்டனர்.

### நேர்வழிவிட்டு, கோணல் வழிகளில் செல்பவர்கள்!

அந்த நபிக்குப் பின்னால் இந்தப் புரோகிதர்கள் ஷைத்தானின் துணையுடன் ஒன்றுபட்ட அந்த சமுதாயத்தினுள்ளும் திருட்டுத் தனமாகப் புகுந்து கொண்டு அதைச் சிதறடித்தனர். அல்குர்ஆனில் 25 நபிமார்களின் சரித்திரத்தை அல்லாஹ் விவரிக்கிறான். அவற்றைக் கவனமாகப் படித்துப் பாருங்கள். சிதறடிக்கப்பட்டு பல பிரிவினர்களாகி அல்லாஹ்வின் அசலான போதனைகளை மறந்து, படைத்த எஜமா னனான ஒரே இறைவனுக்கே இணை வைக்கும் மாபாதகச் செயல் களில் மனித சமுதாயம் மூழ்கி இருந்ததை – இருப்பதை உணர்ந்து கொள்ள முடியும். இதை அல்குர்ஆன் அன்னிஸா 4:163-169 இறைவாக்குகள் உறுதிப்படுத்துகின்றன. மனித சமுதாயம் இறை வனுக்கு இணை வைக்கும் கொடிய ஷிர்க்கில் மூழ்கி அல்லாஹ்வை மட்டும் வழிபடுவதை கைவிட்டுவிட்டார்கள். நேர்வழி நடைமுறைப் படுத்தப்படவில்லை. அல்லாஹ் நபிமார்களை மீண்டும், மீண்டும் அனுப்பி தன்னை மட்டும் வழிபடும் தூய நேர்வழியை நிலைநாட்ட வேண்டியதாயிற்று. இந்த நிலையில் இறுதித் தூதர் முஹம்மது(ஸல்) அவர்கள் ஏற்படுத்தி நடைமுறைப் படுத்திய அனைத்துப் பிரிவு முஸ்லிம்களையும் ஒன்றிணைத்து "ஜமாஅத் அல் முஸ்லிமீன்" என்ற பெயரில் மட்டும் செயல்படுவது நடைமுறைப்படுத்தப்படாமல் போனது ஆச்சரியமான ஒரு விஷயம் அல்ல. அதே சமயம் அல்குர்ஆனைப் பற்றிப் பிடித்து மீண்டும் "ஜமாஅத்அல் முஸ்லிமீன்" என்ற உலகளாவிய பேரியக்கமான ஒருங்கி ணைந்த ஜமாஅத்தை உயிர்ப்பிக்க முயற்சி செய்வது மார்க்கம் தடுக்கும் ஒன்றல்ல.

### நபியின் நடைமுறைகள் வழக்கொழிந்தன!

நபி(ஸல்) அவர்கள் சுமார் 11 வருடங்கள் தினசரி ஐந்து வேளை

தொழுது காட்டியதோடு, “ஸல்லூ கமா ரஅய்த்துமூனி உஸல்லீ” – “என்னை எவ்வாறு தொழக் கண்டீர்களோ அவ்வாறே தொழுங்கள்” என்று தெளிவாக கட்டளையிட்டிருந்தும், முஸ்லிம்கள் நபி வழி தொழுகை முறையைக் கைவிட்டு, விட்டு ஹனஃபி தொழுகை, மாலிக்கி தொழுகை, ஷாஃபியி தொழுகை, ஹன்பலி தொழுகை, என இவர் களாகக் கற்பனை செய்து தொழுவதின் மூலம் நபிவழித் தொழுகையை புறக்கணித்திருந்தார்கள். ஆனால் கடந்த சுமார் கால்நூற் றாண்டுகளாகப் பாடுபட்டு மீண்டும் நபி வழித் தொழுகை உயிர்ப் பிக்கப்பட்டு இன்று நடைமுறைப்படுத்தப் படுகிறதா? இல்லையா?

குர்ஆன் ஹதீஸ்படி நடக்கிறோம் என்று கூறிக் கொண்டு இப்போது புதிதாக **ஸலஃபி** தொழுகை, **ஜாக்** தொழுகை, **ததஜ** தொழுகை என புதிதாக முளைத்திருப்பது தனி விஷயம். இவையே பின்னால் மத்ஹபு களாக ஆகும்.

இதேபோல் முஸ்லிம்களால் கைவிடப்பட்டுப் போன “ஜமாஅத்அல் முஸ்லிமீன்” என்ற பெயரில் முஸ்லிம்கள் அனைவரையும் ஒருங்கி ணைத்து அரவணைத்துச் செல்லும் ஜமாஅத்தும் மீண்டும் குர்ஆன், ஹதீஸை பற்றிப் பிடிப்பதன் மூலம் நடைமுறைக்குக் கொண்டு வருவது சாத்தியமானதேயாகும். அல்லாஹ் நாடினால்.

**இப்படி ஒரு சந்தேகம்!**

இதில் சிலருக்கு இப்படியொரு சந்தேகம் இருக்கிறது. ஹுதைஃபத்துல் யமான்(ரழி) நபி(ஸல்) அவர்களிடம் “ஜமாஅத்அல் முஸ்லிமீன்” என்ற ஜமாஅத்தோ, அதன் தலைவரோ இல்லை என்றால் என்ன செய்வது என்று கேட்டதற்கு “எல்லாப் பிரிவுகளையும் விட்டு (தூர) ஒதுங்கி வாழ்வீராக; அப்படியே உமது மரணம் வரை மரவேர்களைச் சாப்பிட்டுக் காலத்தைப் போக்கும் நிலை ஏற்பட்டாலும் சரியே!” என்றுதான் கட்டளையிட்டிருக்கிறார்கள்!. இதில் அந்த ஜமாஅத் இல்லை என்றால் காட்டுக்குப் போய் மரவேர்களைச் சாப்பிட்டு மரணம் வரை காலம் கழிக்கச் சொல்லப்பட்டிருக்கிறதே அல்லாமல் “ஜமாஅத்அல் முஸ்லிமீனை” உயிர்ப்பிக்க எங்கே சொல்லப்பட்டிருக்கிறது? என்ற ஐயத்தைக் கிளப்புகின்றனர். இதுவும் தவ்ஹீத் மவ்லவி(?)யின் சூழ்ச்சியே!

ஹதீஸின் இந்தப் பகுதியில், எப்படிப்பட்ட இக்கட்டான நிலை ஏற்பட்டாலும், நிர்ப்பந்தமாக ஊர் ஒதுக்கப்பட்டு மரவேர்களைச் சாப்பிட்டு காலந்தள்ள வேண்டிய நிலை ஏற்பட்டாலும், மனிதக் கற்பனையில் உருவான எந்தப் பிரிவுப் பெயரிலும் இருக்கக் கூடாது; புதிதாக எந்த இயக்கத்தையும் கற்பனை செய்யக் கூடாது என்று நபி(ஸல்) அவர்கள் மிகக் கடுமையாகக் கட்டளையிட்டிருக்கிறார்களே அல்லாமல், காட்டுக்குப் போய் ஏகாங்கியாக வாழ கட்டளையிடவில்லை. மேலும் நபி(ஸல்) அவர்கள் நடைமுறைப்படுத்திவிட்டுச் சென்ற அந்த ஜமாஅத் இன்று நடை முறையில் இல்லை என்றாலும், அதை மீண்டும் உயிர்ப்பித்து நடைமுறைக்குக் கொண்டு வருவதற்கு எடுக்கும் முயற்சிக்கு தடை எங்கே இருக்கிறது? தடை ஏதும் இல்லை! மாறாக 3:103 போன்ற குர்ஆன் வசனங்கள் அந்த முயற்சியை வரவேற்கின்றன.

அப்படியானால் அல்லாஹ்வுக்கு மட்டும் வழிபடும் நிலை இன்று இல்லை என்பதால் மீண்டும் அல்லாஹ்வை மட்டும் வழிபடும் நிலை உருவாவதற்குப் பாடுபடக்கூடாது என்பார்களா? நபிவழித் தொழுகை இன்று நடைமுறையில் இல்லை என்பதால் மீண்டும் நபிவழித் தொழுகையை உயிர்ப்பித்து நடைமுறைப்படுத்தக் கூடாது என்பார்களா? இல்லையே.

## நபி விட்டுச் சென்ற பேரியக்கத்தை உயிர்ப்பிக்க முயலுவது தவறல்ல!

அதேபோல் நபி(ஸல்) அவர்கள் நடை முறைப்படுத்தி விட்டுச் சென்ற "ஜமாஅத்அல் முஸ்லிமீன்" என்ற சமூக அமைப்பு–பேரியக்கம் இன்று நடைமுறையில் இல்லை என்றாலும், மீண்டும் அதை உயிர்ப்பித்து நடைமுறைக்குக் கொண்டு வருவது குர்ஆன், ஹதீஸுக்கு முரணானதுமல்ல; அப்படி ஒரு ஜமாஅத் இல்லை என்றால் எல்லாப் பிரிவுகளையும் விட்டு ஒதுங்கி வாழ்வீராக; அப்படியே உமது மரணம் வரை மரவேர்களைச் சாப்பிட்டுக் காலத்தைக் கழிக்கும் நிலை ஏற்பட்டாலும் சரியே! என்ற நபி(ஸல்) அவர்களின் கட்டளைக்கு முரணானதும் அல்ல.

## நபி(ஸல்) அவர்களே முன்மாதிரி!

நபி(ஸல்) அவர்களின் வாழ்க்கையிலும் இதற்கு அழகிய முன்மாதிரி இருக்கிறது. குறைஷ்களின் வழிகெட்ட போதனைகளை நபி(ஸல்)

ஏற்காததால், நபி(ஸல்) அவர்களின் குடும்பத்தாரை குறைஷ்கள் 3 வருடங்கள் ஊர் ஒதுக்கி வைத்தார்கள்; இலைகளையும், தோல்களை யும் சாப்பிட்டுக் காலம் கழிக்க வேண்டியதாயிற்று. அதற்காக குறைஷ் களின் வழிகெட்ட நிபந்தனைகளை நபி(ஸல்) ஏற்கவில்லை. கொண்ட கொள்கையில் உறுதியாக இருந்தார்கள். அதேபோல் இன்று பல ஊர்களில் நான்கு மத்ஹபுகளுக்குக் கட்டுப்பட்டு நடப்பவர்களுக்கு மட்டுமே பள்ளியில் தொழ அனுமதியுண்டு; நல்லது கெட்டதுகளில் ஊர் ஜமாஅத்தார் கலந்து கொள்வார்கள்; மைய வாடியில் ஜனாசாவை அடக்கம் செய்ய அனுமதிக்கப்படும் என்றெல்லாம் ஊர்க்கட்டுப்பாடுகள் விதிக்கின்றனர். அதற்காக சத்தியத்தை-நேர்வழி விட்டு கோணல் வழிகளில் செல்ல முடியுமா? இதேபோல் வழிகெட்டப் பிரிவுப் பெயர்களில் செயல்படுகிறவர்கள், தங்களின் ஆள்பலம், அதிகாரபலம் கொண்டு, அவர்களின் வழிகெட்டப் பிரிவு அமைப்புகளை-இயக்கங் களை ஏற்று அதன்படிதான் நடக்க வேண்டும் என்று நிர்ப்பந்தித்தாலும், அந்த நிர்ப்பந்தம் காரணமாக உங்களின் அத்தியாவசிய உணவுத் தேவைகள் தடுக்கப்பட்டாலும், அவர்களின் பிரிவு வழிகெட்ட இயக்கங் களை ஏற்காதீர்கள்; மரணம் வரை மரவேர்களைச் சாப்பிட்டு காலந் தள்ள வேண்டி ஏற்பட்டாலும் சரியே! என்று தான் உத்திரவிட்டுள் ளார்கள்.

### எந்த நிலையிலும் சமுதாயத்தை பிளவுபடுத்த அனுமதி இல்லை!

இதிலிருந்து என்ன தெரிகிறது என்றால், அல்லாஹ்வின் 21:92, 23:52 கட்டளைப்படி ஒன்றுபட்ட ஒரே சமுதாயத்தை எப்படிப் பட்ட இக்கட்டான நிலையிலும், உயிரே போனாலும் பிளவு படுத்தக் கூடாது என்ற உண்மைதான் வலியுறுத்தப்படுகிறது. அதனால்தான் நடை முறையில் இல்லாதிருந்த இஸ்லாத்தை மீண்டு நிலை நிறுத்தும் அந்த ஆரம்பக் கட்டத்தில், முனாஃபிக்கள்-நயவஞ்சகர்கள் விளைவித்த சகிக்க முடியாத வன்கொடுமைகளை எல்லாம் நபி(ஸல்) சகித்துக் கொண்டார்கள்; ஈமானற்ற அவர்களின் நிலைகளை குறிப்பாக அவர்களின் இறுதி முடிவு நரகம்தான் என்று அல்லாஹ் தெள்ளத் தெளிவாக அல்குர்ஆன் வசனங்கள் மூலம் அறிவித்திருந்தும், நயவஞ்சக முஸ்லிம்களை குஃப்ர் ஃபத்வா மூலம் சமுதாயத்திலிருந்து வெளியேற்றவில்லை; சமுதா யத்தை அதன் மூலம் பிளவு படுத்தவுமில்லை. அவர்களும் தங்களை “முஸ்லிம்கள்” என்று

சொல்லிக் கொள்வதால் நாமும் “முஸ்லிம்கள்” என்று எப்படி சொல்லிக்கொள்வது? அவர்களிலிருந்து வேறுபடுத்திக் காட்ட வேறொரு பெயரைச் சூட்டிக் கொள்வோம் என்ற தப்பான முடிவுக்கு வரவுமில்லை. இதைவிட ஓர் அழகான முன்மாதிரி முஸ்லிம் களுக்கு வேண்டுமா?

எனவே “ஜமாஅத்அல் முஸ்லிமீன்” அல்லாத அனைத்துப் பிரிவு களை விட்டும் ஒதுங்கி வாழ்வீராக; அப்படியே உமது மரணம் வரை மர வேர்களைச் சாப்பிட்டுக் காலத்தைப் போக்கும் நிலை ஏற்பட்டாலும் சரியே! என்ற பகுதி மனிதர்களால் உருவாக்கப்பட்டுள்ள எந்தப் பிரிவிலும் கண்டிப்பாக இருக்கக் கூடாது என்று மிகக் கடுமையாக கண்டிக்கிறதே அல்லாமல், நடைமுறையில் இல்லாமல் மரணித்து விட்ட “ஜமா அத்அல் முஸ்லிமீன்” என்ற ஒன்றுபட்ட முஸ்லிம் சமுதாயத்தை மீண்டும் உயிர்ப்பித்து நடை முறைப்படுத்த முயற்சி செய்வதற்கு எவ்விதத் தடையும் விதிக்கவில்லை. மாறாக இதுவே அல்லாஹ்வின் கட்டளைப்படி நபிமார்கள் அனைவரும் செய்த பணியாகும். அல்லாஹ் வின் பொருத்தத்தைப் பெற்றுத்தரும் பணியாகும்.

**உயிர்ப்பிப்பதற்கும், உருவாக்குவதற்கும் உள்ள வேறுபாடு!**

இந்த இடத்தில் நபி(ஸல்) அவர்கள் விட்டுச் சென்ற “ஜமாஅத்அல் முஸ்லிமீன்” ஐ உயிர்ப்பித்து நடைமுறைப்படுத்துவதற்கும், மௌதூதி கூறுவதுபோல் நாமாக புதிதாக ஒரு ஜமாஅத்தை அமைப்பதற்கும் பெரும் வேறுபாடு இருக்கிறது. முன்னையதற்கு மார்க்கத்தில் அனு மதியுண்டு. பின்னையதற்கு அனுமதி இல்லை; கண்டிப்பாகத் தடுக்கப்பட்டுள்ளது. காரணம் அது பல பிரிவுகளில் சிக்கித் தவிக்கும் முஸ்லிம் சமுதாயத்தை மேலும் பிளவு படுத்தும் செயலாகும். நபி(ஸல்) அவர்கள் நடைமுறைப்படுத்தி விட்டுச் சென்ற “ஜமாஅத்அல் முஸ்லி மீன்” இயக்கத்தை உயிர்ப்பித்து நடைமுறைக்குக் கொண்டு வருவ தென்றால், அதாவது முஸ்லிம்கள் அனைவரையும் அந்த பேரியக்கத் தில் கொண்டு சேர்க்கப் பாடுபடுவது என்றால், முஸ்லிம்களில் யாரும் அதற்குத் தனி உரிமை கொண்டாட முடியாது. அதற்கென தனி சட்டதிட்டம் அல்லது நிர்ணய சட்டம் என மனிதக் கருத்துக்களை அதில் புகுத்த முடியாது. உறுப்பினர் அட்டை, சந்தா என வரைசெய்து நடைமுறைப் படுத்த முடியாது. இப்படிப்பட்ட நிபந்தனைகளுக்குக்

கட்டுப்பட்டு நடப்பவர்கள் மட்டுமே அதில் உறுப்பினர்களாக இருக்க முடியும் என விதி முறை ஏற்படுத்த முடியாது. யாரும் தான்தான் அதன் ஆயுள்கால அமீர்; தன் தலைமையின் கீழ்தான் அனைவரும் வந்து ஒன்றிணைய வேண்டும் என உரிமை பாராட்ட முடியாது.

தங்களை முஸ்லிம்கள் என்று சொல்கிறவர்கள் மனப்பூர்வமாக ஒப்புக் கொண்டு சொன்னாலும், நயவஞ்சகமாக நுனி நாவால் சொன்னாலும் அல்லது முஸ்லிம் என்று சொல்லிக் கொண்டு திமிராக ஷிர்க், பித்அத்களில் பகிரங்கமாக ஈடுபட்டாலும் அவர்கள் அனைவரையும் முஸ்லிம்களாக ஒப்புக் கொள்ள வேண்டும். தன்னை முஸ்லிம் என்று வாயினால் கூறும் ஒருவரை எந்தக் காரணத்தைச் சொல்லியும் முஸ்லிம் இல்லை என்று கூற அனுமதி இல்லை. அவர்கள் அறியாமலோ அறிந்தும் மன முரணாகவோ ஷிர்க், பித்அத்களில் ஈடுபடுவதை தங்கள் புறக்கண்ணால் கண்டாலும் சரியே. இதுவே குர்ஆன், ஹதீஸ் கூறும் உண்மை. (பார்க்க 3:128, 70:51,52, 39:3, 42:21)

## நபி காலத்து நயவஞ்சக முஸ்லிம்கள் இன்றைய தர்கா முஸ்லிம்களை விட கேடுகெட்டவர்கள் !

நபி(ஸல்) அவர்களது காலத்தில் முஸ்லிம்களாக நபி(ஸல்) அவர்களாலேயே ஏற்றுக் கொள்ளப்பட்ட நயவஞ்சகர்கள் இன்றைய நமது காலத்து தர்கா வழிபாடு செய்யும் முஸ்லிம்களை விட கேடு கெட்டவர்களாக இருந்தார்கள். குறைஷ் ஷைத்தான்களுடன் சேர்ந்து கொண்டு லாத், மனாத், உஜ்ஜா, ஹுபுல் சிலைகளையே வழிபாடு செய்கிறவர்களாக இருந்தார்கள். இதை நபி(ஸல்) அவர்களும், நபி தோழர்களும் தங்கள் கண்களாலேயே கண்டு வெறுப்புற்றனர். அல் குர்ஆனும் அவர்களது வழிகெட்ட ஷிர்க், பித்அத் செயல்பாடுகளைப் படம் பிடித்துக் காட்டிக் கொண்டிருக்கிறது. (பார்க்க 2:8-20, 4:61, 88, 138, 140, 142, 145, 8:49, 9:64, 67, 68, 73, 101, 29:11, 33:1, 12, 24, 48, 60, 73, 48:6, 57:13, 63:1, 7, 8, 66:9)

நயவஞ்சகர்களிலேயே மகாமகா கெட்டவன் அப்துல்லாஹ் இப்னு உபை இப்னு ஸலூல். சத்திய இஸ்லாத்தை நிலைநாட்டுவதற்கு முட்டுக்கட்டையாக அவன் இழைத்த கொடுமைகள் எண்ணற்றவை. பல தற்காப்புப் போர்களில் குறைஷ்களுடனும், யூதர்களுடனும் அவன் செய்த சதிச் செயல்கள், முஹாஜிர்களுக்கும் அன்சார்களுக்கும்

இடையில் அவன் சிண்டு மூட்டிவிட்டு ஏற்படுத்திய கலவரங்கள், ஆயிஷா(ரழி) அவர்கள் மீது இட்டுக்கட்டிய அவதூறு, இப்படி அவன் செய்த இடையூறுகள் ஏட்டிலடங்கா. அவன் தன்னை முஸ்லிம் என்று நாவினால் நயவஞ்சகமாக கூறி இருக்காவிட்டால், அவன் எப்போதோ கொல்லப்பட வேண்டிய பெரும் குற்றவாளி. இரண்டு சந்தர்ப்பங்களில் உமர்(ரழி) அவன் தலையைச் சீவிட அனுமதி கேட்டார்கள். அவன் பெற்றெடுத்த பிள்ளை அப்துல்லாஹ்(ரழி) அவர்களே தனது தந்தை யின் தலையைச் சீவிக் கொல்ல அனுமதி கேட்டார்கள். அப்போது அந்த மூன்று சந்தர்ப்பங்களிலும் நபி(ஸல்) அவர்கள் அவ்விருவரையும் தடை செய்து கூறிய காரணம் என்ன தெரியுமா? முஹம்மது தனது தோழர்களையே கொன்றுவிட்டார் என்ற அவப்பெயர் ஏற்பட்டு விடும் என்பதே ஆகும்.

### நபிமார்களுக்கே இல்லாத அதிகாரம் !

வெறும் நாவினால் தன்னை முஸ்லிம் என்று சொல்லிக் கொண்டு, தன் வாழ்நாள் முழுவதும் இஸ்லாத்தையும், முஹம்மது(ஸல்) அவர் களையும் அழித்தொழிக்க பாடுபட்டுக் கொண்டிருந்த, குறைஷ் ஷைத்தான்களோடு இணை ந்து சிலைகளை வழிபட்டுக் கொண்டிருந்த அந்தக் கொடியவனை, அவனது இறுதி முடிவு நரகம்தான் என்று அல்லாஹ்வால் தெள்ளத் தெளிவாக அறிவிக்கப்பட்ட நிலையிலும், நபி (ஸல்) அவர்கள் அவனை தன்னுடைய தோழர்களில் உள்ளவன் என்று சொல்லி இருந்தால் அதன் பொருள் என்ன? தன்னை முஸ்லிம் என்று சொல்லும் ஒருவனை அவன் நயவஞ்சகமாக நுனிநாவால் சொல்லிக் கொண்டு, அவன் ஷிர்க், பித்அத்கள், இஸ்லாத்திற்கு விரோ தமாக சதிச்செயல்கள் என அனைத்தையும் ஒருங்கே செய்தாலும், அவனை முஸ்லிம் இல்லை; காஃபிர்; முஸ்லிம் சமுதாயத்திலிருந்து வெளியேற்றும், அல்லது தன்னை அவனிலிருந்து வேறு படுத்திக்காட்ட “முஸ்லிம்” அல்லாத ஒரு பெயரைத் தனக்குச் சூட்டிக் கொள்ளும் அதிகாரம் நபிமார்களுக்கே, குறிப்பாக இறுதி நபி முஹம்மது(ஸல்) அவர்களுக்கே இல்லை; அந்த அதிகாரத்தைத் தனது படைப்புகளில் யாருக்குமே அல்லாஹ் கொடுக்கவில்லை என்பது நெற்றில் பொட்டில் அடிப்பதுபோல் விளங்க வில்லையா?

### இன்றைய முஸ்லிம்களில் காட்ட முடியுமா?

இன்று அந்த அப்துல்லாஹ் இப்னு உபை இப்னு ஸலூல் போன்ற

ஒரு கேடுகெட்ட முஸ்லிமை முஸ்லிம் சமுதாயத்தில் காட்டமுடியுமா? அவன் சமாதிகளுக்கே சுஜூது செய்யட்டும்; அல்லது சபரி மலைக்கே சென்று வழிபட்டு வரட்டும். இவர்களை எல்லாம் விட கேடுகெட்ட அத்தனைக் கொடிய உபை இப்னு ஸலூலையே நபி(ஸல்) அவர்கள் முஸ்லிம் இல்லை என்று சொல்லத் துணியவில்லையே! இந்த நிலையில் இன்றைய முஸ்லிம்கள் மனப் பூர்வமாக அல்லாஹ்வை யும், அவனது இறுதித் தூதரையும், இறுதி வழிகாட்டி நூல் அல்குர் ஆனையும் (நுனி நாவால் அல்ல) மனப்பூர்வமா ஒப்புக் கொண்ட நிலையில், இவர்களது பங்காளிகளான தர்கா புரோகிதர்கள் தவறாக வழிகாட்டுவதை நம்பி ஷிர்க், பித்அத்களில் மூழ்கி இருப்பதைக் காரணம் காட்டி, அவர்கள் காஃபிர்கள், முஷ்ரிக்கள், அவர்கள் பின்னால் நின்று தொழக்கூடாது என்று ஃபத்வா-தீர்ப்பு கொடுக்க அதிகாரம் தங்களுக்கு இருக்கிறது என்று வாதிட்டால், அதன் பொருள் என்ன? இறுதி நபிக்கே இல்லாத தனி அதிகாரம் தங்களுக்கு இருக்கிறது என்று இவர்கள் வாதிடுவதாகத்தானே பொருள்! அல்குர் ஆன் அஷ்ஷூரா 42:21 கூறுவது போல் அல்லாஹ்வுக்கு இணையான அதிகாரம் தங்களுக்கும் உண்டு என்று இவர்கள் ஆணவத்திமிருடன் மார்தட்டுவதாகத் தானே அர்த்தம்.

**யாரோடு எழுப்பப்படுவர்?**

அப்படியானால் இப்படிப்பட்ட வாதங்களை வைக்கும் புரோகிதர்கள் நாளை மறுமையில் அல்லாஹ்வின் விரோதிகளான நம்ரூது, ஃபிர்அவ்ன், ஹாமான், காரூன், அபூ ஜஹ்ல் போன்றோருடன் எழுப்பப்படுவார்களா? மக்களிடம் கூலி கேட்காமல் அல்லாஹ்விடம் மட்டுமே கூலியை எதிர்பார்த்து மார்க்கப் பணிபுரியும் நபிமார்களின் வாரிசுகளான உண்மை உலமாக்கள் என்ற அறிஞர்களுடன் எழுப்பப் படுவார்களா? அல்லாஹ்வையும், மறுமை யையும் உறுதியாக நம்பி அல்லாஹ்வை அதிகமாக நினைப்போர் நேர்வழி எது என்பதை நிச்சயமாக அறிந்து கொள்ள முடியும். அப்படிப்பட்டவர்கள் எந்த நிலையிலும் எந்தக் காரணத்தைச் சொல்லியும் முஸ்லிம் சமுதாயத் தைப் பிளவுபடுத்தத் துணிய மாட்டார்கள். அவர்கள் தான் அல்லாஹ் ஹூது 11:119-ல் கூறுவது போல் அல்லாஹ் அருள் புரிந்தவர்களில் உள்ளவர்களாக ஆக முடியும்.

இதை மிகமிகத் தெளிவாக நபி(ஸல்) விளக்கி இருக்கிறார்கள்.

**யார் நமது தொழுகையைத் தொழுகிறாரோ, நமது கிப்லாவை முன்னோக்குகிறாரோ, நாம் அறுத்ததைச் சாப்பிடுகிறாரோ அவர் முஸ்லிம்; அவர் அல்லாஹ்வினதும், அல்லாஹ்வின் தூதரினதும் பாதுகாப்பில் உள்ளார். எனவே இந்தப் பாதுகாப்பில் இருப்பவருக்கு நம்பிக்கைத் துரோகம் செய்வது கொண்டு அல்லாஹ்வுக்கு நம்பிக்கைத் துரோகம் செய்யாதீர்கள்.**

(அனஸ்(ரழி) புகாரீ, அபூதாவூத், திர்மிதி, இப்னு மாஜ்ஜா, தாரமி, அஹ்மத்)

இன்னொரு அறிவிப்பு இவ்வாறு நிறைவு செய்யப்பட்டுள்ளது:

**அப்படியானால் அவர் ஒரு முஸ்லிம், மற்ற முஸ்லிம்களுக்கிருக்கும் அனைத்து உரிமைகளும், கடமைகளும் அவருக்கும் உண்டு.**

(பார்க்க புகாரீ (ர.அ) பாகம் 1, ஹதீஸ் 391, 392, 393)

**இதைவிட ஆதாரம் வேண்டுமா?**

இங்கு நமது தொழுகை என்று நபி(ஸல்) குறிப்பிட்டுக் கூறுவதால் நபி(ஸல்) அவர்கள் தொழுததைப் பின்பற்றி அப்படியே தொழுகிறவர்களை மட்டுமே இது குறிக்கும். மத்ஹபுகாரர்கள், தர்காக்காரர்கள் அப்படித் தொழுவதில்லை என வாதிடுகின்றனர் புதிய பிரிவினைவாதிகள். நபி (ஸல்) அவர்கள் தொழுதது போல் அப்படியே தொழுவதாக இருந்தால், கண்டிப்பாக அவர்கள் கிப்லாவை முன்னோக்கித்தான் தொழுவார்கள். எனவே நபி(ஸல்) அதைக் குறிப்பிட்டுக் கூறி இருக்க மாட்டார்கள். அவர் கிப்லாவை முன்னோக்கினால் போதும் என்ற கருத்தில்தான் சொல்லி இருக்க முடியும். அடுத்து நாம் அறுத்ததைச் சாப்பிடுகிறவர்கள் என்று கூறி இருப்பது நமது கூற்றை மேலும் உறுதிப்படுத்துகிறது.

இன்றைய முஸ்லிம்கள் தர்காவாதிகள் கபுரில் சுஜூது செய்பவர்களாகவே இருக்கட்டும், அல்லாஹ்வின் பெயர் சொல்லாமல் மாற்று மதத்தார் அறுத்ததை சாப்பிடவே மாட்டார்கள். யாரை முஸ்லிம்கள் இல்லை; காஃபிர்கள் என்று இந்த பிரிவினைவாதிகள் கூறுகிறார்களோ அவர்களே, இத்தரத்தவர்கள் அறுத்ததைத்தான் வாங்கிச் சாப்பிடுகிறார்கள். அது மட்டுமல்ல; இவர்களின் அரசியல் மாநாடு, ஆர்ப்பாட்டம், ஊர்வலம் என்றால் இவர்களால் காஃபிராகக் கணிக்கப்பட்டவர்களும் முஸ்லிம்களாகி விடும் அதிசயத்தையும் பார்க்கலாம். பள்ளியில் காஃபிர்கள், அரசியலில் முஸ்லிம்கள் என்ற இவர்களின் இரட்டை வேடமே இவர்களை அடையாளம் காட்டப் போதுமானது. அற்ப உலக

ஆதாயத்தைக் குறிக்கோளாகக் கொண்டு அல்லாஹ் ஒரே சமுதாயம் என்று கூறுவதை இவர்கள் கூறுபோடுகிறார்கள் என்ற உண்மை அம்பலமாகிறது.

**சின்னத்திரை நடிகர்!**

இப்போது சின்னத்திரையில், அவர்களின் சமாதி வழிபாட்டை நமது கண்களால் பார்க்கும் நிலையில் அவர்களை முஸ்லிம்களாக எப்படி ஏற்க முடியும்? புகாரி முதல் பாகம் 391, 392, 393 கூறும் ஹதீஸ்கள் அவர்களுக்குப் பொருந்தாது எனக் கூறினாராம். சின்னத் திரை நடிகர் அரசியலில் முஸ்லிம் களாக ஏற்றுக் கொள்ளும் அவர்களை பள்ளியில் முஸ்லிம்களாக ஏற்க முடியாதாம். இதைவிட பெரியதொரு கோமாளித்தனம் வேறொன்று இருக்க முடியுமா? மற்ற முஸ்லிம் களுக்கு இருக்கும் அனைத்து உரிமைகளும் அவர்களுக்கும் உண்டு என்று நபி(ஸல்) அப்பட்டமாக அறிவித்திருக்க அதை மறுக்கும் இவர்களின் நிலை என்ன? நபி(ஸல்) அவர்கள் நாளை மறுமையில் முறையிடுவது போல் 25:30 கூறுவது போல் அல்குர்ஆனை புறக்கணிக்கும் நிலையிலேயே இந்தப் பிரிவினைவாதிகள் இருக்கிறார் கள். அதனால்தான் தாங்கள் மட்டும்தான் நேர்வழியில் இருக்கிறோம்; எஞ்சியுள்ள அனைவரும் வழிகேட்டில் இருக்கிறார்கள் என்று அல்லாஹ்வை மறந்து ஆணவத்துடன் பிதற்று கிறார்கள். அதாவது தாங்கள் வழிகேட்டில்தான் இருக்கிறோம் என்று அவர்களே சுயமாக ஒப்புக் கொள்கிறார்கள். ஏன் என்றால் உண்மை யிலேயே நேர்வழியில் இருப்பவர்கள் ஒருபோதும் தாங்கள் தான் நேர்வழியில் இருக்கிறோம் என்று பிதற்றமாட்டார்கள். அது அல்குர் ஆன் அந்நஜ்ம் 53:32 இறைக்கட்டளையைப் புறக்கணிக்கும்-இறை வனுக்குக் கோபத்தை உண்டாக்கும் செயல் என்பதை தெளிவாக அறிந்து வைத்திருப்பார்கள்.

அன்றைய நயவஞ்சகர்கள் தங்களை முஸ்லிம்கள் என்று சொல்லிக்கொண்டு, ஷைத்தான்களாகிய குறைஷ்களுடன் சேர்ந்து லாத், மனாத், உஜ்ஜா, ஹுப்லு போன்ற சிலைகளை வணங்குவதைக் நபி(ஸல்) கண்ணால் கண்டார்கள். அல்லாஹ்வும் பகரா 2:8-20 வசனங்களில் அதை உறுதிப்படுத்துகிறான். நபி தோழர்களும் முனாஃபிக்கள் சிலை வணங்குவதையும், இஸ்லாத்திற்கு விரோதமான அவர்களின் செயல்பாடுகளையும் கண்ணால் கண்டார்கள். ஆயினும் அந்த நயவஞ்சகர்களுக்கு முஷ்ரிக், காஃபிர் என்று குஃப்ர் ஃபத்வா

கொடுக்கவில்லை. ஆனால், இவர்களோ அல்லாஹ்வுக்கும், அவனது தூதருக்கும் மார்க்கத்தைக் கற்றுக் கொடுக்க முற்படுகிறார்கள். (42:21, 49:16) சமுதாயத்தைப் பிளவுபடுத்தும் இந்தப் பிரிவினைவாதிகள் தங்களின் உண்மை நிலையை நாளை பார்க்கத்தான் போகிறார்கள்.

**அல்குர்ஆனை புறக்கணிக்கும் தவ்ஹீத்வாதிகள்(?) !**

அவர்கள் கீழ்க்கண்ட இறைக் கட்டளைகளை சிறிதும் மதிக்காமல் உதாசீனம் செய்கிறார்கள் என்பதை அவர்களால் மறுக்க முடியுமா?

**உன் முகத்தை மனிதர்களை விட்டும் திருப்பிக் கொள்ளாதே! பூமியில் பெருமையாகவும் நடக்காதே! அகப் பெருமைக்காரர், ஆணவங்கொண்டோர் எவரையும் நிச்சயமாக அல்லாஹ் நேசிக்க மாட்டான்.** (லுக்மான் 31:18)

**........... எவர்களை உங்களுடைய கண்கள் இழிவாக நோக்கு கின்றனவோ, அவர்களுக்கு அல்லாஹ் யாதொரு நன்மையும் அளிக்கமாட்டான் என்றும் நான் கூறவில்லை; அவர்களின் இதயங் களில் உள்ளதை அல்லாஹ்வே நன்கு அறிந்தவன். (இவ்வுண் மைக்கு மாறாக நான் எதுவும் சொன்னதால்) நிச்சயமாக நானும் அநி யாயக்காரர்களில் ஒருவனாகி விடுவேன்.** (ஹூது 11:31)

நபி(ஸல்) அவர்கள் வேதனை தாங்க இயலாது சிலர் பற்றி தீர்ப்பு செய்ய முற்பட்டபோது, அல்லாஹ் அவர்களை எவ்வளவு கடுமையாக எச்சரித்துள்ளான் என்று பாருங்கள்.

**(நபியே!) உமக்கு அவர்கள் விஷயத்தில் எவ்வித அதிகாரமும் இல்லை; அவன் அவர்களை மன்னித்து விடலாம்; அல்லது அவர் களை வேதனைப் படுத்தலாம்; ஆயினும் அவர்கள் அநியாயக் காரர்களாகவே இருக்கிறார்கள்.** (ஆலஇம்ரான் 3:128)

இந்த இறைவாக்குகளைப் பார்த்த பின்னரும் முஸ்லிம்களுக்கு குஃப்ர் ஃபத்வா கொடுத்து ஒரே சமுதாயத்தைப் பிளவு படுத்துவோர் எந்த அளவு மாபெரும் குற்றச் செயலை செய்கிறவர்களாக இருக்கிறார் கள்? பெரும் வழிகேட்டில் இருக்கிறார்கள் என்பதை யாரும் சொல்லி விளங்க வேண்டியதில்லை. மேலே கண்ட இறைவாக்குகளே தெளிவு படுத்துகின்றன.

**கோணல் வழிகளில் செல்லும் முஸ்லிம்களா ஆதாரம்?**

புரோகிதர்களின் துர்போதனையால் இறையுணர்வை இழந்து, இன உணர்வுக்கு ஆளாகி பல கோணல் வழிகளில் சென்று கொண்டிருக்கும் முஸ்லிம்களின் செயல்பாடுகளை ஆதாரமாகக் காட்டி, முஸ்லிம்கள் ஓரணியில் ஒன்றுபடுவது சாத்தியமே இல்லை என்று தவ்ஹீத் மவ்லவி(?) சாதித்துக் கொண்டிருக்கிறார். இறைவனின் இறுதி வழி காட்டல் நூல் அல்குர்ஆன் எடுத்த எடுப்பிலேயே இறையுணர்வு(தக்வா) உடையவர்களுக்கு மட்டுமே அல்குர்ஆன் நேர்வழி காட்டும் என்று எவ்வித சந்தேகமும் இல்லாமல் உறுதியாகக் கூறி, அவர்கள் ஐயறிவு மூலம் பெறப்படும் பகுத்தறிவுக்கு எட்டா மறைவானவற்றை உறுதியாக நம்புவார்கள்; தொழுகையை நிலைநாட்டுவார்கள்; இறைவன் அளித்தவற்றிலிருந்து உரிய வழியில், உரிய முறையில் செலவு செய்வார்கள்; இந்த குர்ஆனையும், முன்னைய நபிமார்களுக்கு வஹீ மூலம் அறிவிக்கப் பட்டவைகளையும், மறுமையையும் உறுதியாக நம்புவார்கள்; இவர்கள் தான் இறைவனின் நேர்வழியில் இருப்பவர்கள்; இவர்களே வெற்றி பெற்றவர்கள் என அறுதியிட்டு அல்லாஹ் உறுதி கூறுகிறான். (பார்க்க பகரா 2:1-5)

## தொழுகையற்ற முஸ்லிம்கள் மார்க்கம் விளங்க முடியுமா?

மேலே கண்டவற்றில் குறையுடையவர்கள், குறிப்பாக ஐங்கால தொழுகைகளை அதனதன் வேளையில் பேணித் தொழாதவர்கள், மக்களுக்குக் காட்டுவதற்காகத் தொழுபவர்கள் அல்குர்ஆனை முறையாக விளங்க முடியுமா? நிச்சயமாக முடியாது. அப்படிப்பட்டவர்களே கோணல் வழிகளை நேர்வழியாகக் காட்டி, தானும் வழிகெட்டு மக்களையும் வழி கெடுப்பார்கள். அப்படிப்பட்டவர்களே நபி(ஸல்) நடைமுறைப்படுத்திக் காட்டிய உம்மத்தன் வாஹிதா-ஒன்றுபட்ட ஒரே சமுதாயம் சாத்தியமே இல்லை என்று அழுத்தமாக, தொடர்ந்து பேசி மக்களை வழிகெடுத்து வருகிறார்கள்.

மற்றபடி, அல்குர்ஆன் வழிகாட்டியுள்ள மேலே கண்ட விஷயங்களை முழுமையாக உறுதியாகக் கடைபிடிப்பவர்கள், குறிப்பாக ஐங்கால தொழுகைகளை அதனதன் நேரத்தில் பேணித் தொழுபவர்கள், உள்ளூரிலிருக்கும்போது ஐங்கால ஜமாஅத்தையும் பேணித் தொழுபவர்கள், உம்மத்தன் வாகிதா-ஒன்றுபட்ட ஒரே சமுதாயத்தை எப்படி நிலைநாட்டுவது என்பதை அல்குர்ஆனிலிருந்து தெளிவாக விளங்குவார்கள்.

இன்று கோணல் வழிகளில் சென்று கொண்டிருக்கும் முஸ்லிம் களை விட கேடுகெட்ட முஸ்லிம்கள் அன்று நபி(ஸல்) அவர்களோடு இருந்தனர். இன்றைய முஸ்லிம்களில் இறுதித் தூதரையும், இறுதி வழிகாட்டல் நூல் அல்குர்ஆனையும் மனப்பூர்வமாக ஒப்புக் கொள் ளாமல் நாவளவில் ஒப்புக் கொண்டதாக நடிக்கும் ஒரேயொரு நபரை யும் காட்ட முடியாது. கோணல் வழிகளில் செல்லும் அனைத்துப் பிரிவு களின் முஸ்லிம்களும் இறைத்தூதரையும், அல்குர்ஆனையும் மனப் பூர்வமாக ஒப்புக் கொண்டிருக்கிறார்கள். ஆனால் அவர்கள் முழுதும் நம்பியுள்ள நயவஞ்சக புரோகித மவ்லவிகள் கொடுக்கும் வழிகெட்ட விளக்கங்களையே நேர்வழியாக நம்பிச் செயல்பட்டு மோசம் போகிறார் கள். வழிகேட்டில் சென்று நரகில் விழக் காத்திருக்கிறார்கள்.

ஆனால் நபி(ஸல்) அவர்களது நபித்துவ காலத்தில் இறைத்தூதரை யும், அல்குர்ஆனையும் மனப்பூர்வமாக ஒப்புக் கொள்ளாமல் நாவள வில் ஒப்புக் கொண்டதாக நடித்த முனாஃபிக்கள்-நயவஞ்சகர்கள் பலர் இருந்தனர். ஷைத்தான்களான குறைஷ் முஷ்ரிக், காஃபிர்களுடன் சேர்ந்து லாத், மனாத், உஜ்ஜா, ஹுப்ல் போன்ற சிலை வணங்கும் கொடிய முஷ்ரிக்களாக, காஃபிர்களாக இருந்தனர் என்பதை அல்குர் ஆன் பல இடங்களில், குறிப்பாக பகரா 2:8-20 இறைவாக்குகள் பகிரங்கமாக அறிவிக்கின்றன. அந்த நயவஞ்சகர்கள் பல கோணல் வழிகளில் சென்று கொண்டிருந்தனர். அப்படிப்பட்ட நிலையில் நபி(ஸல்) அவர்கள், தாங்கள் சிலைகளை வணங்கும் முஷ்ரிக்கள் தான், இறைத் தூதரையும், அல்குர்ஆனையும் மறுக்கும் காஃபிர்கள் தான் என பகிரங்கமாக அறிவித்த முஷ்ரிக், காஃபிர்களை விட கேடுகெட்ட, நரகின் அடித்தட்டில் கிடந்து வேகப் போகும் (பார்க்க அந்நிஸா 4:142-145) மிகக் கொடிய முஷ்ரிக், காஃபிர்களை அவர்கள் தங்களை முஸ்லிம்கள் என்று நுனி நாவால் நயவஞ்சகமாகக் கூறிய ஒரே காரணத்தால், அவர்களின் இறுதி முடிவை அல்லாஹ்விடம் விட்டு விட்டு, அந்த நயவஞ்சக முஸ்லிம்களையும், இவ்வுலகில் முஸ்லிமாக ஏற்று, உம்மத்தான் வாஹிதா-ஒன்றுபட்ட ஒரே சமுதாயம் என்பதை எப்படிக் கட்டிக் காத்தார்கள் என்பதை முறையாக அறிந்தவர்கள், இறையுணர்வுமிக்கவர்கள், முஸ்லிம் சமுதாய ஒற்றுமை ஒருபோதும் சாத்தியமில்லை என்று பிதற்றமாட்டார்கள்.

**கோணல் வழிகளில் செல்லும் இன்றைய முஸ்லிம்கள்!**

இன்றைய முஸ்லிம்களில் சிலரோ, பலரோ எப்படிப்பட்ட வழிகேட்டிலிருந்தாலும், செத்தவர்களின் சமாதிகளில் சுஜூது செய்தாலும், சபரி மலை, பழனி, திருப்பதி போன்ற இடங்களுக்குப் போய் சிலை வழிபாடுகளில் ஈடுபட்டாலும், அவர்களுடைய இறுதி முடிவு எப்படி முடியும் என்பதை அறியும் ஞானம் நமக்கு இல்லாததால், அப்படிப்பட்டவர்களின் இறுதி முடிவை, நபி(ஸல்) அவர்கள் செய்து காட்டியதுபோல் இறைவனிடம் ஒப்படைத்துவிட்டு, அவர்கள் தங்களை முஸ்லிம்கள் என்று (நுனி நாவால் அல்ல) மனப் பூர்வமாக சொல்லும் நிலையில் அவர்களை இவ்வுலகில் முஸ்லிமாக ஏற்று, ஒன்றுபட்ட முஸ்லிம் சமுதாயத்தை அன்று நபி(ஸல்) அவர்கள் கட்டிக்காத்ததுபோல், இன்று நாம் கட்டிக் காப்பதற்கு தடை என்ன இருக்கிறது?

குஃப்ர், ஷிர்க், பித்அத்களில் ஈடுபடும் முஸ்லிம்களின் அச்செயல்கள் மிகமிகக் கொடியவை, அவற்றில் ஈடுபடுகிறவர்கள் சென்றடைவது நரகமே என உறுதியாக நம்பி அத்தீச் செயல்களிலிருந்து நம்மைக் காப்பாற்றிக் கொள்வது நமது கடமை; அடுத்து அச்செயல்களில் ஈடுபடும் முஸ்லிம்களுக்கு, அத்தீச் செயல்களின் கெடுதிகள் பற்றியும், அவற்றில் ஈடுபடுகிறவர்கள் இறுதியில் நரகம் புக நேரிடும் என்றும் தொடர்ந்து விடாது எடுத்துச் சொல்லிக் கொண்டிருப்பதும் நமது நீங்காக் கடமை; மற்றபடி அவர்கள் நமது உபதேசத்தைக் கேட்காமல், திமிறாகப் பேசி, வீம்புடன் அவற்றில் ஈடுபடுகிறார்கள் என்பதற்காக அவர்களுக்கு 'குஃப்ர்' ஃபத்வா கொடுக்க வேண்டும் என்று குர்ஆனிலோ, ஹதீஸிலோ சொல்லப் பட்டிருக்கிறதா? இல்லையே!

அல்லாஹ்வின் தெளிவான கட்டளைகளைப் புறக்கணித்து விட்டு, கட்டளையிடப்படாத ஒன்றில் தீவிரமாக இருக்கும் இந்த மவ்லவி புரோகிதர்கள் இறைநேசர்களா? ஷைத்தானின் தோழர்களா? முஸ்லிம் சமுதாயத்தைப் பிளவுபடுத்தி அற்ப உலக ஆதாயம் அடையும் குறுகிய நோக்கத்துடன் முஸ்லிம்களைப் பிளவுபடுத்தி காஃபிராக்கும் கொடிய முயற்சியில் ஈடுபடுகிறார்கள் என்பது குன்றிலிட்ட தீபமாக விளங்குகிறதே!

**மறுமையை உறுதியாக நம்பும் முஸ்லிம்களுக்கு மட்டுமே இது சாத்தியம்!**

அல்லாஹ்வையும், மறுமையையும் உறுதியாக நம்பி, மறுமையில் கூலியை எதிர்பார்த்து, தூய எண்ணத்துடன் செயல்படுகிறவர்களுக்கு மட்டுமே முஸ்லிம்கள் என்று கூறுவோர் அனைவரையும் முஸ்லிமாக ஏற்று 21:92, 23:52 இறைக் கட்டளைப்படி ஒன்றுபட்ட முஸ்லிம் சமுதாயத்தைக் கட்டிக் காப்பது சாத்தியப்படும்.

சமுதாயத்தைப் பிளவுபடுத்தி, ஏமாந்த ஒரு சிலரையோ, பலரையோ நாவன்மையுடைய பேச்சால் மயக்கி, அவர்களை தனது ஆதிக்கத்தில் எடுத்து, அற்பமான இவ்வுலக ஆதாயம் அடைவதைக் குறிக்கோளாகக் கொண்டிருக்கும் நயவஞ்சகப் புரோகிதர்களுக்கு, சமுதாய ஒற்றுமை வேம்பாகக் கசக்கும் என்பதில் அணுவளவும் ஐயமே இல்லை. ஷைத்தான் அவர்களின் வழிகேட்டைத்தான் அவர்களுக்கு மிக அழகாகக் காட்டுவான். (பார்க்க. 15:39)

**சூன்யப் பேச்சாளர்!**

**"பயானில் (பேச்சுக்கலையில்) சூன்யமுள்ளது" என நபி(ஸல்) எச்சரித்துள்ளார்கள்.**

**"பொய்யுடையொருவன் சொல்வன்மையினால் மெய் போலும்மே, மெய்போலும்மே" என்பது சான்றோர் எச்சரிக்கை.**

சூன்யம் என்றால் வசீகரப்படுத்துதல் – பிறரைத் தன் வசப்படுத்துதல் என்று பொருள். சிலருக்கு இறைவன் அளித்துள்ள பேச்சுக் கலையை துஷ்பிரயோகம் செய்து, அதன் மூலம் பலரை அவர்கள் வசீகரம் செய்து விடுகின்றனர். உட்கார்ந்த இடத்தைவிட்டு எழக்கூட மனமில்லாமல் மக்கள் அப்படிப்பட்டவர்களின் பேச்சில் கட்டுண்டு விடுகின்றனர். இதைத் தான் நபி(ஸல்) அவர்கள் பேச்சுக் கலையில் சூன்யமுள்ளது என எச்சரித்துள்ளார்கள். இத்தகைய திறமை பெற்றவர்களின் தவறான, ஷிர்க்கான, குஃப்ரான கருத்துக்களும் கண்டு கொள்ளப்படாமல் போய் விடும். மக்கள் இத்தகைய திறமை பெற்றவர்களின் சொல்லாற்றலில் மயங்கி, அவர்கள் கூறுகின்ற அனைத்தையும் சரியானது என நம்பி விடக்கூடாது. அவர்கள் கூறும் பொய்க் கூற்றுக்களையும் உண்மை யானவையாக நம்பி ஏமாறக் கூடாது என்பதற்காக நபி(ஸல்) அவர்கள் நம்மை இப்படி எச்சரித்துள்ளார்கள். இப்படிப்பட்டவர்களை எச்சரிக்கும் இறைவாக்கு அல்குர்ஆன் பனீ இஸ்ராயீல் 17:18-ல் உள்ளது.

**ஏனிந்த துடிப்பு?**

முஸ்லிம்களை காஃபிராக்க இவர்கள் ஏன் இந்த அளவு துடிதுடிக் கிறார்கள் தெரியுமா? அப்படி குஃப்ர் ஃபத்வா கொடுத்தால்தான் சமுதாய த்தைப் பிளவு படுத்தித் தங்களுக்கென்று ஒரு தனிக் கூட்டத்தைச் சேர்த்து உலக ஆதாயம் அடைய முடியும். மற்றபடி நபிமார்களுக்கே இந்த அதிகாரம் கொடுக்கப்படவில்லை; அந்த அதிகாரம் முழுக்க முழுக்க அல்லாஹ்வுக்கே சொந்தம் என்பதை தாஹா 20:52, ஆல இம்ரான் 3:128 நெத்தியடியாகக் கூறுவதை இவர்கள் படிக்காமல் இல்லை; மொழிபெயர்த்து நூல் வெளியிடாமல் இல்லை; ஆனால் அல்லாஹ் அல் அஃராஃப் 7:179-ல் கூறுவது போல் அவர்கள் உணர்வு பெறுவதாக இல்லை; காரணம் அவர்களிடம் இன உணர்வு இருக்கிறதே அல்லாமல் இறை உணர்வு (தக்வா) இருப்பதாகத் தெரியவில்லை. அற்ப உலக ஆதாயங்கள் இவர்களின் கண்களுக்கு திரையிட்டு விடுகின்றன; காதுகளை செவிடாக்கிவிடுகின்றன; உள்ளங் களுக்கு முத்திரை இட்டு விடுகின்றன.

**ஒரு பெரிய சந்தேகம்!**

அப்படிப்பட்டவர்கள் சமாதி-தர்கா வழிபாடுகள் பற்றி, மூட நம்பிக்கை கள், மூடச் சடங்குகள், சம்பிரதாயங்கள் பற்றி, மத்ஹபுகள் பற்றி மிகச் சரியாகவும், தெளிவாகவும் மக்களுக்கு எடுத்துச் சொல்லத்தானே செய்கிறார்கள். அவர்களின் உபதேசங்களைக் கேட்டுத்தானே, அந்த வழிகேடுகளில் மூழ்கியிருந்த பலர் அவற்றிலிருந்து விடுபட்டு ஓரிறை வனை மட்டும் வழிபட முன் வந்திருக்கிறார்கள். அப்படிப்பட்ட வழிகேடு களை நேர்வழியாக-மார்க்கமாக போதிக்கும் மவ்லவிகளை, உங் களைப் போல் புரோகிதர்கள் என்றும், தொப்பையை ஹராமில் நிரப்பு கிறார்கள் என்றும், நரக நெருப்பால் நிரப்புகிறார்கள், இன்னும் பலவித மாக மிகமிகக் கடுமையாக விமர்சிக்கத்தானே செய்கிறார்கள்; அப்படிப் பட்டவர்களை, மக்களுக்கு நல்லுபதேசம் செய்கிறவர்களை நீங்கள் இப்படிச் சாடலாமா? விமர்சிக்கலாமா? என்பதே அந்த சந்தேகம்.

**சந்தேகத்தீர்வு!**

புகாரீ முதல் பாகம் முதல் ஹதீஸ் இவ்வாறு கூறுகிறது.

**“செயல்கள் அனைத்தும் எண்ணங்களைப் பொறுத்தே**

**அமைகின்றன. ஒவ்வொரு மனிதருக்கும் அவர் எண்ணியது தான் கிடைக்கிறது. ஒருவரது ஹிஜ்ரத் (புலம் பெயர்த்தல்) அவர் அடைய விருக்கும் உலகத்தைக் குறிக்கோளாகக் கொண்டிருந்தால் அல்லது அவர் மணக்கவிருக்கும் ஒரு பெண்ணை நோக்கமாகக் கொண்டிருந்தால், அவரது ஹிஜ்ரத் எதை நோக்கமாகக் கொண்டதோ அதுவாகவே அமையும்**'' என்று நபி(ஸல்) அவர்கள் கூறியதாக உமர்பின் கத்தாப் (ரழி) அறிவித்தார்கள்.

(ர.அ) புகாரீ 1-ம் பாகம் 1-ம் ஹதீஸ்

**அசலான நோக்கம்!**

தவ்ஹீத் மவ்லவி(?) புரோகிதர்களின் அசல் நோக்கம், தர்கா, தரீக்கா, மத்ஹபு மவ்லவி புரோகிதர்கள் பின்னால் செல்லும் பெருங் கொண்ட முஸ்லிம்களிலிருந்து கணிசமான ஒரு கூட்டத்தினரை, தங்கள் பின்னால் வரச் செய்ய வேண்டும் என்பதே! எனவே அந்த முகல்லிது புரோகித மவ்லவிகளையும், அவர்கள் போதிக்கும் கோணல் வழிகளையும் மிகக் கடுமையாக விமர்சிக்கிறார்கள். அல்லாஹ் பனீ இஸ்ராயீல் 17:18-ல் கூறியிருப்பது போல், அவர்களது எண்ணப்படியே முகல்லிது புரோகிதர்கள் பின்னால் இருந்த ஒரு கணிசமான கூட்டம் தவ்ஹீது(?) புரோகிதர்கள் பின்னால் அணி வகுத்துள்ளனர்.

அதற்காக வேண்டியே வெறித்தனமாக அல்லாஹ்வின் அதிகாரத் தில் தலையிட்டு, அவர்களுக்கு ஷிர்க், குஃப்ர் ஃபத்வா-தீர்ப்புக் கொடுக் கின்றனர். அவர்கள் பின்னால் நின்று தொழக் கூடாது என்று ஃபத்வா கொடுத்து, ஒவ்வொரு ஊரையும் பிளவு படுத்தி தனிப்போட்டிப் பள்ளி கட்டி அவற்றை தங்களின் ஆதிக்கத்தில் கொண்டு வந்துள்ளனர். இப்போது **ஜாக்**கிலிருந்து பிரிந்து **ததஜ** புதிய இயக்கம் கண்ட பின்னர் **ஜாக்** பள்ளிகளை அபகரித்துத் தங்கள் ஆதிக்கத்தில் கொண்டு வர பள்ளியிலேயே அடிபிடி தகறாறு, பகரா 2:114 இறைக்கட்டளைக்கு முரணாக தொழுபவர்களுக்கு இடையூறு செய்து தடுத்தல், ஒரே பள்ளி யில் **ஜாக், ததஜ** என தனித்தனி ஜமாஅத், ஜும்ஆ நடத்தல், இப்படி அலங்கோலப்பட்டு வருகிறார்கள். அவதூறுகளை வாரி, வாரி இறைக்கி றார்கள்.

**முகல்லிது புரோகிதர்களை விட கேடுகெட்ட நிலை!**

**ஜாக்** பள்ளிகளை அபகரிக்க நீதி மன்றங்களில் வழக்குகள், பகரா 2:188 இறைக் கட்டளைக்கு முரணாக அதிகாரிகளுக்கு இலஞ்சம் கொடுத்தல், சதிச் செயல்கள் என அடாவடித்தனங்களில் ஈடுபட்டு இந்த தவ்ஹீத்(?) புரோகிதர்கள், முகல்லிது புரோகிதர்களைவிட பல மடங்கு கேடுகெட்டவர்களாக ஆகிவிட்டதை நிதர்சனமாகப் பார்த்து வருகிறீர்கள்.

### பசுத்தோல் போர்த்திய புலிகள்!

அல்லாஹ்வுக்காக, அல்லாஹ்வின் பொருத்தம் நாடி, மறுமைப் பலன்களை எதிர்பார்த்து, நீங்கள் கூறியுள்ளபடியுள்ள இவர்களது நற்செயல்கள் இருக்குமானால், இப்படிப்பட்ட இழி செயல்களை, ஈனச் செயல்களை தவ்ஹீத்(?) புரோகித மவ்லவிகள் செய்வார்களா? அவர்களின் இந்த இழி செயல்களே தங்கள் பின்னால் ஒரு கணிசமான கூட்டம் சேரவும், அவர்களைக் கொண்டு உலக ஆதாயம் அடையவுமே (பார்க்க 17:18) பசுதோல் போர்த்திய புலிகளாக இவர்கள் நாடகமாடுகிறார்கள் என்பதைப் புரிய வைக்கும்.

### நேர்வழியில் இருப்பவர்கள் நேர்வழியில் இருப்பதாக ஒரு போதும் பிதற்ற மாட்டார்கள்!

அவர்கள் வழிகேட்டில் இருந்து கொண்டு, முஸ்லிம்களையும் அந்த வழிகேட்டின் பக்கமே அழைக்கிறார்கள் என்பதற்கு, அவர்கள் கற்பனை செய்து மிகச் சமீபமாக அமைத்த இயக்கங்களே நேர்வழியில் இருப்பதாகவும், அந்த இயக்கங்களில் வந்து சேரும்படி முஸ்லிம்களுக்கு ஓயாது அழைப்பு விட்டுக் கொண்டிருப்பதும் போதிய சான்றாகும். நேர்வழியில் இருப்பவர்கள் ஒருபோதும் அல்லாஹ்வின் கடுமையான எச்சரிக்கை, **அந்நஜ்ம் 53:32**-ல் "**அவன் உங்களைப் பூமியிலிருந்து உண்டாக்கியபோதும், நீங்கள் உங்கள் அன்னையரின் வயிறுகளில் சிசுக்களாக இருந்தபோதும், அவனே உங்களை நன்கு அறிந்தவன். எனவே, நீங்களே உங்களைப் பரிசுத்தவான்கள்(நேர்வழியில் இருப்பவர்கள்) என்று புகழ்ந்து கொள்ளாதீர்கள். யார் பயபக்தியுள்ளவர்-இறையுணர்வுமிக்கவர் என்பதை அவனே நன்கறிவான்.**" (53:32)

இந்த இறைக்கட்டளைக்கு முரணாக தாங்கள்தான் நேர்வழியில் இருப்பதாக தம்பட்டம் அடிக்கமாட்டார்கள்; தவ்ஹீத்வாதிகள் என பீற்ற

மாட்டார்கள். மீறி இப்படி தம்பட்டம் அடிப்பவர்கள், பீற்றிக் கொள்ப வர்கள் உண்மையில் நேர்வழியில் இல்லை; கோணல் வழிகளில் செல்கிறார்கள் என மிக எளிதாகப் புரிந்து கொள்ள முடியும்.

எனவே தவ்ஹீத்(?) புரோகிதர்கள் தர்கா சடங்குகள், மத்ஹபுகள் மற்றும் மூட நம்பிக்கைகள், சடங்குகள் சம்பிரதாயங்கள் இவற்றை மிகக் கடுமையாகச் சாடுவது மறுமையில் அல்லாஹ்விடம் கூலியை எதிர்பார்த்து அல்ல; சமுதாயத்தைப் பிளவுபடுத்தி, தங்கள் பின்னால் ஒரு கூட்டத்தைச் சேர்த்து, அற்ப இவ்வுலக ஆதாயம் அடையும் கெட்ட நோக்கத்துடனேயாகும். அதற்காகவே அவர்களுக்கு ஷிர்க், குஃப்ர் ஃபத்வா கொடுப்பதும், அவர்கள் பின்னால் நின்று தொழக்கூடாது என்று ஃபத்வா கொடுப்பதும் என்பது குன்றிலிட்ட தீபமாக நடுநிலை யாளர்களுக்கு நிச்சயம் விளங்கும். அல்லாஹ் 51:55-ல் கூறுவது போல் உண்மையான நம்பிக்கையாளர்கள் சத்தியத்தை-நேர்வழியை தெளிவாக அறிவார்கள்.

### இவர்களா ஏகத்துவத்தை நிலை நாட்டுபவர்கள்?

"ஏகத்துவத்தை நிலைநாட்ட நாடு முழுவதும் அடி, உதை பட்டவர்கள் நாங்கள்" என்று அடிக்கடி கூறி வருவதும் மக்களிடம் அனுதாபத்தைப் பெற்று தங்களின் இயக்கத்தை வளர்த்துக் கொள்ளவே. அடி, உதை பட்டதற்கு அடிப்படைக் காரணம் வீம்பாகத் தொப்பியை கழற்றி எறிந்து விட்டு தக்பீர் கட்டுவது, பள்ளிகள் கிடுகிடுக்க ஆம்ம்ம்மீமீமீன்ன்ன் என உரக்கக் கத்துவது, நீரிலிருந்து வெளியே எடுத்துப் போட்ட மீன் துடிப்பது போல் ஆள்காட்டி விரலை வேகமாக அசைப்பது, இமாம் ஸலாம் கொடுத்தாரோ இல்லையோ வேகமாக எழுந்து வரிசையாக இருப்பவர்களையும், பின்னால் தொழுது கொண்டிருப்பவர்களையும் கண்டு கொள்ளாமல், வில்லிலிருந்து அம்பு வெளியேறுவது போல் வெளியேறுவது, இப்படி வேண்டுமென்றே குழப்பம் செய்யும் நோக்கத் துடன் செயல்பட்டதால் அடி உதை பட்டார்கள். அவர்களின் அடிப்படை நோக்கம் இப்படி குழப்பத்தை ஏற்படுத்தி, காலம் காலமாக இருந்து வரும் மஹல்லா பள்ளிகளில் "நபி வழியில் தொழ முடியவில்லை; எனவே நாம் தனி தவ்ஹீத்(?) பள்ளி கட்டிக் கொள்வோம்" என தமது ஆதரவாளர்களைத் தூண்டி, தனிப் போட்டிப் பள்ளி கட்டி தங்கள் இயக் கத்தின் ஆதிக்கத்தில் கொண்டு வந்து ஆதாயம் அடைவதே. மற்றபடி

இந்த செயல்கள் எதுவுமே நபி வழிக்கு உட்பட்டவையல்ல; நபி வழிக்கு முரண்பட்டவை.

அவர்களே முன்நின்று தவ்ஹீத்(?) பள்ளி என்ற பெயரில் கட்டிய பள்ளிகளிலேயே இன்று அடிதடி என அராஜகங்கள் செய்து **ஜாக்** நிர்வாகத்திலுள்ள அப்பள்ளிகளை தங்கள் **ததஜ** ஆதிக்கத்தில் கொண்டு வர வழக்கு, வம்பு, லஞ்சம், லாவன்யம் என மார்க்க முரணான செயல்களிள் ஈடுபடுவது நமது கூற்றை மேலும் உண்மைப்படுத்துவதாக இருக்கிறது.

1966லேயே சமாதி வழிபாட்டினரிடம் அடி, உதை பட்டவர்கள் இருக்கிறார்கள்; அவர்கள் இவர்களைப் போல் இப்படிப் பீற்றிக் கொண்டு அலையவில்லை.

**ஓரிறைவனை மட்டுமா வழிபடுகிறார்கள்?**

சிலர் சொல்லுவது போல் அவர்கள் பின்னால் செல்பவர்கள் ஓரிறை வனை மட்டும் வழிபட்டு, அவனது தூதரைப் பின்பற்றும் நிலையில் இல்லை. குர்ஆன், ஹதீஸுக்கு இந்த தவ்ஹீத் மவ்லவி(?) கொடுக்கும் சுய விளக்கங்களையே மார்க்கமாக நம்பி அவற்றையே பின்பற்று கின்றனர். முகல்லிது புரோகிதர்களை தக்லீது செய்வதை விட்டும் மீண்டு, மறுபடியும் தவ்ஹீத்(?) புரோகிதர்களை தக்லீது செய்யும் நிலையிலேயே இருக்கிறார்கள். அல்லாஹ்வின் 7:3, 33:36, 59:7 கட்டளைகள்படி அனைத்து வகை புரோகித மவ்லவிகளை(?) விட்டும் விடுபட்டு சுயமாக குர்ஆன், ஹதீஸில் உள்ளதை உள்ளபடி எடுத்து நடக்கும் தக்லீது அற்ற நிலைக்கு அவர்கள் உயரவில்லை. எனவே அவர்கள் ஓரிறைவனை மட்டும் வழிபடும் உன்னத நிலையை அடைய வில்லை என்பதை அவர்களின் செயல்பாடுகளே வெளிச்சம் போட்டுக் காட்டுகின்றன. ஆதம்(அலை) அவர்களையே ஏமாற்றி அல்லாஹ்வின் நேரடிக் கட்டளைக்கு (7:19-25) மாறு செய்ய வைத்த ஷைத்தானுக்கு இந்த தவ்ஹீத் மவ்லவி(?) புரோகிதர்களையும், தவ்ஹீத்வாதிகளை யும்(?) ஏமாற்றி வழி கெடுப்பதா பெரிய காரியம். அதனால்தான் அல்லாஹ்வின் நேரடிக் கட்டளை 53:32க்கு முரணாக தங்களை தவ்ஹீத்வாதிகள்(?) ஏகத்துவவாதிகள்(?) என தம்பட்டம் அடித்துக் கொண்டும், பீற்றிக் கொண்டும் அலைகிறார்கள். அவர்களின் முயற்சி ஏகத்துவ எழுச்சி அல்ல; ஏகத்துவத்துக்கு சாவு மணி அடிக்கும்

வழிகேட்டு முயற்சி என்பது 53:32க்கு முரணாக அவர்கள் தங்களை தவ்ஹீத்வாதிகள்-ஏகத்துவவாதிகள் என பீற்றிக் கொள்வதே போதிய ஆதாரமாகும்.

**இஸ்லாம் இனிய மார்க்கமா? ததஜ இனிய மார்க்கமா?**

தவ்ஹீத் புரோகித மவ்லவி(?) நாடெங்கும் ''இஸ்லாம் ஓர் இனிய மார்க்கம்'' என நடத்தி பலரை இஸ்லாத்தை ஏற்கச் செய்கிறார். அப்படி சிறப்புப் பணிகள் பல செய்பவரை நீங்கள் கடுமையாக விமர்சிப்பது முறையா? என சில சகோதரர்கள் கேட்கிறார்கள்.

அல்குர்ஆன் ஆல இம்ரான் 3:102 இறைக் கட்டளைப்படி தவ்ஹீத் மவ்லவியே(?) இன்னும் முழுமையான முஸ்லிமாகவில்லை; **ததஜ** என தடுமாறிக் கொண்டிருக்கிறார். அவர் எப்படி மற்றவர்களை முழுமை யான முஸ்லிமாக்க முடியும்? அத்தவ்பா 9:8 கூறுவது போல் அவரது வாய்தான் "இஸ்லாம் ஓர் இனிய மார்க்கம்" என்கிறது. அவரது உள்ளமோ **ததஜ** ஓர் இனிய மார்க்கம் என்கிறது.

முஸ்லிம்களை இப்புரோகிதர்கள் ஆக்கிரமித்துக் கொண்ட பின்னர், ஒவ்வொரு பிரிவாரும் மற்றவர்களை முஸ்லிமாக்கி தங்களின் பிரிவுக் கொள்கையில் இணைத்துக் கொள்வது கடந்த 1000 வருடங்களாக நடந்துதான் வருகிறது. தவ்ஹீத் மவ்லவி(?), புரோகித மதரஸாவில் மவ் லூது ஓதிக் கொண்டிருக்கும்போது, நெல்லை மாவட்டத்தில் மீனாட்சி புரம் என்ற முழு ஊரே முஸ்லிமானது. ஆனால் வழிகெட்ட மத்ஹபில் சேர்க்கப்பட்டார்கள். அதன் விளைவு, அவர்களில் சிலர் மீண்டும் அவர் களின் பழைய மதத்திற்கே திரும்பிக் கொண்டிருக்கிறார்கள். காரணம் அவர் களின் பழைய சமூகத்தில் காணப்படாத வரதட்சணை -கைக்கூலி கொடுமை, இந்த மத்ஹபு முஸ்லிம் சமூகத்தில் காணப்படுகிறது.

இப்படி கடந்த 1000 வருடங்களாகக் கோடிக் கணக்கானோர் இஸ்லாத்தைத் தழுவுகின்றனர். ஆனால் முழுமையான இஸ்லாத்தை அல்ல; யார் அவர்களுக்கு இஸ்லாத்திற்காக அழைப்பு விடுத்தார் களோ, அவர்களின் பிரிவு வழிகெட்டக் கொள்கை அடிப்படையிலான இஸ்லாத்திற்கே. விரல்விட்டு எண்ணும் ஒரு சிலர் மட்டுமே நேரடியாக குர்ஆனை படித்து விளங்கி புரிந்து முழுமையான இஸ்லாத்தை ஏற்று வருகிறார்கள். 3:102 கூறுவது போல் இஸ்லாத்தில் முழுமையாக நுழைகிறார்கள்.

மற்றவர்கள் பெயர் அளவில், வழிகெட்டப் பிரிவு ஒன்றில் முஸ்லி மாக ஆவதில் எந்தவிதச் சிறப்புமில்லை. மனிதர்களால் கற்பனை செய்யப்பட்ட எந்த வழிகெட்டப் பிரிவும், முழுமையான இஸ்லாத்தின் பக்கம் ஒருபோதும் அழைப்பு விட முடியாது, அவர்கள் இருக்கும் வழிகேட்டின் பக்கமே அழைப்பு விட முடியும்.

இந்த அடிப்படையில் 2005-ல் தவ்ஹீத் மவ்லவியின்(?) கற்பனை யில் உருவானதே '**ததஜ**' என்ற வழிகெட்டப் பிரிவு. அவர்கள் தங்களை தவ்ஹீத் வாதிகள் என்று பீற்றிக் கொள்வதே, அவர்கள் வழிகேட்டில் இருக்கிறார்கள் என்பதை 53:32 இறைக் கட்டளை உறுதிப்படுத்துகிறது. ஆக தவ்ஹீத் மவ்லவி(?) ''இஸ்லாம் ஓர் இனிய மார்க்கம்'' என்று வாயளவில் சொல்லிக் கொண்டு, உள்ளத்தால் முஸ்லிம் அல்லாத வர்களை '**ததஜ**'வின்பால் அழைக்கிறார். (பார்க்க 9:8) இவரது அழைப்பு முழுமையான இஸ்லாத்தின்பால் என்று அவரது ஆதரவா ளர்கள் நம்பலாம்; காரணம் அவர்கள் இருக்கும் வழிகேட்டையே, நேர்வழியாக குருட்டுத் தனமாக நம்பிக் கொண்டிருப்பவர்கள்தானே! இறைவனுக்கும் தங்களுக்குமிடையில் எவ்வித புரோகித மவ்லவி யையும் இடைத் தரகராக-புரோகிதராகக் கொள்ளாமல், நேரடியாக குர்ஆன், ஹதீஸை படித்து விளங்குகிறவர்கள் மட்டுமே '**ததஜ**' உட்பட அனைத்துப் பிரிவுகளும், இயக்கங்களும் வழிகேடே என்பதை விளங்க முடியும். ஆக தவ்ஹீத் மவ்லவி(?) முஸ்லிம் அல்லாதவர்களை இஸ் லாத்தின் பக்கம் அழைக்கவில்லை. தனது '**ததஜ**'வின் பக்கமே அழைக்கிறார்.

தன்னை 'முஸ்லிம்'என்றும், தான் இருப்பது நபி(ஸல்) விட்டுச் சென்ற ஜமாஅத் அல்முஸ்லிமீன் என்றும் சொல்லிக் கொள்வதை நஞ்சென வெறுத்து, அதற்கு ஆயிரம் நொண்டிச் சாக்குகளைச் சொல்லி, தன்னை தவ்ஹீத்வாதி, தவ்ஹீத் மவ்லவி(?), 'ததஜ'என பீற்றிக் கொள்ளும் இவர், மற்றவர்களை தனது 'ததஜ'வின் பக்கம் அழைக்காமல் ''இஸ்லாம் ஓர் இனிய மார்க்கம்'' என இஸ்லாத்தின் பக்கம் நயவஞ்சகமாக அழைக்கவும் ஒரு தக்க நயவஞ்சகக் காரணம் உண்டு.

''**ததஜ** ஓர் இனிய மார்க்கம்'' என்று '**ததஜ**'வின் பக்கம் அழைத்தால் அதற்கு தவ்ஹீத்(?) வாதிகளைத் தவிர மற்றவர்களின் ஆதரவு

நிச்சயமாகக் கிடைக்காது. வசூலும் பெருவாரியாகக் கிடைக்காது. வசூல் ராஜாவுக்கு பெருத்த ஏமாற்றமே மிஞ்சும். அதற்கு மாறாக ''இஸ்லாம் ஓர் இனிய மார்க்கம்'' என்ற பெயரால் நுனி நாவால் வஞ்சகமாக அழைத்தாலும், அனைத்து வகை முஸ்லிம்களின் ஆதரவு பெருவாரி யாகக் கிடைக்கும். அரபு நாடுகளின் ஷேக்குகளது ஆதரவும் அதிகமாகக் கிடைக்கும். வசூலும் ஜாம்ஜாம் என நடக்கும். வசூலிப்பவர்களுக்கு கமிஷன் என அசத்த முடியும். வசூல் ராஜாவுக்கு உள்ளூரிலும், உள் நாட்டிலும், வெளிநாடுகளிலும் கோடிக் கணக்கில் வசூலாகும். கூலிக்கு ஆள்பிடித்து அரசியல்வாதிகள் போல் பெருங்கூட்டத்தைச் சேர்க்கலாம்.

ஆக வசூலைக் குறியாகக் கொண்டே, முஸ்லிம்களை ஏமாற்ற ''இஸ்லாம் ஓர் இனிய மார்க்கம்'' என வாயால் சொல்கிறாரே அல் லாமல், அவரது உள்ளத்தில் நிறைந்திருப்பது, '**ததஜ**'வே. அவர் முஸ் லிம் அல்லாதவர்களை நேர்வழியான முஸ்லிம்களாக ஆக்க வில்லை. முஸ்லிம் என்ற பெயரால் வழிகெட்ட '**ததஜ**'வில்தான் கூட்டத்தைச் சேர்த்துக் கொண்டிருக்கிறார். எனவே அவரது ஆதரவாளர்கள் முஸ்லிம் அல்லாதவர்களை முஸ்லிமாக ஆக்குகிறார் என்று பெருமை பேசுவதில் அர்த்தமே இல்லை.

உலகின் பல பாகங்களிலிருந்தும் பல அறிஞர்கள் வந்து தமிழ், உருது, மலையாளம், ஆங்கிலம் என பல மொழிகளில் அனை வருக்கும் பொதுவாக பத்து நாட்கள் நடத்தப்பட்ட **PEACE** மாநாட்டைக் கண்டித்தார் வீண் செலவு என்றார்; மார்க்கத்திற்கு புறம்பானது என்றார். இப்போது வழிகெட்ட **ததஜ** மவுலவிகள்(?) மற்றும் சிலரை வைத்து **ததஜ** மாநாட்டிற்கு எந்த முகத்தோடு அழைப்பு விடுக்கிறார்? மறுமகள் உடைத்தால் பொற்குடம், மாமியார் உடைத்தால் மண் குடம் என்ற கொள்கையா? பத்து நாட்கள் பல இயக்கத்தினர் கலந்து கொண்ட மாநாட்டிற்கு செலவு சுமார் 1.35 கோடி என்கின்றனர். ஆனால் இவரது **ததஜ** இயக்கத்தினருக்காக மட்டும் நடத்தும் இரண்டு நாட்கள் மாநாட்டிற்கு மூன்று கோடி என்கின்றனரே! இதன் இரகசியம் என்ன? சமுதாயப் பணம் இப்படி வீணாகலாமா?

திறமையிருந்தும் பல ஏழை மாணவ, மாணவிகள் படிக்க முடியா மல் தவிக்கிறார்களே அவர்களைக் கண்டறிந்து படிக்க உதவி செய்தால் சமுதாய மேம்பாட்டிற்கு அது பெரிதும் உதவுமே! ஆம்!

அதைக் கொண்டு சமுதாயம் வளரும்; இவர்கள் வளர முடியாதே! பின் எப்படி அதற்காக முனைவார்கள்?

**அவர்கள் இப்படியும் வழிகெடுப்பார்கள்!**

அல்லாஹ் பெயரிட்டு, நபி(ஸல்) அவர்கள் நடைமுறைப்படுத்திக் காட்டிய "ஜமாஅத் அல் முஸ்லிமீன்"ஐ அபூ அப்தில்லாஹ்வின் ஜமாஅத், அதுவும் ஒரு பிரிவு ஜமாஅத்துதான் எனக் கூறி, தன்னை நம்பியுள்ள இளைஞர்களை தந்திரமாக வழிகெடுக்கும் தவ்ஹீத் மவ்லவி(?), இன்னொரு தந்திரத்தையும் அவர்களிடம் கூறி அவர்களை ஏமாற்றத் துணிய மாட்டார் என்பதை எப்படி நம்ப முடியும்?

**மிக சொற்பமானவர்கள் ஆட்சியாளராக முடியுமா?**

மிகமிக அதிகமானவர்கள் வழிகேட்டில் சென்று நரகை அடைவதாகவும், மிகமிக சொற்பமானவர்களே நேர்வழி நடந்து சுவர்க்கத்தை அடைவார்கள்; அவர்களுக்கே இவ்வுலகில் ஆட்சி அதிகாரம் கிடைக்கும் என அபூ அப்தில்லாஹ் புளுகி வருகிறார். இன்றைய ஜனநாயக முறைப்படி இது சாத்தியமா? நடைபெறுமா? என்று கூறி தன்னை நம்பியுள்ள தனது ஆதரவாளர்களை திசை திருப்பி தக்கவைத்துக் கொள்ள முயலமாட்டார் என்பதற்கு என்ன உத்திரவாதம்? தனது ஆதிக்கத்தை நிலைநாட்ட எதையும் துணிந்து செய்யவும், அப்பட்டமான பொய்களைச் சொல்லவும், நான்கு பேருக்கு முன்னால் சொல்லப்பட்டதையே அந்த சாட்சிகள் மூலம் நிலை நாட்டப்படும், உண்மையாகக் கொள்ளப்படும் என்றிருக்க, அப்படி மார்க்கம் சொல்ல, மார்க்கக் கட்டளைக்கு முரணாக நூறு பேருக்கும் மேலதிகமாக உள்ளவர்களிடம் பகிரங்கமாக சொன்னவற்றையே, நான் அப்படிச் சொல்லவில்லை என்று துணிச்சலாக அல்லாஹ்மீது சத்தியமிட்டு "முபாஹலா" செய்தவருக்கு இது ஒரு பெரிய காரியமல்ல.

எனவே அதுபற்றிய தெளிவையும் இங்கு பதிய வைக்கிறோம்.

**மக்களிடமே பெரும்பான்மைக்கு மதிப்பு உண்டு, அல்லாஹ்விடம் அல்ல!**

இன்றைய நடைமுறையில் ஜனநாயகம் என்ற பெயரால் பெரும்பான்மை மக்களின் விருப்பம் ஏற்றுக் கொள்ளப்படலாம். அல்லாஹ்வின் பார்வையில் இந்த பெரும்பான்மைக்கு அணுவளவும் மதிப்

பில்லை. தனி நபராக இருந்த இப்றாஹீம்(அலை) அவர்களை "**உம்மத்தன் கானித்தன்**" - **முழுமையாக வழிபடும் சமுதாய மாகவே** அல்லாஹ் வர்ணிக்கிறான் (16:120). அன்றைய அரசனின் அனைத்து கொடுந் தண்டனைகளிலிருந்தும் அவர்களைக் காப்பாற்றி வெற்றியைக் கொடுத்தான் (பார்க்க 21:60-72). மூஸா(அலை) அவர்களுக்கு அன்றைய எகிப்தின் மன்னனான ஃபிர்அவ்னுக்கு எதிராக வெற்றியைக் கொடுத்தான்.

**நபி(ஸல்) அவர்கள் நமக்கு முன்மாதிரி!**

இறுதி நபி முஹம்மது(ஸல்) அவர்கள் சத்தியத்தை-நேர்வழியை நிலைநாட்ட எடுத்துக் கொண்ட கடும் முயற்சியையும், அதனால் அனுபவித்த கடுந்துன்பங்களையும் நினைத்துப் பாருங்கள். அன்று நபி(ஸல்) அவர்களுக்குப் பின்னால் புடம் போட்ட தங்கங்களாக-உண்மை முஸ்லிம்களாக அணி வகுத்தவர்கள், இப்றாஹீம்(அலை) அவர்களின் சந்ததிகளில் மிகமிக மிகச் சொற்பமானவர்களே. அல்லாஹ் யாருக்கு வெற்றியைக் கொடுத்தான். பதுருடைய, உஹத் துடைய, இன்னும் பல தற்காப்புப் போர்களில் எதிரிப் படையினரோடு, முஸ்லிம் படையினரை ஒப்பிடும்போது முஸ்லிம்கள் மிகமிகக் குறைந்த எண்ணிக்கையினரே! இறுதி வெற்றி யாருக்குக் கிடைத்தது?

**நபி(ஸல்) அவர்களின் சொல்லை புறந்தள்ளியபோது முஸ்லிம்களுக்கு தோல்வி முகம்!**

உஹது யுத்த களத்தில் சில முஸ்லிம்களை ஒரு கணவாயில் நிற்குமாறும், முஸ்லிம்களுக்கு வெற்றி கிடைத்தாலும், அப்படையினர் அக்கணவாயை விட்டு அகலக் கூடாது என்றும் நபி(ஸல்) கட்டளை யிட்டிருந்தார்கள். ஆனால் அந்த உத்தரவுக்கு மாறாக எதிரிப் படையினர் தோல்வியுற்று புறமுதுகிட்டு ஓடும்போது, அங்கு நிறுத்தப்பட்டவர்களில் ஒரு சிலரைத் தவிர மற்றவர்கள் அங்கிருந்து இறங்கி வந்தனர்.

அதன் விளைவு புறமுதுகிட்டு ஓடியவர்களில் சிலர் அந்தக் கணவாய் வழியாக வந்து முஸ்லிம்களை மீண்டும் தாக்கத் தொடங்கினர். இப்போது முஸ்லிம்கள் தங்களின் முன்னும் பின்னும் குறைஷ் படையினரால் சூழப்பட்டு தாக்கப்பட்டதால் பெரும் இழப்புக்கு

ஆளாயினர். நபி(ஸல்) அவர்களும் கடும் துன்பத்திற்கு ஆளாயினர். அவர்களின் முகத்தில் கடுமையான காயம் ஏற்பட்டது. ஒரு பல்லும் உடைந்தது. 70 நபி தோழர்கள் ஷஹீதானார்கள். இவ்வளவு பெரிய இழப்புக்குக் காரணம் இறைத்தூதரின் கட்டளையை சில நபிதோழர் கள் லேசாக நினைத்துப் புறக்கணித்ததேயாகும்.

### இறைத் தூதரின் கட்டளையைப் புறக்கணித்தால் பெருந்துன்பம் ஏற்படும்!

இன்றும் முஸ்லிம்கள் பெருந்துன்பங்களுக்கும், இழிவுகளுக்கும், மற்றவர்களால் எள்ளி நகையாடப்படுவதற்கும் முக்கிய காரணம், இறைத் தூதரின் பல நேரடிக் கட்டளைகளுக்குச் சுய விளக்கங்கள் கொடுத்து அவற்றைப் புறக்கணிப்பதேயாகும்.

### பெரும்பான்மை எண்ணம் தோல்வியைத் தரும்!

அதே போல் முஸ்லிம்கள் நாங்கள் பெரும்பான்மையினராக இருக்கிறோம். யாரும் எங்களை எதுவும் செய்ய முடியாது என்று இறு மாப்புக் கொண்டால் அதுவும் அவர்களுக்குக் கேடாகவே முடியும். இது பற்றி அல்குர்ஆன் அத்தவ்பா 9:25, 26, 27 கூறுவதைப் பாருங்கள்.

**நிச்சயமாக அல்லாஹ் உங்களுக்குப் பல போர்க்களங்களில் உதவி செய்திருக்கிறான். ஆனால் ஹுனைன் (போர் நடந்த) அன்று, உங்களைப் பெருமகிழ்ச்சி கொள்ளச் செய்த உங்களு டைய அதிகமான (மக்கள்) தொகை உங்களுக்கு எவ்விதப் பலனும் அளிக்கவில்லை. பரந்த பூமி உங்களுக்கு (அப்போது) சுருங்கி விட்டது. அன்றியும் நீங்கள் புறங்காட்டிப் பின்வாங்கலானீர்கள்.** (9:25)

**பின்னர், அல்லாஹ் தன்னுடை தூதர் மீதும், நம்பிக்கையாளர் (முஃமின்)கள் மீதும் தன்னுடைய சாந்தியை இறக்கியருளினான்; நீங்கள் பார்க்க முடியாப் படைகளையும் இறக்கி வைத்தான். நிராகரிப்போரை வேதனைக்குள்ளாக்கினான். இன்னும் இதுவே நிராகரிப்போரின் கூலியாகும்.** (9:26)

**அல்லாஹ் இதற்குப் பின்னர், தான் நாடியவருக்கு(அவர் மனந்திருந்தி மன்னிப்புக் கோரினால்) மன்னிப்பளிக்கிறான்.**

**அல்லாஹ் மிக்க மன்னிப்பவனாகவும், கிருபை செய்பவனாகவும் இருக்கிறான்.** (9:27)

இந்த இறைவாக்குகளை இறையுணர்வுடன் படித்து படிப்பினை பெறுவோர், ஒருபோதும் எண்ணிக்கையை–பெரும்பான்மையை பெரியதொரு பலமாக எண்ணவே மாட்டார்கள்.

இப்போது சிந்தியுங்கள்! சமுதாயத்தைப் பிளவுபடுத்தி ஆளுக்கொரு இயக்கத்தை அமைத்துக் கொண்டு, கோணல் வழிகளில் செல்பவர்கள், அந்த இயக்கங்களில் சேரும் மக்கள் எண்ணிக்கையைக் கொண்டு பெருமைப்படுகிறவர்கள், எந்த அளவு வழிகேட்டில், அல்லாஹ்வின் உதவியற்ற நிலையில் இருக்கிறார்கள் என்பதை அறிந்து கொள்ள முடியும். அவர்களுக்கு அவர்களது விருப்பப்படியே அல்லாஹ் 17:18–ல் கூறியுள்ளபடி இவ்வுலகில் அனைத்தையும் தாராளமாகக் கொடுத்து விடுவான்; ஆனால் மறுமையிலோ நரகம் தான்; அதில் அவர்கள் பழிக்கப்பட்டவர்களாகவும், சபிக்கப்பட்டவர்களாகவும் நுழைவார்கள் என்ற இறைவனின் எச்சரிக்கை அவர்களை உணர்வு பெறச் செய்யும் என்பது ஐயத்திற்குரியதே. அவர்கள் பின்னால் செல்லும் சகோதர, சகோதரிகளே சிந்திந்து விழிப்புணர்வு பெற வேண்டும். அல்லாஹ் உதவி செய்வானாக.

### பெரும்பான்மையினர் தோல்வியை தழுவுவார்கள்!

மேலே எடுத்தெழுதியுள்ள அல்குர்ஆனின் இறைவாக்குகள் அனைத்தையும் முறையாகப் படித்து உணர்கிறவர்கள், பெரும்பான்மையினருக்கு அல்லாஹ்விடம் எவ்வித மதிப்பும் இல்லை; அவர்களின் பெரும்பான்மை மகிழ்ச்சி அல்லாஹ்வின் உதவியைப் பெற்றுத் தராது. அவர்கள் பெருந்தோல்வியையே தழுவுவார்கள் என்பதை உள்ளங்கை நெல்லிக் கனியாக விளங்கிக் கொள்ள முடியும்.

### நேர்வழி நடப்பவர்கள் மிகச் சிறுபான்மையினராக இருந்தாலும் அவர்களுக்கே முழு வெற்றி!

அல்லாஹ்வுடைய தர்பாரில் நமது எண்ணிக்கை அளவுகோல் அல்ல; அல்லாஹ்விடமே முழுமையாக நம்பிக்கை வைக்க வேண்டும். அவனுக்கு மட்டுமே அடிபணிய வேண்டும்; அவனது கட்டளைகளில்

வஞ்சக புரோகித மவ்லவிகளின் சுய விளக்கங்களைப் புகுத்தாமல் உள்ளது உள்ளபடி அவற்றைச் செயல்படுத்த வேண்டும். அதே போல் நபியின் கட்டளைகள் ஆதாரபூர்வமான ஹதீஸ்களில் கிடைக்கும்போது, அவற்றில் நமது வாதத்திறமையைக் காட்டி, அல்லது மவ்லவி(?) புரோகிதர்களின் சுய விளக்கங்களை ஏற்று அவற்றை நிராகரிக்காமல், அவற்றில் கூறியவற்றை நேரடியாக உள்ளது உள்ளபடி பின்பற்ற வேண்டும். நபி(ஸல்) அவர்களின் மரணத்திற்குப் பின்னர் மார்க்கத்தில் ஓர் அணுவளவும் கூட்டவோ குறைக்கவோ முடியாது என்று நேரடியாகக் கூறும் 5:3, 7:3, 3:19, 85, 33:36, 66,67,68, 59:7 இறைக் கட்டளைகளுக்கு அப்படியே முற்றிலும் கட்டுப்பட்டு நடப்பதோடு, ஐங்கால தொழுகைகளை அதனதன் நேரத்தில் பேணித் தொழ வேண்டும். உள்ளூரிலிருக்கும்போது (முகீம்) ஜமாஅத்தையும் விடாது பேணித் தொழ வேண்டும். பஜ்ர் தொழுகையை தூக்கத்தில் கோட்டை விட்டுவிட்டு, சூரிய உதயத்திற்குப் பின் தொழும் தவ்ஹீத் மவ்லவி(?)யின் சுய விளக்கப்படியுள்ள தவறான நடைமுறையைக் கைவிட வேண்டும்.

போர் கடுமையாக நடக்கும் யுத்த களத்தில் கூட நபி தோழர்கள் தொழுகையை விடாது பேணித் தொழுதது நாம் கவனத்தில் கொள்ள வேண்டிய முக்கிய அம்சமாகும்.

மார்க்கக் கடமைகள் அனைத்தையும் முறையாகக் கடைபிடிக்க வேண்டும். மார்க்கம் தடுத்துள்ள பொய், புறம், அவதூறு, கோள், பொய்ச் சத்தியம் இவற்றைக் கண்டிப்பாகத் தவிர்க்க வேண்டும். பொய்ச் சத்தியமிட்டு முபாஹலா செய்யும் கீழ்மதி கூடாது. இப்படி அல்லாஹ்வுக்கு முற்றிலுமாகக் கட்டுப்பட்டு நடப்பவர்கள் சுமார் 600 கோடி மக்கள் தொகையுள்ள இவ்வுலகில் சுமார் சில ஆயிரம் பேரானாலும் அல்குர்ஆனைப் பற்றிப் பிடித்து செயல்பட முன்வந்து விட்டால், இவ்வுலகின் போக்கையே மாற்றியமைக்க அல்லாஹ்வின் உதவி நிச்சயம் கிடைக்கும். இது அல்லாஹ்வின் உறுதியான வாக்குறுதி. (பார்க்க 24:55, 3:139)

**ஆத்திகர்களின் கடவுள் கொள்கை!**

இறைவன் இருக்கிறான் என்று ஏற்றுக் கொள்ளும் ஆத்திகர்கள் அனைவரும் இறைவன் ஒருவனே என்பதை ஒப்புக் கொள்ளவே செய்கிறார்கள். ஆனால் அவர்கள் செய்யும் தவறு என்ன தெரியுமா? அந்த ஒரே இறைவனை பாவிகளான நாம் நேரடியாக நெருங்க

முடியாது. துணைக் கடவுள்கள், குட்டி தெய்வங்கள் மூலமே, அவற்றின் பரிந்துரை மூலமே அந்த ஒரே இறைவனை அடைய முடியும் என்ற மூட நம்பிக்கையின் காரணமாகவே பல குட்டிக் கடவுள்களுக்கு வழிபாடு செய்து வருகிறார்கள்.

### மூட நம்பிக்கைக்கு காரணகர்த்தா யார்?

இந்த மூட நம்பிக்கையை வளர்ப்பவர்கள் யார்? சாட்சாத் நயவஞ்சக புரோகிதர்களே! ஏன் துணைக் கடவுள்களை இழுக்கிறார்கள்? அப் போதுதான் அந்த ஒரே இறைவனுக்கும் அடியானுக்கும் இடையில் இடைத் தரகர்களாக-புரோகிதர்களாகத் திருட்டுத்தனமாகப் புகுந்து கொண்டு மக்களை ஆட்டிப் படைப்பதோடு வயிறு வளர்க்கலாம்; உலக ஆதாயம் அடையலாம்.

இப்படித்தான், தூய்மையாக, நேரடியாக இறைவனுக்கு வழிபட வேண்டிய மனித சமுதாயம், இந்த வஞ்சகப் புரோகிதர்களின் கரங் களில் சிக்கி சீரழிந்து இறுதியில் நரகம் புகுகிறது.

### புரோகிதர்கள் கடவுளின் பெயராலேயே ஏமாற்றுகிறார்கள்!

ஆதி மனிதர் ஆதத்தின் காலத்திலிருந்து, இந்த வஞ்சகப் புரோகித ர்கள் கடவுளின் பெயரைச் சொல்லியே மக்களை ஏமாற்றி வழி கெடுத்து வருகிறார்கள். இறைவன் சொன்னதாக, இறைத் தூதர்கள் சொன்ன தாகவே சொல்லி மக்களை ஏமாற்றி வருகிறார்கள். மக்களும் கண்மூடித் தனமாக இந்த வஞ்சகப் புரோகிதர்களை நம்பி அவர்கள் சொல்வதை அப்படியே செய்து வருகிறார்கள்.

### ஷைத்தானும் துணை புரிகிறான்!

ஆதத்தின் சந்ததிகளை வழி கெடுத்து நரகில் தள்ள சபதம் ஏற்றுள்ள ஷைத்தானும் இந்த வஞ்சகப் புரகிதர்களுக்குத் துணையாக இருப்பதால், அவர்களால் மக்களை எளிதாக ஏமாற்றி வழி கெடுக்க முடிகிறது; நரகில் கொண்டு தள்ள முடிகிறது.

எந்த மதத்திலுள்ள எந்த மனிதனும் தான் இறைவனுக்கு மாறு செய்வதாகவோ, இறைத் தூதருக்கு மாறு செய்வதாகவோ கனவிலும் நினைப்பதில்லை. தான் இப் புரோகிதர்கள் வழிகாட்டுகிற படி செய்வது தான் இறைவனுக்குப் பிரியமானது; இறைத்தூதர் காட்டித் தந்தது என்று முழுமையாக நம்பியே வழிபாடுகள் என்ற பெயரால்

வழிகேடுகளைச் செய்து வருகிறான். இப்படி மனிதர்களை நம்பச் செய்த பெருமை இந்த நயவஞ்சக புரோகிதர்களையே சாரும்.

**இப்றாஹீம்(அலை) சந்ததிகளான குறைஷ்கள்!**

இறுதி நபி முஹம்மது(ஸல்) அவர்கள் 1450 ஆண்டுகளுக்கு முன்னர் அரபு நாட்டில் பிறந்தபோது, அரபு நாட்டிலுள்ள குறைஷ்கள் ஒரே இறைவனான அல்லாஹ்வை ஏற்றிருந்தார்கள்; தொழுதார்கள்; நோன்பு வைத்தார்கள், தான தர்மம் செய்தார்கள்; ஹஜ் செய்தார்கள்; ஹாஜிகளுக்கு நீர் புகட்டினார்கள்; மற்றும் பலவித உதவிகளைச் செய்து கொண்டுதான் இருந்தார்கள். இவை அனைத்தையும் தாருந்நத்வா புரோகிதர்கள் காட்டியபடி செய்தனர்.

**இவை அனைத்தும் அல்லாஹ்வின் கட்டளை என்றே செய்தார்கள்!**

இவை அனைத்தும் அல்லாஹ்வின் கட்டளைப்படி, இப்றாஹீம் (அலை) இஸ்மாயீல்(அலை) செய்து வழிகாட்டிய நற்செயல்கள் என்ற நம்பிக்கையிலேயே அவற்றைச் செய்து வந்தனர். அந்த சத்திய போதனைகளைத்தான் அவர்கள் நம்பி இருந்த தாருந் நத்வா புரோகிதர்கள் போதிப்பதாக நம்பினர்.

**இறுதித் தூதரை ஏன் நிராகரித்தார்கள்?**

இந்த நிலையில் நபி(ஸல்) அவர்களின் 40வது வயதில், அல்லாஹ் அவர்களை இறுதி நபியாகத் தேர்ந்தெடுத்து, வஹீ மூலம் நேர் வழியைத் தெளிவுபடுத்தி, அதை மக்களுக்கு அறிவிக்கக் கட்டளை யிட்டான். இறைவனது கட்டளைகளுக்கு நேர்முரணானவற்றை, தொழு கையை, நோன்பை, ஹஜ்ஜை, நேர்ச்சைகளை, தான தர்மங்களை தவறான வழிகளில் இறை வழிபாடுகளாக குறைஷ்கள் செய்து வந்ததை சுட்டிக் காட்டும் கட்டாயம் ஏற்பட்டது. அப்போதுதான் குறைஷ்கள் வெகுண்டெழுந்தார்கள். காரணம் நீண்ட காலமாக, இப்றாஹீம்(அலை) அல்லாஹ்வின் கட்டளைப்படி போதித்த வழிபாடு களாக நம்பிச் செயல்பட்டு வந்தவற்றை, இந்த முஹம்மது வழிகேடுகள் என்று சொல்கிறாரே என்றே ஆத்திரப்பட்டார்கள்.

**உண்மை நிலை என்ன?**

ஆனால் அந்த குறைஷ்கள் எண்ணியது உண்மையல்ல. அவர்

களது வழிபாடுகள் உண்மையில், அல்லாஹ் இப்றாஹீம்(அலை) அவர்களுக்கு வழிகாட்டி, அதன்படி அவர்கள் செய்து வந்த நற்கருமங்கள் அல்ல.

இப்றாஹீம்(அலை) இஸ்மாயீல்(அலை) அவர்களுக்குப் பிறகு, அந்த அரபு சமூகத்தில் திருட்டுத்தனமாக, நயவஞ்சகமாகப் புகுந்து கொண்ட புரோகிதர்கள், தங்களின் அற்ப உலக ஆதாயத்திற்காக, அல்லாஹ் சொல்லாததை அல்லாஹ் சொன்னதாகவும், இப்றாஹீம் (அலை) இஸ்மாயீல்(அலை) சொல்லாததை எல்லாம் அவ்விருவரும் சொன்னதாகவும் பொய்யாகச் சொல்லி, அந்த மக்களை நம்ப வைத்திருந்ததால், அந்த நம்பிக்கில் நபி(ஸல்) அவர்களின் உண்மையான நற்போதனைகளை ஏற்க மறுத்து, அவர்களைத் துன்புறுத்தினார்கள்; ஊர் ஒதுக்கி வைத்தார்கள்; கொலை செய்ய சதித் திட்டம் தீட்டினார்கள்; இறுதியில் ஊரைவிட்டே விரட்டியடித்தார்கள்.

### மூலகர்த்தா யார்?

இந்தக் கொடுமைகள் அனைத்திற்கும் மூலகர்த்தா யார்? இந்த நயவஞ்சகப் புரோகிதர்கள்தான் என்பதில் யாருக்கும் சந்தேகம் இருக்க முடியுமா? இறுதியில் நபி(ஸல்) அவர்களின் கடுமையான உழைப்பிற்கு பின்னராவது இப்றாஹீம்(அலை) அவர்களின் இஸ்லாம் மார்க்கத்தின் படி நடப்பதாக நம்பிக் கொண்டிருந்த அனைவரும் உண்மை முஸ்லிம்கள் ஆனார்களா? அதுதான் இல்லை; இப்றாஹீம்(அலை) அவர்களின் சந்ததிகளில் மிகமிக சொற்பமானவர்களே இறுதி நபியின் போதனையை ஏற்று உண்மை முஸ்லிம்களாக ஆனார்கள்.

### அவர்களையே அல்லாஹ் பொருந்திக் கொண்டான்!

நபி(ஸல்) அவர்களுக்குப் பின்னால் அணிவகுத்தவர்கள், அல்லாஹ்வுக்கு முற்றிலும் கட்டுப்பட்டவர்களாக, புடம் போட்ட தங்கங்களாக, நபி(ஸல்) அவர்களின் அடிச்சுவற்றை அப்படியே பின்பற்றுகிறவர்களாக ஆகிவிட்டதால், அல்லாஹ் அவர்கள் மிகச் சிறுபான்மையினராக இருந்தும் ஆட்சி அதிகாரத்தைக் கொடுத்தான்; பயத்தையும், துக்கத்தையும் போக்கி மன அமைதியையும், தைரியத்தையும் கொடுத்தான். ஆதத்தின் சந்ததிகளிலேயே மிக உன்னதமானவர்களாக ஆக்கினான். (பார்க்க 24:55)

### வழிகாட்டிகள், நடுநிலையாளர்கள், சாட்சியாளர்கள்!

உலக மக்களுக்கு வழிகாட்டிகளாகவும், நடுநிலையாளர்களாகவும்

(2:143), மறுமையில் மற்ற மக்களுக்குச் சாட்சி சொல்பவர்களாகவும் (22:78), முஸ்லிம்கள் உயர்ந்தார்கள். அல்குர்ஆனை நேரடியாகப் படித்து சிந்தித்து, விளங்கிச் செயல்பட்டதால் உலகின் அனைத்துறை களிலும் ஜெக ஜோதியாக ஜொலித்தார்கள்.

### மருத்துவ, விஞ்ஞான கண்டு பிடிப்பார்கள்!

மருத்துவத்துறை, விஞ்ஞானத்துறை என அனைத்துத் துறை களிலும் புதிய, புதிய கண்டுபிடிப்புகளைக் கண்டுபிடித்து, உலக மக்களுக்குப் பெரும் சேவை செய்தார்கள். ஆச்சரியப்படத்தக்க நிலையில், உலகின் அனைத்துத் துறைகளிலும் அவர்களே முன்னோடி களாகத் திகழ்ந்தார்கள். கடல் கடந்த வணிகத்திற்கு முன்னோடிகளாகத் திகழ்ந்து, உலகமெங்கும் இஸ்லாத்தைப் பரப்பினார்கள்.

### ஷைத்தானுக்கு இது பொறுக்குமா?

ஷைத்தான் இதைச் சகித்துக் கொள்வானா? தனது புரோகிதப் பட்டாளத்துக்குச் சாவி கொடுத்துத் தூண்டிவிட்டான். மீண்டும் இந்த நயவஞ்சகப் புரோகிதர்கள் இந்த முஸ்லிம் சமுதாயத்தினுள் திருட்டுத் தனமாகப் புகுந்தார்கள். அவர்களின் வழமையான தந்திரங்களைக் கையாண்டு, அல்குர்ஆனில் ஒரு புள்ளியைக் கூட மாற்ற முடியா விட்டாலும் சுமார் 10 லட்சம் பொய்யான ஹதீஸ்களை இட்டுக் கட்டினார்கள். குர்ஆனுக்கு விரிவுரை (தஃப்ஸீர்) ஹதீஸ்களுக்கு (தஃப்ஸீர்) விரிவுரை என பொய்களையும், கற்பனை கட்டுக்கதை களையும், யூத, கிறிஸ்தவ புரோகிதர்களிடமிருந்த கட்டுக்கதைகளான இஸ்ராயிலியத்தைக் கொண்டும் நிரப்பினார்கள்.

### பிக்ஹு சட்டங்கள்!

அவற்றைக் கொண்டு பிக்ஹு சட்டங்கள் என்ற பெயரால் சமுதாயத்தைப் பல பிரிவுகளாக்கினார்கள். அல்லாஹ் அவனது தூதரைக் கொண்டு மிகமிக எளிதானதாக ஆக்கித் தந்த மார்க்கத்தை கடினமாக்கினார்கள். சாதாரண மக்கள் குர்ஆனை விளங்க முடியாது. ஹதீஸை விளங்கமுடியாது; மார்க்க சட்ட திட்டங்களை அறிய முடியாது என கதையளந்து, ஷைத்தானின் துணையுடன் மக்களையும் அவர் களின் நயவஞ்சக கூற்றுக்களை நம்பச் செய்தார்கள்.

**முஸ்லிம்கள் குர்ஆனை கைவிட்டார்கள்!**

இந்தப் புரோகிதர்களின் நயவஞ்சக, சுயநல கூற்றை நம்பி முஸ்லிம்கள் அல்குர்ஆனை நேரடியாகப் படித்து சிந்தித்து விளங்கு வதைக் கைவிட்டார்கள். ஹதீஸ்களைப் படித்து விளங்குவதைக் கைவிட்டார்கள். இந்த நயவஞ்சகப் புரோகிதர்கள் கற்பனையாக வடித்துத் தந்த பிக்ஹு சட்டங்களை கையிலெடுத்துக் கொண்டு பல மத்ஹபுகளாகப் பிரிந்து கேவலப்பட்டுப் போனார்கள்; இழிவுபட்டுப் போனார்கள்; இன்று முஸ்லிம் சமுதாயத்தை விட கேடுகெட்ட வேறு ஒரு சமுதாயம் இருப்பதாகத் தெரியவில்லை.

**எண்ணிக்கை பலம், பண பலம் பலன் தருகிறதா?**

150 கோடி மக்கள் என எண்ணிக்கைப் பலம் இருந்தும், பண பலம் இருந்தும், பெயர் அளவில் ஐம்பதுக்கும் மேற்பட்ட முஸ்லிம் நாடுகள் இருந்தும், முஸ்லிம்கள் இழிவுபட்டு, கேவலப்பட்டு, நிம்மதி இழந்து தவிக்கிறார்கள்.

**முகல்லிது புரோகிதர்களிலிருந்து வந்த தவ்ஹீத்(?) புரோகிதர்கள்!**

புரோகிதர்களிடமிருந்து முஸ்லிம் சமுதாயத்தை விடுவித்து, ஒவ்வொரு முஸ்லிம் ஆணும், பெண்ணும் குர்ஆனையும், ஹதீஸை யும், ஆரம்ப கால முஸ்லிம்கள் செய்தது போல், நேரடியாகப் படித்துச் சிந்தித்து செயல்பட வைக்க வேண்டும் என்ற நன்நோக்குடன் 1980களில் எமது முயற்சியை ஆரம்பித்தோம். 30.10.1984-ல் "மதங் களால் சமூகத்தில் ஏற்பட்ட சாதக பாதகங்கள்" என்ற தலைப்பில் கிறிஸ்தவ இறையியல் கல்லூரியில் நாம் நிகழ்த்திய உரை நூல் வடிவில் வெளி வந்தது. அதில் புரோகிதர்களின் தில்லுமுல்லுகள், ஆலிம்-அவாம் வேறுபாடு இல்லை; ஆலிம்களுக்கு மார்க்கத்தில் தனி அதிகாரம் இல்லை, மார்க்கப் பணிக்கு கூலி கூடாது என்றெல்லாம் தெளிவுபடுத்தி இருந்தோம்.

**புரோகித மவ்லவிகள் வந்து நுழைந்த நோக்கம்!**

அந்த நூலைப் படித்த சில மவ்லவிகள் நம்மை வெகுவாகப்

பாராட்டி, நம்மோடு இணைந்து புரோகித ஒழிப்பு முயற்சியில் தோள் கொடுப்பதாக முன் வந்தார்கள். நாமும் எதார்த்தமாக அவர்களை நம்பி வரவேற்றோம். ஆனால் அவர்கள் எமது முயற்சியை பலவீனப் படுத்தும் தீய எண்ணத்துடன் நம்மோடு வந்து இணைந்தனர் என்பது 1987 ஜனவரி முதல் வாரம் கேரளாவில் குட்டிபுரத்தில் இடம் பெற்ற முஜாஹித்கள் மாநாட்டில், அவர்கள் இணைந்து செய்த சதி ஆலோச னைகள் அம்பலப்படுத்தின.

**சதிச் செயல்கள் தோல்வி கண்டன!**

அதன் பின்னர் அவர்கள் தங்களின் சதித் திட்டத்தைச் செயல் படுத்த பெரும் முயற்சி எடுத்தனர். அனைத்திலும் தோல்வி கண்டு வேறு வழியின்றி நம்மை விட்டு வெளியேறினர். அவர்களின் சதிச் செயல்களின் முழு விபரத்தையும் 1993 மே அந்நஜாத் இதழுடன் இலவசமாக வெளியிட்ட “புரோகிதர்களைப் புரிந்து கொள்ளுங்கள்” என்ற 174பக்க நூலில் விரிவாக விவரித்திருக்கிறோம். விரும்புவோர் அதைப் பார்த்துக் கொள்ளலாம்.

அன்றிலிருந்து இன்று வரை எமது இந்த புரோகிதர் ஒழிப்பு முயற்சியை முறியடித்துவிட வேண்டும் என முழு மூச்சாகச் செயல்பட்டுக் கொண்டிருக்கின்றனர். சத்தியத்தைத் தங்களின் வாயால் ஊதி அணைத்து விடலாம் என பகல் கனவு காண்கின்றனர். ஏகப்பட்ட அவதூறுகளையும், அப்பட்டமான பொய்களையும் வாரி இறைத்துக் கொண்டிருக்கின்றனர். முடிவை அல்லாஹ்விடமே விட்டு விடுகிறோம்.

இப்படி ஒன்றுபட்ட இஸ்லாமிய இயக்கத்தில் இருக்க ஒப்புக் கொண்டு 1986-ல் நம்மோடு வந்து இணைந்த புரோகித மவ்லவிகள் 1987-ல் நம்மைவிட்டு வெளியேறி, 1988-ல் ‘ஜாக்’ இயக்கத்தை கற்பனை செய்தவர்கள், நாம் ஜாக்கிலிருந்து வெளியேறியதாக அவதூறு பரப்புகின்றனர்.

**தவ்ஹீத் மவ்லவி(?)களும் புரோகிதர்களே!**

தவ்ஹீத் மவ்லவி(?) களும் வஞ்சகப் புரோகிதர்களே என்பதை அவர் களின் நெறிகெட்ட செயல்பாடுகளே உறுதிப்படுத்துகின்றன.

நாம் முஸ்லிம்களைப் புரோகிதர்களின் பிடியிலிருந்து விடுவித்து அவர்களைச் சுயமாக குர்ஆனையும், ஹதீஸையும் நேரடியாகப்

படித்து, சிந்தித்து, விளங்கி அதன்படி நடக்கச் செய்ய வேண்டும் என்று பாடுபடுகிறோம். மனிதக் கருத்துக்களில் யாருடைய கருத்தாக இருந்தாலும், அது முன்னோர்களின் கருத்தாக இருந்தாலும், பின்னோர்களின் கருத்தாக இருந்தாலும் அது மார்க்கமாகாது என்று 5:3, 7:3, 33:36, 66,67,68, 59:7 இறைவாக்குகள் கூறுவதில் நாம் உறுதியாக இருக்கிறோம்.

**தவ்ஹீத்(?) மவ்லவியின் புதிய யுக்தி!**

தவ்ஹீத் மவ்லவி(?) யோ முன்னோர்களின் சுய விளக்கங்களை ஏற்கக் கூடாது; ஆனால் இப்போது நான் கூறும் சுய விளக்கத்தையே மார்க்க மாக ஏற்க வேண்டும் என்ற நோக்கில், தனது வசீகர சூன்யப் பேச்சைக் கொண்டு தனது ஆதரவாளர்களை ஏமாற்றி வருகிறார். குர்ஆன், ஹதீஸில் உள்ளதை, உள்ளபடி எவ்வித சுய கருத்தையும் புகுத்தாமல் எடுத்து நடக்க அவரும், அவரது ஆதரவாளர்களும் தயாராக இல்லை. பிரிவுப் பெயர்கள் கூடாது என்று கூறும் 3:103, 105, 6:153,159, 30:32, 42:13,14 இந்த இறைவாக்குகளுக்கு சுய விளக்கம் கொடுத்து தனது **ததஜ** பிரிவு இயக்கத்தை நியாயப்படுத்தி வருகிறார். 35:28, 58:11, 2:282, 35:19 போன்ற இறைவாக்குகளுக்கும், சில ஹதீஸ்களுக்கும் சுய விளக்கம் கொடுத்து ஆலிம்-அவாம் வேறுபாட்டை நியாயப்படுத்தி வருகிறார். இவரது வாதம் உண்மை என்றால் நபி(ஸல்) அவர்கள் இந்த இறைவாக்குகள் இறங்கிய உடனேயே தமது உம்மத்தை ஆலிம்-அவாம் என பிரித்து வேறுபடுத்திக் காட்டி நடைமுறைப்படுத்தியிருப்பார்கள். அல்லாஹ்வோ, அவனது தூதரோ காட்டித் தராத ஒன்றை மார்க்க மாக்குவது மாபெரும் வழிகேடு-பகிரங்கமான வழிகேடு என்று அல்குர் ஆன் 33:36 இறைவாக்கு கடுமையாக எச்சரித்துக் கொண்டிருப்ப தெல்லாம் இந்தப் புரோகித மவ்லவிகளை உணர்வு பெறச் செய்யாது. அந்த அளவு அவர்களது உள்ளங்கள் இறுகி கடினமாகிவிட்டன. அவர்கள் பின்னால் செல்லும் சகோதர, சகோதரிகள்தான் சுயமாக சிந்தித்துத் தெளிவுபெற முன் வரவேண்டும். முயற்சி செய்தால் நிச்சயம் அல்லாஹ் மார்க்கத்தைப் புரிந்து கொள்வதில் உதவி செய்து எளிதாக்குவான். இது இறைவனின் அல்குர்ஆன் அன்கபூத் 29:69 இறைவாக்கின் உத்திரவாதமாகும்.

**அன்றைய குறைஷ்களும் இன்றைய முஸ்லிம்களும்!**

அன்றைய குறைஷ்கள், தாருந்நத்வா புரோகிதர்களின் சுய

கற்பனைகளை, அல்லாஹ் கட்டளையிட்டு, நபி இப்றாஹீம்(அலை) நடைமுறைப்படுத்திய இஸ்லாமிய மார்க்கத்தைப் பின்பற்றுகிறோம் என்ற நம்பிக்கையில்தான் அவர்களின் வழிபாடுகள் இருந்தன. கலிமா, தொழுகை, நோன்பு, ஹஜ், தான தர்மம் இவை அனைத் தையும் இப்றாஹீம்(அலை) அவர்கள் காட்டிய முறைகள் என்ற நம்பிக் கையில் தான் செய்து வந்தார்கள்.

அல்லாஹ் முஹம்மது(ஸல்) அவர்களை நபியாகத் தேர்ந்தெடுத்து, அவர்கள் அல்லாஹ்வின் கட்டளைப்படி, நேரான வழிபாடுகளை அவர்கள் முன்னால் எடுத்து வைக்கும்போது அவை, குறைஷ்கள் அது காலம் வரை நபி இப்றாஹீம்(அலை) காட்டித் தந்ததாக நம்பிச் செய்து கொண்டிருந்த வழிபாடுகளுக்கு முரணாக இருக்கிறது என்ற நம்பிக்கை யில் நபி(ஸல்) அவர்களை எதிர்த்தார்கள். ஆனால் உண்மையில் இப்றாஹீம்(அலை) அவர்கள் போதித்த அசலான நேரான வழிபாடு களைத்தான் நபி(ஸல்) போதித்தார்கள். அப்படியானால் குழப்பம் எங்கே ஏற்படுகிறது?

**இதுதான் நயவஞ்சக புரோகிதர்களின் சாகஸம் !**

இதற்கு என்ன காரணம் தெரியுமா? அன்றைய நயவஞ்சகப் புரோ கிதர்கள் குறைஷ்களின் கலிமா, தொழுகை, நோன்பு, ஹஜ், ஜகாத், தானதர்மம் போன்ற வழிபாடுகளில் ஷைத்தானுடைய உதவியுடன் நபி இப்றாஹீம்(அலை) போதித்தவைகளுக்கு முரணானவற்றை இப்றா ஹீம்(அலை) அவர்களின் போதனைதான் என்று நம்பச் செய்து குறைஷ்களை வழிகேட்டில் இட்டுச் சென்றிருந்தார்கள். அவர்களை மீண்டும் நேர்வழிக்குக் கொண்டுவர நபி(ஸல்) பெரும்பாடு பட வேண்டியதாயிற்று.

**இன்றைய முஸ்லிம் புரோகிதர்களின் அதே சாகசம்!**

இதே போல் இன்று முஸ்லிம்களிடையே நயவஞ்சகமாக, திருட்டுத் தனமாக புகுந்துள்ள புரோகிதர்கள், முஸ்லிம்களின் கலிமா, தொழுகை, ஜகாத், நோன்பு, ஹஜ் மற்றும் வழிபாடுகளில், அல்லாஹ் வின் கட்டளைப்படி, நபி(ஸல்) அவர்களின் நடைமுறைகளைத்தான் போதிக்கிறோம் என்று பொய்யாகக் கூறிக்கொண்டு, இந்த வழிபாடு களில் இவர்கள் நம்பிக்கை வைத்துள்ள முன்னோர்களான புரோகிதர்

களின் கற்பனைகளைப் புகுத்தி முஸ்லிம்களை வழிகேட்டில் இழுத்துச் செல்கிறார்கள்.

இந்த அடிப்படையில்தான் ஹனஃபிகளுக்கு ஒரு பிக்ஹு சட்டம், மாலிக்களுக்கு ஒரு பிக்ஹு சட்டம், ஷாஃபிகளுக்கு ஒரு பிக்ஹு சட்டம், ஹன்பலிக்கு ஒரு பிக்ஹு சட்டம் என முஸ்லிம்களை மத்ஹபுகளின் பெயரால் பிளவுபடுத்தி, இந்தப் புரோகிதர்கள் ஆதிக்கம் செலுத்தி வருகிறார்கள். ஆனால் இந்த மத்ஹபுகளுக்கும் மரியாதைக்குரிய அந்த நான்கு இமாம்களுக்கம் கடுகளவும் சம்பந்தமே இல்லை என்பதை முன் பக்கங்களில் உரிய ஆதாரங்களுடன் விளக்கி இருக்கிறோம்.

அன்று இப்றாஹீம்(அலை) அவர்களின் இஸ்லாம் மார்க்கத்தைப் பின்பற்றிய முஸ்லிம்கள்(குறைஷ்கள்) எப்படி அன்றைய வஞ்சகப் புரோகிதர்களால் (தாருந்நத்வாவினர்) வழிகேட்டில் இழுத்துச் செல்லப் பட்டார்களோ, அதே போல் இன்று முஹம்மது(ஸல்) அவர்களின் இஸ்லாம் மார்க்கத்தைப் பின்பற்றும் முஸ்லிம்களை இன்றைய வஞ்சக புரோகித மவ்லவிகள் வழிகேட்டில் இழுத்துச் செல்கிறார்கள், இவர்கள் முன்னோர்களின் பெயரால் மக்களை வழிகெடுக்கிறார்கள்.

**நவீன வஞ்சகப் புரோகிதர்கள்!**

முகல்லிது புரோகிதர்கள் முன்னோர்களின் கற்பனைகளைக் கொண்டு முஸ்லிம்களை வழிகெடுக்கிறார்கள். நாங்கள் முன்னோர் களைப் பின்பற்றவில்லை. நேரடியாக குர்ஆன், ஹதீஸை பின்பற்று கிறோம் என்று பொய்யாகக் கூறிக் கொண்டு, தவ்ஹீத் மவ்லவி(?) புரோகிதர்கள் முஸ்லிம்களை வழிகெடுக்கப் புறப்பட்டிருக்கிறார்கள். இவர்களைப் பற்றித்தான் நபி(ஸல்) மிகக் கடுமையாக எச்சரித்திருக்கி றார்கள். பல ஹதீஸ் நூல்களில் காணப்படும் அந்த ஹதீஸில் காணப்படும் அந்தப் பகுதி வருமாறு:

**நபி(ஸல்):** (சிலரால்) நரகத்தின் வாயிலுக்கு அழைப்பு விடுக்கப்படும்; எவர்கள் அந்த அழைப்பை ஏற்கிறார்களோ அவர்கள் அதில்(நரகத்தில்) எறியப்படுவார்கள்.

**ஹுதைஃபா(ரழி) :** அவர்களைப் பற்றி(எனக்கு) விளக்குவீர்களாக!

**நபி(ஸல்) :** அவர்கள் நம்மைச் சார்ந்தவர்களாகவும், நாம் பேசுவதையே பேசுபவர்களாகவும் இருப்பார்கள்.

ஹதீஸின் இந்தப் பகுதியை ஆழ்ந்து சிந்தித்துப் பாருங்கள்.

நாங்கள்தான் நேர்வழியில் இருக்கிறோம், குர்ஆன், ஹதீஸ்படி நடக்கிறோம் என்று நாவினால் கூறிக் கொண்டு, செயல்பாடுகளில் தங்களின் சுய விளக்கங்களைக் கொடுத்து குர்ஆன், ஹதீஸை புறக் கணிப்பவர்கள்-நிராகரிப்பவர்கள், நபி(ஸல்) அவர்களின் இந்த கடுமையான எச்சரிக்கைக்கு ஆளாவார்களா? இல்லையா? சிந்தித்துப் பாருங்கள். முகல்லிது புரோகிதர்கள் ஹனஃபி தொழுகை, ஷாஃபி தொழுகை, மாலிக்கி தொழுகை, ஹன்பலி தொழுகை என முஸ்லிம் களை வழிகேட்டில் இழுத்துச் செல்கிறார்கள். தவ்ஹீது(?) புரோகிதர் களோ ஜாக் தொழுகை, ததஜ தொழுகை, முஜாஹித் தொழுகை, அஹ்ல ஹதீஸ் தொழுகை, ஸலஃபி தொழுகை என முஸ்லிம்களை வழிகேட்டில் இழுத்துச் செல்கிறார்கள். புரோகிதர்கள் அனைவருமே நபி வழித்தொழுகை என்று சொல்வதோடு சரி. மத்ஹபினரும் இப்போது நபி வழித் தொழுகை என்றுதான் சொல்கிறார்கள். ஆனால் அவர்கள் பழைய மத்ஹபுகளை செயலில் நிலை நாட்டினால், இவர்கள் புதிய மத்ஹபுகளை செயலில் நிலைநாட்டி வருகின்றனர்.

**காரணம் என்ன?**

நாம் எமது இந்த ஆக்கத்தில் பல இடங்களில் தவ்ஹீத் மவ்ல வியை(?) மிகக் கடுமையாக தாக்கி எழுதியுள்ளதை பலர் ஆட்சேபிக் கலாம். நமக்கு அவர்மீது சொந்த குரோதம் இருப்பதாகக் குற்றப் படுத்தலாம். ஆனால் உண்மை அதுவல்ல.

1984-ல் கிறிஸ்தவ குரு குல மடத்தில் ''மதங்களால் சமூகத்தில் ஏற்பட்டுள்ள சாதக பாதகங்கள்'' என்ற தலைப்பில் ஆற்றிய உரை தனி நூலாக வெளிவந்து, அதைப் பார்த்தே இந்த தவ்ஹீத் மவ்லவி(?) எம்முடன் தொடர்பு கொண்டார். அப்போது அவர் மத்ஹபில் மூழ்கி இருந்தார். ஆயினும் எமது அந்த உரையைப் பாராட்டினார். அதிலேயே புரோகித ஒழிப்புப் பற்றி எழுதியுள்ளோம். அதைச் சரிகண்டு, ஏற்றுக் கொண்டே எம்முடன் இணைந்து அந்நஜாத்தில் பணி புரிய முன் வந்தார்.

''**இஸ்லாம் அல்லாத இயக்கம் எங்களுக்கில்லை**'', ''**நாங்கள்**

**புரோகிதர்களைச் சப்ளை செய்வதில்லை**'' என்று அவரே அந்நஜாத்தில் எழுதியது அதற்குப் போதிய சான்றாகும். இப்படி நேர்வழியை ஒப்புக் கொண்டு வந்தவர், கூட்டம் சேர ஆரம்பித்தவுடன், பிரிவு **ஜாக்** இயக்கத்தின் பேரால் வெளியேறியதோடு, எம்மைப்பற்றி அமானித மோசடி, நம்பிக்கைத் துரோகம் என்றெல்லாம் அவரது குற்றச் செயல்களை (4:112) எம்மீது சுமத்தி அவதூறு பரப்பினார். அந்நஜாத் நின்றுவிட்டது; அதற்குப் பதிலாகத்தான் புரட்சி மின்னல், அல்ஜன்னத் வருகிறது என்று அன்றும், ஏகத்துவம் வருகிறது என்று இன்றும் கூறி, அந்நஜாத்தை மக்கள் படிக்க விடாமல் தடுத்தார்; இன்றுவரைத் தடுத்துக் கொண்டிருக்கிறார். அதாவது சத்தியம்-நேர்வழி மக்களிடம் போய்ச் சேரக் கூடாது என்பதில் மிகக் குறியாக இருக்கிறார்.

அவரது வழிகேட்டு முயற்சியால், நான்கு மத்ஹபுகளை விட்டு வெளியேறி, குர்ஆன், ஹதீஸ்படி நடக்க ஒப்புக் கொண்டு வந்த சகோதர, சகோதரிகளை இன்று பல இயக்கப் பிரிவினர்களாக ஆக்கி விட்டார். நான்கு மத்ஹபுகளிலுள்ளவர்கள், இவர் உண்டாக்கிய புதிய ஏழு இயக்க மத்ஹபுகளைச் சுட்டிக் காட்டி, அவர்களின் மத்ஹபு வழி கேட்டை நியாயப்படுத்த பாதை அமைத்துக் கொடுத்தார். **ஜாக்** பள்ளிகளைக் கைப்பற்ற அடிதடி, வழக்கு வம்பு, லஞ்சம் என மத்ஹபு புரோகிதர்களைவிட கேடுகெட்டவராகிவிட்டார்.

அவருக்கு ஆதாயம் எனும்போது ஒருவரை ஆகா ஓகோ என எல்லை மீறி புகழ்வது; அவரைக் கொண்டு தனது விருப்பம் நிறைவேறாதபோது அதே நபரை எல்லை மீறி ஆக இழிவான பொய்ச் செய்திகளைக் கொண்டு அவதூறுகள் பரப்புவது, அவரின் மிகவும் இழிவான குணமாக இருக்கிறது. அந்த வகையில் கணக்கற்றோர் அவரால் எல்லைமீறி ஏற்றிப் போற்றப்பட்டு, பின்னர் அவரது காலுக்குக் கீழ் போட்டு மிதிக்கப் படுவதுபோல் அவதூறுகள் அள்ளி இறைக்கப் பட்டவர்கள்.

ஒரு ஆசிரியரிடம் பாடம் பயின்ற நூறு பேரில், சுமார் பத்து பேர் பரீட்சையில் தோல்வியுற்றால் அதை மாணவர்களிடம் உள்ள கோளாறு -குறைபாடு என்போம். அதே சமயம் நூறு பேரில் தொண்ணூறு பேர் தோல்வியுற்று பத்து பேர் மட்டும் வெற்றி பெற்றால், அதற்கு பாடம் படித்துக் கொடுத்த ஆசிரியரின் கோளாறு-குறைபாடு என்றே சொல்வோம்.

அது போல் தவ்ஹீத்(?) மவ்லவியிடம் நெருங்கிப் பழகி, படுத்து உருண்டவர்களில், அவரால் ஆகா, ஓகோ என எல்லை மீறி புகழப் பட்ட நூறு பேரில் சுமார் பத்து பேரைப்பற்றி தவ்ஹீது மவ்லவி(?) குற்றம் குறை சொன்னால் அதில் உண்மை இருக்க வாய்ப்பு உண்டு. ஆனால் அதற்கு மாறாக தொண்ணூறு பேரைப்பரற்றி குற்றம் குறை சொன்னால், அவதூறு பரப்பினால், குற்றவாளி தவ்ஹீத் மவ்லவியா? அவதூறுகள் சுமத்தப்பட்டவர்களா? சிந்தியுங்கள்.

மத்ஹபுகளிலிருந்து விடுபட்டு குர்ஆன், ஹதீஸை பின்பற்றி ஒன்றுபட்டு நடக்க முன் வந்தவர்களிடையே பிளவுக்கும், பிரிவுக்கும் இவரே முழு முதல் காரணகர்த்தா. இவரது சூன்யப் பேச்சில் கட்டுண்டு மயங்கிக் கிடப்போர் வழிகேட்டில் சென்று நரகில் விழக் காத்திருப்போர் கணிசமானோர். எனவே அவரது வசீகர உடும்புப் பிடியிலிருந்து அந்த சகோதர, சகோதரிகளை மீட்டெடுப்பது காலத்தின் கட்டாயமாக இருக்கிறது.

மத்ஹபு பிடியிலிருந்து விடுபட்டவர்கள், இந்த தவ்ஹீத் புரோகித மவ்லவியின்(?) பிடியிலிருந்து விடுபட்டால், அவர்கள் அனைவரும் அல்லாஹ்வின் 3:103 கட்டளைப்படி அல்குர்ஆனைப் பற்றிப் பிடித்து ஓரணியில் ஒரே தலைமையில் ஒன்றுபட வாய்ப்புகள் அதிகமாக உண்டு. அதற்கு முட்டுக்கட்டையாக இருப்பவர் இந்த தவ்ஹீத் மவ்லவியே(?). 1986-87-ல் தமிழகத்தில் ஏற்பட்ட அதிவேக முஸ்லிம்களின் மறு மலர்ச்சியை-எழுச்சியைப் பாழ்ப்படுத்தி ஷைத்தானுக்கு துணை போன சண்டாளர்; மாபாதகர், நம்பிக்கை துரோகி, அமானித மோசடியாளர், பிறருக்குச் சொந்தமானதை அபகரிக்க முனைந்தவர் இவர்.

தனது அற்ப உலக ஆதாயத்திற்காக ஒரே நாள் தலைப்பிறை, வருடா வருடம் ஜகாத் போன்ற அதிமுக்கியக் கடமைகளில் முஸ்லிம் களை பிளவுகளிலாக்கி முஸ்லிம்களை வழிகேட்டில் இட்டுச் செல்லும் மாபாதகர். கடந்த 22 ஆண்டுகளாக அவர் பலர் மீது சுமத்திய குற்றச் சாட்டுக்களை, அவதூறுகளை நிரூபிக்க ஓயாது அழைத்துக் கொண்டி ருந்தாலும், அவர் விடாது ஒழிந்தோடிக்கொண்டிருப்பதே அவர் ஜமுக்காளத்தில் விடித்தெடுத்த படு பொய்யர், வழிகேடர் என்பதை நிரூபிக்கும்.

எனவே அவரது முகத்திரையைக் கிழித்து அவரை முஸ்லிம் சமுதா யத்திற்கு மட்டுமல்ல, இதர சமுதாயத்தினருக்கும் அவசியம் அடை யாளம் காட்டுவது காலத்தின் கட்டாயமாகும்.

## புரோகிதர்கள் ஒரே குட்டையில் ஊறிய மட்டைகளே!

முஸ்லிம்கள் ஒரு விஷயத்தை மிகத் தெளிவாகப் புரிந்து கொள்ள வேண்டும். மார்க்கத்தை மதமாக்கி அதையே பிழைப்பாகக் கொண்டிருக்கும் புரோகிதர்கள், அவர்களின் இவ்வுலக அற்ப ஆதாயங்களில் குறியாக இருப்பார்களே அல்லாமல், மக்கள் நேர்வழி பெற வேண்டும்; அல்லாஹ்வின் பொருத்தம் கிடைக்க வேண்டும்; மறுமையில் வெற்றி பெற வேண்டும் என்று ஒருபோதும் எண்ணமாட்டார்கள். அவர்களது வாய்கள் அல்லாஹ், ரசூல், மறுமை, சொர்க்கம், நரகம் என மக்களை ஏமாற்றப் பினாத்துமே அல்லாமல், அவர்களது உள்ளங்கள் சத்தியத்தை நேர்வழியை மறுப்பவையாக இருக்கும். இதை நாம் சொல்லவில்லை; அல்லாஹ்வே சொல்கிறான் கேளுங்கள்.

**அவர்கள் தம் வாய்(மொழி)களைக் கொண்டு(தான்) உங்களைத் திருப்திப் படுத்துகிறார்கள். ஆனால் அவர்களின் உள்ளங்கள்(அதனை) மறுக்கின்றன. அவர்களில் பெரும்பாலோர் பாவிகளாகவே இருக்கின்றனர். அவர்கள் அல்லாஹ்வின் வசனங்களை சொற்ப விலைக்கு விற்கின்றனர். இன்னும் அவனுடைய பாதையிலிருந்து (மக்களை) தடுக்கிறார்கள். நிச்சயமாக அவர்கள் செய்து கொண்டிருப்பவை மிகவும் கெட்டவை.** (துவ்பா 9:8,9)

புரோகித மவ்லவிகள் அவர்கள் தக்லீத், தரீக்கா, தவ்ஹீத், ஜாக், ததஜ, முஜாஹித், அஹ்ல ஹதீஸ், ஸலஃபி, அஹ்லகுர்ஆன், காதியானி, ஷீஆ இப்படி எந்த வகை புரோகித மவ்லவிகளாக இருந்தாலும், அவர்கள் மார்க்கத்தைப் பிழைப்பாக்கி, தொண்டை தொழிலாக்கி, கூலிக்காக மாரடிப்பவர்கள், சம்பளத்திற்காக மார்க்கப் பணி புரிகிறவர்கள் ஒருபோதும் நேர்வழியில் இருக்க முடியாது என்பது அல்குர்ஆன்–அல்லாஹ்வின் இறுதி வழிகாட்டல் நூல் தெள்ளத் தெளிவாக–அப்பட்டமாக–நேரடியாக அடித்துச் சொல்லும் விஷயமாகும்.

எனவே புரோகிதர்கள் அனைவரும் ஒரே குட்டையில் ஊறிய மட்டைகளே. கழுதை விட்டையில் முன் விட்டை, பின் விட்டை என்று எப்படி வேறுபாடு எதுவும் இல்லையோ, அதுபோல் புரோகித மவ்லவிகளில் வித்தியாசம் பாராட்ட முடியாது. அவர்களை நம்பி அவர்கள் பின்னால் செல்கிறவர்கள் கோணல் வழிகளில் சென்று நரகில் விழக் கூடியவர்களே என்பதை ஒவ்வொரு முஸ்லிம் ஆணும், பெண்ணும் சிந்தித்து

விளங்கி, அவர்களின் மாய வசீகர உடும்புப் பிடியிலிருந்து விடுபட்டு அல்குர்ஆனைப் பற்றிப் பிடிக்க முன்வர வேண்டும். இது அல்லாஹ் வின் கட்டளை. (3:103).

குர்ஆன், ஹதீஸ் சொல்லும் கருத்துக்களில் எமது சுய விளக் கத்தைப் புகுத்தாமல் உள்ளது உள்ளபடி எடுத்து வைத்துள்ளோம். இதில் மாற்றுக் கருத்து உடையவர்கள், உலகியல் துறைகளிலுள்ள நடைமுறைகளைச் சொல்லாமல், நடைமுறைச் சாத்தியமில்லை; முஸ்லிம்களிடையே இப்போது இருக்கும் மார்க்க நடைமுறைகளும் இல்லாமல் போய்விடும், இன்னும் இவை போல் மனித அபிப்பிராயங் களை எடுத்து வைக்காமல், மார்க்கத்தை மவ்லவிகள் பிழைப்பாகக் கொள்ளலாம்; மவ்லவிகளை பின்பற்றுவது முஸ்லிம்கள் மீது விதிக்கப் பட்ட கடமை என்பதற்கு குர்ஆனிலிருந்தோ, ஆதாரபூர்வமான ஹதீஸ் களிலிருந்தோ ஆதாரம் எடுத்துத் தந்தால், உடனடியாக அதை ஏற்று எமது நிலையை நாம் மாற்றிக் கொள்ள தயாராக இருக்கிறோம் என்பதை அறிவித்துக் கொள்கிறோம். கூலிக்காக மாரடிக்காமல் மறுமையில் கூலியை அல்லாஹ்விடம் எதிர்பார்த்து, அல்லாஹ் வுக்காகவே மார்க்கப் பணி புரியும் அறிஞர் பெருமக்களை நாம் மிக மிக உயர்வாக மதிக்கிறோம். அவர்களே நபிமார்களின் வாரிசுகள் என்று சொல்வதற்கு முழு உரிமை பெற்றவர்கள்.

## முடிவுரை!

அல்லாஹ்(ஜல்) இந்த உம்மத்-சமுதாயத்திற்கு சூட்டிய பெயர் 'முஸ்லிம்கள்' மட்டுமே. (22:78, 41:33) நபிமார்கள் அனைவரும் தங்களை 'முஸ்லிம்கள்' என்று மட்டுமே சொன்னார்கள். (10:72, 2:131,132,133, 10:84, 12:101) ஈஸா(அலை) அவர்களின் சீடர்கள் தங்களை 'முஸ்லிம்கள்' என்று மட்டுமே சொன்னார்கள். (5:111) மூஸா (அலை) அவர்களை எதிர்த்து தோல்வி கண்ட சூன்யக்காரர்கள் இறுதி யில் தங்களை முஸ்லிம்கள் என்று மட்டுமே சொன்னார்கள். (7:126), நபி(ஸல்) அவர்களும், அவர்களது தோழர்களும் தங்களை 'முஸ்லிம்கள்' என்று மட்டுமே சொன்னார்கள்; அறிமுகப்படுத்தினர். நேர்வழி நடந்தவர்களில் யாரும் தங்களை 'முஸ்லிம்' அல்லாத பெயரிலோ, அல்லது 'முஸ்லிம்கள்' என்ற பெயரோடு, தாங்கள்தான் நேர்வழி நடப்பதாக மற்றவர்களுக்குக் காட்ட பிரிதொரு பெயரையும் (உ.ம். ஜாக், ததஜ) இணைத்துச் சொன்னதாக எவ்வித ஆதாரமும் இல்லை.

அல்குர்ஆனில் 'முஸ்லிம்' என்ற பெயர் சில திரிபுகளில் சுமார் 42 இடங்களில் இடம் பெற்றுள்ளது. ஹதீஸ்களில் எண்ணற்ற இடங்களில் இடம் பெற்றுள்ளது. நபி(ஸல்) அவர்கள் மரணித்து நுபுவத்துடைய 'வஹீ' முற்றுப் பெற்றதன் பின்னர், தாங்கள்தான் நேர்வழியில் இருப்பதாக மக்களுக்குக் காட்டிக் கொள்ள, வழிகேட்டில் சென்றவர்கள் அவர்களாகக் கற்பனை செய்து வைத்துக் கொண்ட பெயர்களில் எதுவுமே குர்ஆனிலோ, ஹதீஸிலோ பெயராக இடம் பெறவில்லை. குர்ஆனிலோ, ஹதீஸிலோ இல்லாதது எதுவுமே மார்க்கம் இல்லை; அது வழிகேடு; தூக்கி எறியப்படவேண்டியது என்று தவ்ஹீத் மவ்லவி(?) பல இடங்களில் கூறித்திரிந்தது பலர் அறிந்த உண்மை. அவரது கூற்றுப்படியே **ஜாக், ததஜ** போன்றவை தூக்கி எறியப்படவேண்டிய வழிகெட்ட பெயர்களே! உண்மையும் அதுவே.

காரணம் இப்பெயர்கள் அல்குர்ஆன் 5:3, 3:19, 85, 22:78, 41:33, 3:102, 103,105, 6:153,159, 30:32, 42:13,14 போன்ற எண்ணற்ற இறைக் கட்டளைகளை நிராகரித்து (குஃப்ர்: 2:39) புறக்கணித்து (25:30) வழிகேட்டிலாகி இவர்களாகக் கற்பனை செய்து வைத்த பெயர்களாகும். இவை போன்ற பிரிவுப் பெயர்களில் செயல்படுவோர் அனைவரும் வழிகேட்டிலாகி தங்களின் இருப்பிடத்தை நரகில் தேடிக் கொள்ளும் பரிதாப நிலைக்கு ஆளாகிறார்கள். இறை உணர்வு(தக்வா) உடையவர்கள் நிச்சயமாக குர்ஆன், ஹதீஸ் மறுத்துக் கூறும் இப்படிப் பட்ட பிரிவுப் பெயர்களை ஒருபோதும் சரி காண மாட்டார்கள். 21:92, 23:52 இறைக் கட்டளைக்கு முரணாக சமுதாயத்தை பிளவுபடுத்தி உலக ஆதாயம் அடைய விரும்புகிறவர்களே **ஜாக், ததஜ** போன்ற வழிகெட்டப் பிரிவுப் பெயர்களைத் தேர்ந்தெடுத்து ஷைத்தானை பின்பற்றிச் செல்ல முடியும்.

'முஸ்லிமீன்' "ஜமாஅத் அல் முஸ்லிமீன்" என்ற அல்லாஹ் பெயர் சூட்டி, நபி(ஸல்) அவர்கள் நடைமுறைப்படுத்திக் காட்டிய ஒரே பெயரில் மட்டும் இருந்து கொண்டு, இவ்வுலகில் தங்களை முஸ்லிம் கள் என்று சொல்பவர்கள், அவர்கள் அனைத்து ஷிர்க், பித்அத்களில் மூழ்கி இருந்தாலும் அவர்களின் இறுதி முடிவை அவர்களைப் படைத்து, உணவளித்து, பரிபாலித்து, கண்காணித்துக் கொண்டிருக்கும் எஜமானன் அல்லாஹ்விடம் விட்டுவிட்டு, இவ்வுலகில் அவர்களையும் முஸ்லிம்களாக ஏற்று அரவணைத்துச் செல்வதன் மூலம், அல்லாஹ் வின் தெளிவான

நேரடியான கட்டளை உம்மத்தன் வாஹிதா – ஒரே சமுதாயத்தை (21:92, 23:52) நிலைநாட்டுபவர்களே நேர்வழி நடக்கும் முஸ்லிம்கள்.

நாளை மறுமையில் அவர்களின் செயல்பாடுகளின் காரணமாக நரகம் புக இருக்கும் முஸ்லிம்களை, இவ்வுலகில் முஸ்லிம்களாக ஏற்று அரவணைத்துச் செல்வதால், அல்லாஹ் மறந்தோ, அல்லது தவறு தலாகவோ அவர்களை சுவர்க்கத்திற்கு அனுப்பி விட மாட்டான். (20:52) இவ்வுலகிலேயே அவர்களுக்கு காஃபிர் ஃபத்வா கொடுத்தோ, அல்லது அவர்களிலிருந்து தங்களைப் பிரித்துக் காட்ட வேண்டும் என்ற அவசியமோ நேர்வழி நடக்கும் முஸ்லிம்களுக்கு இல்லை.

அல்லாஹ்விற்கு மட்டுமே சொந்தமான அந்த அதிகாரத்தை (3:128, 42:21) இப்புரோகிதர்கள் தங்கள் கைகளில் எடுக்கவோ, அல்லாஹ் வுக்கே மார்க்கம் சொல்லிக் கொடுக்கும் (49:16) அவசியமோ இவர் களுக்கு இல்லவே இல்லை.

இந்த அனைத்து இறைக் கட்டளைகளையும் நிராகரித்துவிட்டு, அதே சமயம் நாங்கள்தான் குர்ஆன், ஹதீஸ்படி நடக்கிறோம் என்று பீற்றிக் கொள்கிறார்கள். ஸலஃபி, முஜாஹித், ஜாக், ததஜ போன்ற சமுதாயத்தைப் பிளவுபடுத்தும் பிரிவினைப் பெயர்களில் செயல்படு கிறார்கள். இவர்கள் பெரும் வழிகேட்டிலிருக்கும் பிரிவினர்களே!

நபி(ஸல்) நடைமுறைப்படுத்திய ஒன்றுபட்ட, ஒரே சமுதாயத்தைப் பிளவுபடுத்தும் கொடியவர்களே. இவர்கள் அல்லாஹ்வின் தண்டனை களிலிருந்து நாளை மறுமையில் தப்ப முடியாது.

**நம்பிக்கை கொண்டவர்களே! அல்லாஹ்விற்குக் கட்டுப்படுங் கள். இன்னும் (அவனுடைய) தூதருக்கும், உங்களில் அதிகாரம் உடையவர்களுக்கும் கட்டுப்படுங்கள்.** (அல்குர்ஆன் 4:59)

**காய்ந்த திராட்சையைப் போன்ற தலையைக் கொண்ட அபிசீனிய நாட்டுக்காரர் உங்களுக்கு அமீராக நியமிக்கப்பட்டா லும், நீங்கள் அவருக்கு செவிசாயுங்கள்; கட்டுப்படுங்கள் என்று அல்லாஹ்வின் இறுதித்தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.**

அறிவிப்பவர்: அனஸ்(ரழி), புகாரீ

**உயர்வான அல்லாஹ்வின் நெறி நூலின்படி உங்களை வழி நடத்திச் செல்லும் கருத்த, உடல் ஊனமுற்ற ஓர் அடிமை**

**உங்களுக்கு அமீராக நியமிக்கப்படாலும் அவருக்கு நீங்கள் செவிசாயுங்கள், கட்டுப்படுங்கள் என்று அல்லாஹ்வின் தூதர் (ஸல்) அவர்கள் கூறினார்கள்.** அறிவிப்பவர்:உம்முல் ஹுஸைன்(ரழி),முஸ்லிம்

**"அல்லாஹ்வின் தூதரே! நாங்கள் தீமையில் இருந்தோம். நாங்கள் எந்த நன்மையில் (இஸ்லாம்) இருக்கிறோமோ அந்த நன்மையை அல்லாஹ் கொண்டு வந்தான். இந்த நன்மைக்குப் பிறகு தீமை உண்டா?" என்று நான் கேட்டேன். அதற்கு அவர்கள் ஆம் என்றார்கள். "அந்த தீமைக்குப் பிறகு நன்மை உண்டா?" எனக் கேட்டேன். அதற்கு அவர்கள் ஆம் என்றார்கள். "அந்த நன்மைக்குப் பிறகு தீமை உண்டா? எனக் கேட்டேன். அதற்கு அவர்கள் ஆம் என்றார்கள்." "அது எப்படி இருக்கும்?" என்று நான் வினவினேன். அதற்கு அவர்கள், "எனது நேர்வழியைக் கொண்டு திருந்தாத எனது நடைமுறையைப் பின்பற்றாத தலைவர் கள் தோன்றுவார்கள். அவர்களில் மனித உடல்களையும், ஷைத்தானின் உள்ளங்களையும் கொண்ட மனிதர்கள் ஆட்சி செலுத்துவார்கள்" என்று பதிலளித்தார்கள். "அல்லாஹ்வின் தூதரே! அந்த நிலையை அடைந்துவிட்டால் நான் என்ன செய்ய வேண்டும்?" என்று கேட்டேன். அதற்கு அவர்கள், "அந்த அமீர் உன்னு டைய முதுகில் அடித்துத் தாக்கி, உன் பொருளை பறித்துக் கொண்டாலும் நீ அவருக்கு செவிசாய்த்துக் கட்டுப்படு" என்று கூறினார்கள்.** அறிவிப்பவர்: ஹுதைபா(ரழி), முஸ்லிம்.

**பாவமான காரியத்தை ஏவாதவரை தான் விரும்பியவற்றிலும், விரும்பாதவற்றிலும் அமீருக்கு செவிசாய்த்துக் கட்டுப்படுவது முஸ்லிமான ஒருவர்மீது கடமையாகும். அவர் பாவத்தை ஏவினால் செவிசாய்ப்பதோ கட்டுப் படுவதோ கூடாது.**

அறிவிப்பவர்: அப்துல்லாஹ் பின் அம்ர்(ரழி), புகாரீ, முஸ்லிம்.

**அமீருக்குக் கட்டுப்படுபவர் அல்லாஹ்வுக்குக் கட்டுப்பட்டவராவார் என்பது நபி மொழி.** ஆதாரம்: புகாரீ.

**எங்களது விருப்பிலும் வெறுப்பிலும், எங்களது கஷ்டமான சூழ்நிலையிலும் இலகுவான சூழ்நிலையிலும் எங்கள்மீது பாரபட்சம் காட்டும் நிலையிலும் நங்கள் (அமீருக்கு) செவி சாய்ப்போம்-கட்டுப்படுவோம் என்றும், அல்லாஹ்விடமிருந்து**

**அமைந்திருக்கும் ஆதாரத்தின் அடிப்படையில் தெளிவாகத் தெரியும் இறை நிராகரிப்பைக் காணாதவரை அதிகாரம் உடையவர்களிடம் போட்டி போடமாட்டோம் எனவும் நாங்கள் அல்லாஹ்வின் திருத்தூதர்(ஸல்) அவர்களிடம் உடன்படிக்கை செய்தோம்.** அறிவிப்பவர்: உப்பாதா

**யார் தனது அமீரிடம் எதையேனும் கண்டு வெறுப்படைவா ரானால் அவர் சகித்துக் கொள்வாராக! ஏனெனில் யார் அமீரை விட்டு ஒரு சான் அளவு வெளியேறி விட்டாலும் அவர் அறியாமைக் கால மரணத்தை தழுவுவார் என அல்லாஹ்வின் தூதர்(ஸல்) அவர்கள் கூறினார்கள்.** அறிவிப்பவர்: இப்னு அப்பாஸ்(ரழி) புகாரீ.

பிரிவுகளை ஆதரிப்போர், இந்த குர்ஆன் வசனம், ஹதீஸ்கள் அனைத்தையம், நிராகரித்து வழிகேட்டில் செல்கிறார்கள். இவ்வுலகில் அவர்கள் முஸ்லிம்களாக கணக்கிடப்பட்டாலும், நாளை மறுமையில் பெரும் நஷ்டவாளர்களே!

மேலே கண்டுள்ள இறைவாக்கையும், நபி(ஸல்) அவர்களின் எச்சரிக்கைகளையும் முறையாகப் படித்து உணர்கிறவர்கள்; ''அமீர்'' என்ற தனி மனிதருக்கு முக்கியத்துவம் கொடுத்து இடப்பட்ட உத்தரவு கள் அல்ல. இவை உம்மத்தன் வாஹிதா – ஒன்றுபட்ட ஒரே சமுதாயம் என்ற சமூக அமைப்பில் எந்த நிலையிலும் பிரிவோ பிளவோ ஏற்படக் கூடாது என்ற ஒரே காணத்திற்காகத்தான் என்பதை எளிதாக விளங்க முடியும். இதை “காய்ந்த திராட்சையைப் போன்ற தலையைக் கொண்ட அபிசீனிய நாட்டுக்காரர்”, “கருத்த உடல் ஊனமுற்ற ஓர் அடிமை” என்றெல்லாம் நபி(ஸல்) குறிப்பிட்டுக் கூறியிருப்பதே குன்றிலிட்ட தீபமாக விளக்குகிறது.

ஆனால் புரோகித மவ்லவிகள்(?) இந்த உண்மையை தங்கள் பிள்ளைகளைப் போல் அறிந்தாலும் ஏற்கமாட்டார்கள். எனவே அவர்கள் பின்னால் செல்லும் சகோதர, சகோதரிகளே உணர்ந்து ஓரணியில் ஒன்றுபட முன்வர வேண்டும்.

சத்தியத்தை –நேர்வழியை விளங்கி தவ்பா செய்து மீண்டு குர்ஆன், ஹதீஸை பற்றிப்படித்து, தங்களை முஸ்லிம்கள் என்று மட்டும் சொல்லிக் கொண்டு நபி(ஸல்) நடைமுறைப்படுத்திக் காட்டிய

“ஜமாஅத் அல் முஸ்லிமீன்” என்ற பேரியக்கத்தில் போய் இணை பவர்களே வெற்றியாளர்கள். அவர்களே பெரும் பேறு பெற்றவர்கள்.

அவர்கள் தனி நபரோ, நான்கைந்து பேரோ, நாற்பது ஐம்பது பேரோ, நானூறு ஐநூறு பேரோ, நாலாயிரம் ஐயாயிரம் பேரோ, என்பது அல்லாஹ்வின் பார்வையில்–கணக்கில்லை. இப்றாஹீம்(அலை) தனி நபராக இருக்கும் நிலையில் அவர்களை உம்மத்தன் வாஹிதா முற்றிலும் வழிபடும் சமுதாயம் (16:120) என்றே அல்லாஹ் வர்ணித்துக் கூறுகிறான். பல நபிமார்கள் தன்னந்தனியாக சுவர்க்கம் செல்வார்கள். அவர்கள் ஒவ்வொருவரும் ஒரு சமுதாயம் தான். எண்ணிக்கையைக் கொண்டு அல்லாஹ்விடம் எவ்வித மதிப்பும் இல்லை. அல்லாஹ்வின் கட்டளைகளுக்கு முற்றிலும் கட்டுப்பட்டு நடப்பதையே அல்லாஹ் எதிர் பார்க்கிறான். ஷைத்தானின் தூண்டுதல்களுக்கோ மன இச்சைக்கோ, அடிமைப்படாமல், அல்லாஹ்வின் கட்டளைகளை மனம் ஏற்றுக் கொண்டாலும், மறுத்தாலும் அப்படியே கட்டுப்பட்டு நடப்பவர்கள். தங்களை ‘முஸ்லிம்கள்’ என்றும் “ஜமாஅத் அல் முஸ்லிமீனில்” இருக்கிறோம் என்றும் மட்டுமே சொல்வார்கள். அவர்களே வெற்றியாளர்கள். (பார்க்க 33:70,71)

**பி.ஜே. தவ்ஹீத் மவ்லவி(?)யே கொடுக்கும் ஆதாரம்!**

நாம் தவ்ஹீத் மவ்லவி(?)யை இவ்வளவு கடுமையாக விமர்சித்திருப்பதைப் பார்த்து அவரது ஆதரவாளர்கள் நம்மீது அளவு கடந்து கோபப்படலாம். இப்படி விமர்சிப்பதற்கும் அந்த தவ்ஹீத் மவ்லவி(?)யே சரி கண்டு ஒப்புதல் வாக்குமூலம் அளித்துள்ளார். அது வருமாறு: உணர்வு ஏப்ரல் 18-24, 2008 (உரிமை 12 குரல் 33) பக்கம் 10 பதில்கள் பகுதி.

குறை கூறுவதைப் பொருத்தவரை ஆதாரமின்றி அவதூறுகளை அள்ளி வீசுவது ஒரு வகை. தீயவர்களைப் பற்றி மக்களுக்கு எச்சரிப்பதற்காக ஆதாரங்க ளுடன் விமர்சிப்பது மற்றொரு வகை. நம்முடையது இந்த இரண்டாம் வகையைச் சேர்ந்தது. இது வரவேற்கத்தக்கது. சமுதாயத் திற்கு நன்மைப் பயக்கக் கூடியது.

தவ்ஹீது மவ்லவி(?) எண்ணற்றவர்கள்மீது அப்பட்டமான அவதூறுகளை வாரி இறைத்ததற்கு எம்மிடம் அடுக்கடுக்கான ஆதாரங்கள் இருக்கின்றன. நடுநிலையாளர்கள் ஒருசிலர் கூடி

விசாரணைக்கு ஏற்பாடு செய்தால், தவ்ஹீத் மவ்லவி(?) பரப்பியது அப்பட்டமான கடைந்தெ டுத்த அவதூறுகள்தான் என்பதை அவர் கூறி இருப்பதுபோல் உரிய ஆதாரங்களுடன் எம்மால் நிரூபிக்க முடியும். நாம் தயாராகவே இருக்கிறோம். அவர்தான் ஓடி ஒழிந்து கொண்டிருக் கிறார் கடந்த 20 வருடங்களாக.

இவர் தமுமுகவில் இருந்தபோது குர்ஆன், ஹதீஸுக்கு முரண்பட்ட செயல்பாடுகளை எல்லாம் குர்ஆன், ஹதீஸுக்கு சுய விளக்கங் கள் கொடுத்து, அவரின் வழிகேட்டுப் போதனை களை நேர்வழி என்று அவரை நம்பியுள்ளவர்களை ஏமாற்றி வழிகெடுத்துக் கொண்டிருந் தார். அப்போது தமுமுகவை இழுத்து நாம் கடுமையாகச் சாடும் கட்டாயத்தில் இருந்தோம். ஆனால் தவ்ஹீத் மவ்லவி(?) தமுமுகவை விட்டு வெளியேறிய பின்னர், அவர்கள் தங்களின் செயல்பாடுகளை குர்ஆன், ஹதீஸ் என்று கூறி மக்களை வழிகெடுக்க முற்பட்டதில்லை. எனவே நாமும் இன்று அவர்களை கடுமையாக விமர்சிக்கும் கட்டாயத்தில் இல்லை. மேலும் தமுமுகவினர் தங்களின் மறுமையை நட்டப்படுத்திக் கொண்டு, மக்களின் இவ்வுலகை மட்டுமே வேண்டு மானால் நட்டப்படுத்தலாம். ஆனால் தவ்ஹீத் மவ்லவி(?)யோ தனது மறுமையை நட்டப்படுத்திக் கொண்டு, மக்களின் இம்மை, மறுமை இரண்டையும் ஒருங்கே நட்டப்படுத்தும் கொடிய வராக இருக்கிறார்.

தமுமுகவை விட்டு வெளியேறி ததஜவை கற்பனை செய்துள்ள மவ்லவி(?) புரோகிதர், தன்னுடைய வழிகேட்டுச் செயல்பாடுகளை தவ்ஹீத், தவ்ஹீத் எழுச்சி, தவ்ஹீத் ஜமாஅத், தவ்ஹீத் மவ்லவி(?) என தனது ஆதரவாளர்களை சூன்யப் பேச்சால் மயங்கி வழிகெடுத்துக் கொண் டிருப்பதால், அவர் தமுமுகவை விமர்சிப்பது எந்த அளவு முக்கியம், மக்களை விழிப்ப டையச் செய்வது, சமுதாயத்திற்கு நன்மை பயக்கக் கூடியது என்று கூறி இருக்கிறாரோ, அதைவிட ஆயிரம் மடங்கு, ஏன்? இலட்சம் மடங்கு அதி அத்தியாவசியமானது, தவ்ஹீத் என்று சொல் லியே மக்களை நரகிற்கு இட்டுச் செல்லும் இவரையும், இவரது ததஜவையும் மிகக் கடுமையாக விமர்சிப்பது என்பதை தவ்ஹீத் மவ்லவி(?)யின் ஆதரவாளர்கள் புரிந்து கொண்டால், குர்ஆன், ஹதீஸை பற்றிப் பிடித்தால் வெற்றியடைவார்கள். அல்லாஹ் உதவி செய்வானாக! அவனியமே இறைஞ்சுகிறோம்.